श्रीमल्लोकाचार्यविरचित

# तत्त्वविवेकः

பிள்ளைலோகாசார்யர் அருளிச்செய்த

# தத்த்வவிவேகம்



பிள்ளைலோகாசார்யர் – ஸ்ரீரங்கம்

இதுநாள்வரை ஓலைச்சுவடிகளிலேயே இருந்த நூலை முதன்முறையாகப் புத்தகவடிவில், தமிழ் மொழிபெயர்ப்புடன் வெளியிடுபவர்


மேதாவிமணி, கம்பீரவாக்வர்ஷீ

**Dr. M.A. வேங்கடகிருஷ்ணன்**

M.A., M.Phill., Ph.D., D.Litt.

பேராசிரியர், வைணவத்துறை, சென்னைப் பல்கலைக் கழகம்

श्रीमल्लोकाचार्यविरचित

# तत्त्वविवेकः

பிள்ளைலோகாசார்யர் அருளிச்செய்த

# தத்த்வவிவேகம்

இதுநாள்வரை ஓலைச்சுவடிகளிலேயே இருந்த நூலை முதன்முறையாகப் புத்தகவடிவில், தமிழ் மொழிபெயர்ப்புடன் வெளியிடுபவர்

மேதாவிமணி, கம்பீரவாக்வர்ஷீ

## Dr. M.A. வேங்கடகிருஷ்ணன்

M.A., M.Phill., Ph.D., D.Litt.

பேராசிரியர், வைணவத்துறை, சென்னைப் பல்கலைக் கழகம்

Golden Thaleevar Pillai lokachariar Grantham
Released by Maaran's Dog Toronto, Canada

பிள்ளைலோகாசார்யர் எண்ணூறாம் அவதாரவருஷ வெளியீடு

பார்த்திவ ஐப்பசித் திருவோணம்

8-11-2005

முதல் பதிப்பு : நவம்பர் 2005
உரிமை : ஆசிரியருக்கு

விலை ரூ. 100

கிடைக்குமிடம்:
**கீதாசார்யன்**
7, தெற்கு மாட வீதி,
திருவல்லிக்கேணி,
சென்னை 600 005
போன்: 2844 1284

அச்சிட்டோர்:
**ஆர். என். ஆர். பிரிண்டர்ஸ்**
19 தாண்டவராயன் தெரு,
திருவல்லிக்கேணி,
சென்னை 600 006
தொலைபேசி: 2844 1856

ஸ்ரீமத்வேதமார்க்க ப்ரதிஷ்டாபனாசார்ய உபயவேதாந்தாசார்ய

ஸ்ரீமத் பரமஹம்ஸபரிவ்ராஜகாசார்ய

## ஸ்ரீ வானமாமலை கலியன் ராமானுஜ ஜீயர்ஸ்வாமி

## அநுக்ரஹித்த மங்களாஶாஸன ஸ்ரீமுகம்

ஸ்ரீ ஸ்வாமி எம்பெருமானார் தர்சனத்தைச் சார்ந்த சான்றோர் பெருமக்களே, ஸ்ரீவைஷ்ணவ ஸம்ப்ரதாயாநுயாயிகளான பெருந்தகையாரே, விசிஷ்ய தென்றாசார்ய ஸம்ப்ரதாய நிஷ்டர்களான மஹநீயர்களே, இதோவொரு அத்புதமான அரிய பெரிய நூலினைப் பற்றி சில வார்த்தைகள் கூறிக் கொள்ளும் பெரும் பேறு எமக்கு கிட்டியுள்ளமையை நினைந்து தொஞ்சம் நிறைகின்றது; பேருவகை எய்துகின்றது.



"தத்த்வவிவேகம்" என்ற திருப்பெயருடன் விளங்காநிற்கும் இந்நூலினைப் பற்றி இதுவரை எம்மில் ஒருவரும் அறிந்திலர். இப்படி ஒரு நூலுளது என்றே நம்மில் தொண்ணூற்றொன்பது விழுக்காடு அறிஞர்கள் கேள்விப்பட்டே இருக்க மாட்டார்கள். எஞ்சிய ஒரு விழுக்காடு வித்வன் மணிகள் ஒருவேளை எப்பொழுதாவது கர்ண பரம்பரையாக இதுவோர் அரிய நூலுள்ளது எனச் செவிமடுத்திருக்கலாம். அன்னார் இதனை லுப்த க்ரந்த வரிசையில் ஒன்றெனவே தான் எண்ணியுமிருப்பர்கள். நமது பூர்வாசார்ய பரம்பரையாம் இரத்தின மாலையில் அதிவிலக்ஷணமான ப்ரபாவத்துடன் ஜொலிக்கும், அஷ்டாதச ரஹஸ்ய க்ரந்தங்களை உலகிற்கு அளித்து ஈடிணையற்ற மஹோபகாரம் செய்திட்ட பிள்ளைலோகாசார்ய மஹாசார்யர்

# முன்னுரை

திருமாமகள் கேள்வனான எம்பெருமானாலே மயர்வற மதிநலமருளப் பெற்றவரான நம்மாழ்வார் அருளிச்செய்த திருவாய்மொழியின் பொருளை மிக மிக விரிவாக விளக்கி நம்பிள்ளை திருவாய்மலர்ந்தருளிய ஈடுமுப்பத்தாறாயிரப்படி வியாக்கியானத்தைப் பட்டோலை கொண்டவர் வடக்குத் திருவீதிப்பிள்ளையாவார். அவருக்கு ஆசார்யரான நம்பிள்ளையின் திருவருளால் குரோதன வருடம் (கி.பி.1205) ஐப்பசி மாதம் திருவோண நட்சத்திரத்தில் ஒரு திருக்குமாரர் அவதரித்தார். வடக்குத் திருவீதிப்பிள்ளை, தம்முடைய ஆசார்யரான நம்பிள்ளையின் திருநாமத்தையே தம்முடைய திருக்குமாரருக்குச் சூட்ட விரும்பினார். நம்பிள்ளையின் குணநலன்களைப் போற்றிக் கந்தாடைத் தோழப்பர் என்பவர் நம்பிள்ளைக்குச் சூட்டிய 'லோகாசார்யர்' என்ற திருநாமத்தையே தம் குமாரருக்குச் சூட்டினார். (நம்பிள்ளைக்கும், வடக்குத்திருவீதிப் பிள்ளையின் குமாரருக்கும் வேறுபாடு தெரிவதற்காக, வடக்குத்திருவீதிப் பிள்ளையின் குமாரர், பிள்ளை லோகாசார்யர் என்று வழங்கப்பட்டார்.)

பெருமாள்கோயில் என்று வழங்கப்பெறும் காஞ்சீபுரத்திலே எழுந்தருளியிருக்கின்ற பேரருளாளப்பெருமாள், மணற்பாக்கத்து நம்பி என்றொருவர்க்கு விசேஷகடாக்ஷத்தைச் செய்தருளி, அவருடைய கனவில் தோன்றிச் சில முக்கியமான அர்த்தங்களை அருளிச்செய்து, "நீர் போய் இரண்டுபுறமும் காவேரி சூழ்ந்துள்ள திருவரங்கத்தில் வசியும்; அங்கே நாம் இன்னமும் இவ்வர்த்தவிசேஷங்களை விளக்கிச் சொல்லுகிறோம்" என்று நியமித்தருளினார். அவரும் திருவரங்கத்திற்கு வந்து ஏகாந்தமானதொரு கோயிலிலே இருக்கின்றபோது, பிள்ளைலோகாசார்யரும் தம்முடைய சிஷ்யர்களுடன் தற்செயலாக அக்கோயிலுக்கே எழுந்தருளி சில அர்த்தங்களை உபதேசித்துக் கொண்டிருந்தார். ஏற்கனவே பேரருளாளப் பெருமாள் உபதேசித்த அர்த்தங்களே அவையாயிருக்கக் கண்ட மணற்பாக்கத்து நம்பி, மிகவும் ஆச்சரியப்பட்டு, "அவரோ நீர்?" (பேரருளாளப் பெருமாள்தானோ நீர்?) என்று கேட்டு, பிள்ளை லோகாசார்யர் திருவடிகளிலே விழுந்து வணங்கி நடந்தவைகளைக் கூறினார். (இதனால் காஞ்சீ தேவப்பெருமாளே பிள்ளைலோகாசார்யராக அவதரித்தார் என்பது ஸம்ப்ரதாயமாகும்.) பிள்ளைலோகாசார்யரும் மிகவும் மகிழ்ச்சியுடன் அவ்வர்த்த விசேஷங்களை மணற்பாக்கத்து உபதேசித்துக் கொண்டிருந்தார். அந்நாளில், இவ்வர்த்தங்களை ஒரு நூலாக எழுதி



வைக்கவேண்டும் என்று நம்பியின் கனவில் பெரியபெருமாள் நியமிக்க, நம்பியும் அதைப் பிள்ளைலோகாசார்யரிடம் தெரிவிக்க, அப்படியே பிள்ளைலோகாசார்யரும் ஸ்ரீவசனபூஷணம் எனும் நூலை எழுதியருளினார். மேலும் பல நூல்களையும் பிள்ளைலோகாசார்யர் அருளிச்செய்தார்.

பிள்ளைலோகாசார்யர் நூற்றுக்கும் மேற்பட்ட வயதை அடைந்திருந்த காலத்தில் (கி.பி. 1323ல்) துருஷ்கருடைய படையெடுப்பால் திருவரங்கத்திற்குப் பேராபத்து ஏற்பட்டது. துருஷ்கர்கள் கோயில்களில் உள்ள விக்ரகங்களை உடைப்பவர்கள் என்ற அச்சத்தினால் அனைவரும் செய்வதறியாமல் திகைத்தபோது, பிள்ளைலோகாசார்யர், மூலவரான பெரியபெருமாள் ஸன்னிதி முன்பே கல்திரை ஒன்று கட்டி மறைத்துவிட்டு, உத்ஸவர் நம்பெருமாளை ஒரு பல்லக்கில் எழுந்தருளப்பண்ணிக் கொண்டு பரிவாரங்களுடன் திருவரங்கத்தை விட்டுப் புறப்பட்டார். பல ஊர்களைக் கடந்து ஜ்யோதிஷ்குடி என்ற ஊரில் பெருமாளுடன் எழுந்தருளிருந்தபோது, வயது முதிர்ச்சி காரணமாகத் திருமேனி மிகவும் தளர்ந்து, 'ஆனிதன்னில் வளர்பக்கத்தாறிரண்டாம் நாள்' (ஆனி மாதம் சுக்ல பக்ஷம் த்வாதசி அன்று) திருநாட்டுக்கு எழுந்தருளினார். (இச்செய்திகள் யதீந்த்ரப்ரவண ப்ரபாவம் எனும்நூலில் குறிப்பிடப்பெற்றுள்ளன.)

## பிள்ளைலோகாசார்யர் அருளிச்செய்த நூல்கள்

பிள்ளைலோகாசார்யர் அஷ்டாதசரஹஸ்யங்களை (பதினெட்டு ரகசிய நூல்களை) அருளிச்செய்துள்ளார் என்பது உலகறிந்த செய்தியாகும். மணவாளமாமுனிகள் காலத்திற்குப் பிற்பட்டவரான பிள்ளைலோகார்யஜீயர் அருளிச்செய்த 'யதீந்த்ரப்ரவணப்ரபாவம்' என்ற நூலின் ஒரு (தெலுங்குப்) பதிப்பில் அவர் அருளிச்செய்த நூல்கள் பற்றிப் பின்வருமாறு குறிப்பிடப் பெற்றுள்ளது:

"பிள்ளைலோகாசார்யர் தம் பரம க்ருபையாலே பெண்ணும் பேதையும் அதிகரித்து உஜ்ஜீவிக்கலாம்படி (1) தனிப்ரணவம், (2)தனித்வயம், (3)தனிசரமம், (4) பரந்தபடி, (5) ச்ரிய:பதிப்படி, (6) யாத்ருச்சிகப்படி, (7) முமுக்ஷூப்படி, (8) ஸம்ஸாரஸாம்ராஜ்யம், (9) ஸாரஸங்க்ரஹம், (10) தத்வத்ரயம், (11) தத்வசேகரம், (12) ப்ரபந்நபரித்ராணம், (13) ப்ரமேயசேகரம், (14) அர்ச்சிராதி, (15) அர்த்தபஞ்சகம், (16) நவவிதஸம்பந்தம், (17) நவரத்நமாலை, (18) ஸ்ரீவசநபூஷணம் முதலான அனேக ரஹஸ்யக்ரந்தங்கள் இட்டருளி ....."

இவ்வாறு யதீந்த்ரப்ரவணப்ரபாவத்தில் பதினெட்டு நூல்களைக் குறிப்பிட்டு, "**முதலான அநேக ரஹஸ்க்ரந்தங்கள் இட்டருளி**" என்றும் குறிப்பிடப் பெற்றுள்ளமையால், இவைதவிர மேலும் சில நூல்களையும் பிள்ளைலோகாசார்யர் அருளிச்செய்துள்ளார் என்று கருத இடமேற்படுகிறது. ( மேலே குறிப்பிடப்பெற்றுள்ள நூல்கள் அனைத்தும் தற்போது அச்சிலுள்ள அனைத்து அஷ்டாதசரஹஸ்யப் பதிப்புகளிலும் இடம் பெற்றுள்ளன.) ஆயினும் இவை தவிர, பிள்ளைலோகாசார்யர் அருளிச்செய்த நூல்கள் வேறு எவையும் இதுவரை கிடைக்கப்பெறவில்லை.

பிள்ளைலோகாசார்யர் அருளிச்செய்த தத்வத்ரயத்தில் 182ம் சூர்ணையின் வியாக்கியானத்தில் மணவாளமாமுனிகள், தத்வத்ரய விவரணமாகப் பிள்ளைலோகாசார்யர் மேலும் இரண்டுபடிகளை (நூல்களை) அருளியிருப்பதாகக் காட்டி, அவற்றிலிருந்து சில வரிகளை மேற்கோள்களாகவும் எடுத்துக் காட்டியுள்ளார். ஆனால் அந்த இரண்டு நூல்கள் தற்போது கிடைப்பதில்லை.

பெரிய திருமுடி அடைவு எனும் நூலில் பிள்ளைலோகாசார்யர் அருளிச்செய்த நூல்களைப் பற்றிக் குறிப்பிடும்போது, (1–3) தத்வத்ரய விவரணமாக மூன்று ப்ரபந்தங்கள், (4) ச்ரிய:பதிப்படி, (5) யாத்ருச்சிகப்படி, (6) பரந்தபடி, (7) முமுக்ஷுப்படி, (8) தனிதிருமந்த்ரம், (9) தனித்வயம், (10) தனிசரமச்லோகம், (11) அர்த்தபஞ்சகம், (12) அர்ச்சிராதி, (13) ப்ரமேயசேகரம், (14) தத்வசேகரம், (15) ஸ்ரீவசநபூஷணம், (16) ஸாரஸங்க்ரஹம், (17) நாலு வார்த்தை, (18) ப்ரபந்நபரித்ராணம் ஆகிய நூல்களை அருளிச்செய்துள்ளார் என்று குறிப்பிடப்பெற்றுள்ளது. யதீந்த்ரப்ரவண ப்ரபாவத்தில் குறிப்பிடப் பெற்ற பதினெட்டு நூல்களில் ஸம்ஸாரஸாம்ராஜ்யம், நவவித ஸம்பந்தம், நவரத்நமாலை, ஆகிய மூன்று நூல்களுக்கு பதிலாக, பெரிய திருமுடி அடைவில் தத்வத்ரய விவரணமாக (தத்வத்ரயத்தைத் தவிர மேலும்) இரு நூல்கள், நாலுவார்த்தை ஆகிய மூன்று நூல்கள் குறிப்பிடப் பெற்றுள்ளன. அவற்றில் இப்போது கிடைத்துள்ள 'நாலுவார்த்தை' தவிர மற்ற இரு நூல்களும் கிடைப்பதில்லை. இவை தவிர தனிச்லோகமும், கத்ய வ்யாக்யானமும் பிள்ளைலோகாசார்யர் அருளியிருப்பதாக மணவாள மாமுனிகள் தமது ரஹஸ்யவ்யாக்யானங்களில் குறிப்பிட்டுள்ளார். அவையும் தற்போது கிடைப்பதில்லை. இவ்வாறு பிள்ளைலோகாசார்யர் அருளியுள்ள நூல்களில் ஒரு சில நமக்குக் கிடைக்காமலேபோயுள்ளன. அப்படி இதுவரை கிடைக்காமலிருந்த நூல்களில் தத்வவிவேகமும் ஒன்றாகும்.



### தத்வவிவேகம்

திருநாங்கூர் பிரதிவாதிபயங்கரம் அண்ணங்கராசார்யர் ஸ்வாமி திருமாளிகையின் வெளியீடாகப் 'பட்டோலை' என்றொரு நூல் வெளிடப்பெற்றுள்ளது. அத்திருமாளிகையில் வெகுகாலமாக ஓலைச்சுவடியில் இருந்த அந்த நூலை முதன்முதலாகப் புத்தகமாக வெளியிடுவதாக அந்நூலில் தெரிவிக்கப்பட்டுள்ளது. ஆசார்யர்கள் பலருடைய திருநாமங்களும், அவர்கள் அருளிச்செய்த நூல்களின் பெயர்களும் இடம்பெற்றுள்ள அந்நூலில் பிள்ளைலோகாசார்யர் அருளிச்செய்த நூல்களாக (தற்போது அச்சிலுள்ள) அஷ்டாதச ரஹஸ்ய நூல்களோடு கூட 'ஸம்ஸ்க்ருத தத்வவிவேகம்' என்றொரு நூலும் குறிப்பிடப்பெற்றுள்ளது. அந்நூல் தற்போது கிடைப்பதில்லை என்றும் தேடிப் பார்க்க வேண்டும் என்றும் ஒரு குறிப்பும் தரப்பெற்றுள்ளது. தற்செயலாக இதைக் கண்ட அடியேன் ஓலைச்சுவடி நூலகங்களில் தேடிப்பார்த்தபோது, சென்னை அடையாறு நூலகத்தில் தத்வவிவேகம் என்ற பெயரில் ஒரு ஓலைச் சுவடி இருப்பதைப் பார்த்தேன். மூன்று அதிகாரங்களைக் கொண்டதாக வடமொழியில், கிரந்த எழுத்தில் அச்சுவடி எழுதப்பெற்றிருந்தது. சுவடியின் இறுதியில் "ஸூநுநா க்ருஷ்ணமிச்ராணாம் லோகாசார்யேண தீமதா, ப்ரமாணோபஸ்க்ருத: தத்வவிவேக: ஸம்ப்ரதர்சித:" (க்ருஷ்ணமிச்ரரின் திருக்குமாரரான லோகாசார்யரால், பிரமாணங்களை அடியொற்றித் தத்வவிவேகமானது வெளியிடப்படுகிறது) என்ற ச்லோகம் எழுதப் பெற்றிருந்தது. எனவே பிள்ளைலோகாசார்யர் அருளிச்செய்ததாகப் பட்டோலை என்ற நூலில் குறிப்பிடப் பெற்றிருந்த ஸம்ஸ்க்ருத தத்வவிவேகம் என்ற நூல் இதுவே என்று உறுதி செய்துகொண்டேன். இந்த ஓலைச்சுவடியின் பிரதிகள் வேறு நூலகங்கள் எவற்றிலேனும் இருக்கின்றதா என்று தேடிப் பார்த்தேன். சென்னை அரசாங்க கீழ்த்திசைச் சுவடி நூலகத்தில் இதே நூலின் இரண்டு சுவடிகள் இருந்தன. அவை இரண்டும் தெலுங்கு எழுத்தில் எழுதப்பெற்றவை. ஒரு சுவடியில் நூல் முழுவதும் இருந்தது. மற்றொரு சுவடியில் நூல் பாதிவரை மட்டுமே இருந்தது. மேலக்கோட்டை ஸம்ஸ்க்ருத ஆராய்ச்சிக் கழகத்திலும் இந்நூலின் ஒரு சுவடி (கிரந்த எழுத்தில் எழுதப்பெற்றது) இருந்தது. (அங்கு இந்நூலின் பெயர் ஸ்வரூபதர்ப்பணம் என்று குறிப்பிடப் பெற்றிருந்தது.) முதலில் சென்னை அரசாங்கக் கீழ்த்திசைச் சுவடி நூலகத்தில் முழுவதுமாக இருந்த ஓலைச்சுவடியைப் பிரதியெடுத்துக் கொண்டேன்.

பிறகு ஒவ்வொன்றாக மற்ற சுவடிகளுடன் ஒப்பிட்டு, பாடபேதங்கள் அனைத்தையும் குறித்துக் கொண்டேன். ஓலைச் சுவடிகளை எழுதுவோருடைய கவனக் குறைவால் ஒரு சுவடியில் இருந்த சில வரிகள் மற்ற சுவடியில் விட்டுப் போயிருந்தன. ஒருசில வரிகள் அதிகமாகவும் இருந்தன. அவை அனைத்தையும் ஒப்பு நோக்கி, முழுமையான நூலாகப் படியெடுத்து வைத்துக் கொண்டேன்.

சித், அசித், ஈச்வரன் ஆகிய மூன்று தத்துவங்களின் தன்மைகளை விளக்கும் இந்நூல் மிகவும் கம்பீரமான நடையில் அமைந்த ஸம்ஸ்க்ருதத்தில் அமைந்துள்ளது. ஆளவந்தார் அருளிச்செய்த 'ஸித்தித்ரயம்' எனும் நூலைப் போலவே இந்நூல் சித், அசித், ஈச்வரன் ஆகிய தத்வங்களைப் பிரமாணங்களுடன் விளக்கும்விதமாக அமைந்துள்ளது. பிள்ளைலோகாசார்யர் மணிப்ரவாள நடையில் அருளிச்செய்துள்ள தத்வத்ரயத்தில் உள்ளதுபோலவே முதலில் சித் ப்ரகரணம், பிறகு அசித் ப்ரகரணம், பிறகு ஈச்வரப்ரகரணம் ஆகிய மூன்று பிரகரணங்கள் உள்ளன. தேகம், இந்திரியங்கள், மனஸ், ப்ராணன் முதலியவை ஆத்மா அல்லன் என்று நிரூபித்து, ஆத்மா இருபத்தைந்தாம் தத்வம், அஜடன், ஆநந்தஸ்வரூபன், நித்யன், அணுபரிமாணன், அவ்யக்தன், நிரவயவன், ஜ்ஞாத்தை உடையவன், கர்த்ருத்வம் உடையவன், ஜ்ஞானமாத்ரன், நியமிக்கப்படுபவன், தரிக்கப்படுபவன் சேஷபூதன் என்றிப்படி வரிசையாக தத்வத்ரயத்திலுள்ளதுபோலவே விஷயங்கள் அமைந்துள்ளன. இதேபோல் தான் அசித் ப்ரகரணமும் ஈச்வரப்ரகரணமும் கூட அமைந்துள்ளன.

## தத்வத்ரயமும் தத்வவிவேகமும்

மணிப்ரவாள நடையில் அமைந்துள்ள தத்வத்ரயத்தில் இடம்பெற்றுள்ள வாக்கியங்கள், பல இடங்களில் சிறிதும் மாற்றமில்லாமல் அப்படியே வடமொழியில் தத்வவிவேகத்தில் இடம் பெற்றுள்ளன. உதாரணமாக, தத்வத்ரயத்தில் அசித்ப்ரகரணத்தில் உள்ள சூர்ணிகை:

> மிச்ரஸத்வமாவது, ஸத்வரஜஸ்ஸுக்கள் மூன்றோடும் கூடி, பத்த சேதநருடைய ஜ்ஞாநாநந்தங்களுக்குத் திரோதாயகமாய், விபரீதஜ்ஞாநஜநகமாய், நித்யமாய், ஈச்வரனுக்குக் க்ரீடாபரிகரமாய், ப்ரதேசபேதத்தாலும், காலபேதத்தாலும் ஸத்ருசமாயும் விஸத்ருசமாயும் இருக்கும் விகாரங்களை உண்டாக்கக் கடவதாய், ப்ரக்ருதி அவித்யை மாயை என்கிற பேர்களை உடைத்தாயிருக்கும் அசித்விசேஷம்.



இந்த சூர்ணிகை அப்படியே தத்வ விவேகத்தில் வடமொழியில்:

> மிச்ரஸத்வம் து ஸத்வரஜஸ்தமோ குணகம், பத்த சேதந ஜ்ஞாநாநந்த திரோதாயகம், விபரீத ஜ்ஞாநஜநகம், நித்யம், பகவல்லீலோபகரணம், தேசகாலபேதேந பஹுவித விஷமவிகாரஜநகம், ப்ருக்தி அவித்யா மாயா சப்தபர்யாயம் வேதிதவ்யம்.

என்றுள்ளது. தத்வத்ரயத்தில் ஈச்வரப்ரகரணத்தில் உள்ள சூர்ணிகை:

> இவற்றில் வாத்ஸல்யாதிகளுக்கு விஷயம் அநுகூலர்; சௌர்யாதிகளுக்கு விஷயம் ப்ரதிகூலர்; இவற்றுக் காரணமான ஜ்ஞானசக்த்யாதிகளுக்கு எல்லோரும் விஷயம்.

இந்த சூர்ணிகை தத்வவிவேகத்தில் அப்படியே வடமொழியில்

> ஏதேஷு குணேஷு வாத்ஸல்யாதீநாம் விஷயா: ஆச்ரிதா:, சௌர்யாதீநாம் து ஆச்ரிதவிரோதிந:, ஏதத்காரணபூத ஜ்ஞாநசக்த்யாதி ஷாட்குண்யஸ்ய விஷயா: ஸர்வே.

என்று அப்படியே வடமொழியில் அமைந்துள்ளது. இதுமட்டுமல்ல; தத்வத்ரயத்தில் 193ம் சூர்ணையில், நித்யோதித சாந்தோதிதபேதம் முதலிய பலவற்றைக் குறிப்பிட்டு, அவைகள் "**துரவதரங்களுமாய் குஹ்யதமங்களுமாய் இருக்கையாலே சொல்லுகிறிலோம்**" என்று அருளிச் செய்யப்பட்டுள்ளது. தத்வவிவேகத்திலும் அதேபோன்று நித்யோதித சாந்தோதித பேதங்கள் முதலிய அதேவிஷயங்களைக் குறிப்பிட்டு, "**க்ரந்த விஸ்தரபயாத் குஹ்யதமத்வாத் ச ந அப்யதாயிஷத**" என்றே குறிப்பிடப்பட்டுள்ளது. ஆக, தத்வத்ரயத்தில் விரிவுக்கஞ்சி விளக்கப்படவில்லை என்று கூறப்பட்ட அதே விஷயங்கள் தத்வவிவேகத்திலும் விரிவுக்கஞ்சி விளக்கப்படவில்லை என்றே குறிப்பிடப்பெற்றுள்ளது.

இவற்றைக் கொண்டு பார்க்கும்போது, தத்வத்ரயத்தின் ஸம்ஸ்க்ருத மொழிபெயர்ப்பு நூல்தான் தத்வவிவேகமோ என்ற ஐயம் எழலாம். ஆனால், தத்வத்ரயத்தை வடமொழியாக்கம் செய்திருந்தால், ஏற்கனவே வடமொழியிலேயே அமைந்துள்ள 'தத்வத்ரயம்' என்ற பெயரை விட்டுவிட்டுப் புதிதாகத் 'தத்வவிவேகம்' என்ற பெயரிடவேண்டிய அவசியம் இல்லை. எனவே தத்வத்ரயத்தைக் காட்டிலும் இது வேறு ஒரு புதிய நூல் என்பதை அதன் பெயரே உறுதி செய்கிறது.

மேலும், முழுவதும் தத்வத்ரயத்தை மொழிபெயர்த்தது போல் அல்லாமல், தத்வத்ரயத்தில் இல்லாத பல விஷயங்கள் இந்நூலில் இடம் பெற்றுள்ளன. தத்வத்ரயத்தில் சித், அசித், ஈச்வரன் ஆகிய தத்வங்களின் தன்மைகள் மட்டுமே கூறப் பெற்றுள்ளன. அதற்குரிய பிரமாணங்கள் அந்நூலில் கூறப்பெறவில்லை. (அந்நூலுக்கு மணவாள மாமுனிகள் அருளிச்செய்துள்ள வியாக்கியானத்தில்தான் பிரமாணங்கள் எடுத்துக் காட்டப் பெற்றுள்ளன.) ஆனால் தத்வவிவேகத்தில் அத்தத்துவங்களின் தன்மைகளோடு, அவற்றிற்குரிய பிரமாணங்கள் அனைத்தும் எடுத்துக் காட்டப் பெறுகின்றன. (பெரும்பாலும் தத்வவிவேக நூலிலுள்ள பிரமாணங்கள் மணவாளமாமுனிகளாலும் தத்வத்ரய வியாக்கியானத்தில் எடுத்துக் காட்டப் பெற்றுள்ளன.) உபநிஷத்துக்கள், ஸ்ரீராமாயணம், ஸ்ரீமந்மஹாபாரதம், ஸ்ரீவிஷ்ணுபுராணம் முதலிய புராணங்கள், விஷ்வக்ஸேந ஸம்ஹிதை முதலிய ஸம்ஹிதைகள், மற்றும் பல வடமொழி நூல்களிலிருந்து ஏராளமான மேற்கோள்கள் காட்டப்பெற்றுள்ளன. ஸ்ரீராமானுஜர், ஸ்ரீபராசரபட்டர் ஆகியோருடைய நூல்களிலிருந்தும் சில மேற்கோள்கள் எடுத்தாளப்பெற்றுள்ளன. இந்தப் பிரமாணங்கள் அனைத்தும் வடமொழியிலேயே அமைந்துள்ளபடியால், சித் அசித் ஈச்வரன் ஆகிய மூன்று தத்துவங்களையும் வடமொழியிலேயே விளக்க வேண்டும் என்று கருதி இந்நூல் வடமொழியிலேயே அருளிச்செய்யப்பெற்றிருக்கலாம்.

மேலும் தத்வத்ரயநூலில் இடம்பெறாத விஷயங்கள் பலவும் தத்வவிவேகத்தில் இடம் பெற்றுள்ளன. தத்வவிவேகத்தில் ஆத்மபேதம் உண்டு என்று நிரூபிக்கும் இடத்தில் (பக்கம் 24) முற்பிறவிகளில் நடந்த நிகழ்ச்சிகளைப் பற்றிய நினைவின்மை குறித்து விசாரம் செய்யப் படுகிறது. இவ்விஷயம் தத்வத்ரயத்தில் இல்லை. அசித்ஸ்வரூபப்ரகரணத்தில் (பக்கம் 51, 52ல்) ஸம்ஹாரத்தைப் பற்றிய விஷயங்கள் விரிவாகக் கூறப்பெறுகின்றன. அவை தத்வத்ரயத்தில் கூறப்படவில்லை. "சேஷத்வயுக்தம் ஜ்ஞாத்ருத்வம்" என்று (பக்கம் 52ல்) ஜீவாத்மாவின் லக்ஷணமும், "அசித: சேஷத்வயுக்தம் ஜ்ஞேயதைக ஸ்வபாவத்வம் லக்ஷணம்" என்று (பக்கம் 53ல்) அசித்தின் லக்ஷணமும், "ஈச்வரஸ்ய து ஜ்ஞாத்ருத்வயுக்தம் நியந்த்ருதைக ஸ்வபாவத்வம் லக்ஷணம்" என்று (பக்கம் 87)ல் ஈச்வரலக்ஷணமும் தத்வவிவேகத்தில் கூறப்பட்டுள்ளது. தத்வத்ரயத்தில் ஜீவாத்ம லக்ஷணம் மட்டும் கூறப்பட்டுள்ளதேயன்றி, மற்ற இரண்டு தத்வங்களின் லக்ஷணங்கள் தத்வவிவேகததில் உள்ளதுபோல் சுருக்கமாகக் கூறப்படவில்லை.



ஈச்வரஸ்ரூபப்ரகரணத்தில் (பக்கம் 56ல்) பகவான் நாராயணனைத் தவிர மற்ற தேவதைகள் பரம்பொருளல்லர் என்று நிலைநாட்டப்படுகிறது. இந்த விஷயம் தத்வத்ரயத்தில் எடுத்துக்கொள்ளப் படவில்லை. எம்பெருமானுடைய ஆறுகுணங்கள் பற்றிய விளக்கங்கள் தத்வவிவேகத்தில் (பக்கம் 62) உள்ளன. ஆனால் அவை தத்வத்ரயத்தில் கூறப்படவில்லை. பஞ்சோபநிஷத்துக்கள் பற்றிய விளக்கங்கள் தத்வவிவேகத்தில் (பக்கம் 74) உள்ளன. ஆனால் அவை தத்வத்ரயத்தில் இல்லை. இவ்வாறு தத்வத்ரயத்தில் இடம்பெறாத பல விஷயங்கள் தத்வவிவேகத்தில் இடம்பெற்றுள்ளன. திக்கு, வாயு, ஆகாசம், தேஜஸ், காலம், முதலியவற்றைப் பற்றிய விசாரங்கள் தத்வத்ரயத்தில் இடம்பெற்றுள்ளன. (சூ. 124–134). இந்த விசாரங்கள் தத்வவிவேகத்தில் இடம்பெறவில்லை. ஸ்ருஷ்டியும் ஸம்ஹாரமும் லீலை என்று தத்வத்ரயத்தில் குறிப்பிடப்பெற்றுள்ளது. இவ்விஷயமும் தத்வவிவேகத்தில் இடம்பெவில்லை. ஆக, தத்வத்ரயத்தில் இடம்பெறாத பல விஷயங்கள் தத்வவிவேகத்தில் இடம்பெற்றும், தத்வத்ரயத்தில் இடம்பெற்ற பல விஷயங்கள் தத்வ விவேத்தில் இடம்பெறாமலும் உள்ளபடியால், தத்வத்ரயத்தை வடமொழியில் மொழிபெயர்த்த நூலே தத்வவிவேகம் என்று கூறுவது தவறான கருத்தாகும். மேலும் தத்வவிவேகத்தின் இறுதியில் உள்ள சுலோகமும், ஒவ்வொரு அதிகாரத்தின் இறுதியிலும் 'ஸ்ரீமல்லோகாசார்ய விரசிதே தத்வவிவேகே' என்று என்றுள்ள வரிகளும் இந்நூலை அருளிச்செய்தவர் பிள்ளைலோகாசார்யர் என்றே உறுதி செய்கின்றன. இந்நூலின் தொடக்கத்தில் உள்ள இறுதித் தனியனில், "ராமானுஜதாயாகாரம் ஸ்ரீக்ருஷ்ணமச்ரயே" என்றுள்ளது. ஸ்ரீக்ருஷ்ணர் என்பது வடக்குத் திருவீதிப்பிள்ளையின் இயற்பெயராகும். பிள்ளைலோகாசார்யர் தமது ஆசார்யரும் திருத்தகப்பனாருமான வடக்குத் திருவீதிப்பிள்ளையை இந்த ச்லோகத்தில் துதித்துள்ளார் என்பதும் பொருத்தமாக உள்ளது. இந்நூலின் இறுதியில் உள்ள ச்லோகத்தில் "ப்ரமாணோபஸ்க்ருத: தத்வவிவேக: ஸம்ப்ரதர்சித:" (பிரமாணங்களைப் பின்பற்றி தத்வவிவேகம் வெளியிடப்படுகிறது) என்றுள்ளதைக் கொண்டு பார்க்கும்போது, மணிப்ரவாள நடையில் தத்வத்ரயம் எனும் நூலை அருளிச்செய்த பிள்ளைலோகாசார்யர், அதற்குரிய ச்ருதி, ஸ்ம்ருதி, இதிஹாஸ, புராண, ஆகம பிரமாணங்களை எடுத்துக் காட்ட வேண்டும் என்பதற்காக, தாமே வடமொழியில் இந்த நூலை அருளிச்செய்திருக்க வேண்டும்.

## நூல் வெளிவராததற்குக் காரணம்

இப்படிப் பிள்ளைலோகாசார்யர் ஸம்ஸ்க்ருதத்தில் அருளிச்செய்த ஒரே நூலான தத்வவிவேகம் என்ற இந்த நூலானது இதுவரை கிடைக்காமல், வெளிப்படாமல் போனதற்குக் காரணம் என்ன என்பது தெரியவில்லை. பிள்ளைலோகாசார்யர் தமது இறுதிக் காலத்தில் இந்நூலை எழுதியிருக்கலாம். அதைப் பிரகாசப்படுத்துவதற்குள் துருஷ்கர்களுடைய உபத்ரவங்கள் ஏற்பட்டு, பிள்ளைலோகாசார்யர், நம்பெருமாளுடன் திருவரங்கத்தைவிட்டு வெளியேறும் நிலை ஏற்பட்டிருக்கலாம். அதற்குள் திருவரங்கத்தில் ஏற்பட்ட கலவரத்தினால், திருவரங்கத்திலிருந்த இந்நூலின் சுவடிகள் எங்கெங்கோ மறைந்து வெளிப்படாமலே போயிருக்கலாம். "நாவினுள் நின்று மலரும் ஞானக் கலைகளுக்கெல்லாம் ஆவியும் ஆக்கையும்தானே அழிப்போடு அளிப்பவன் தானே" என்று நம்மாழ்வார் அருளிசெய்துள்ளார். இங்கு ஈடுமுப்பத்தாறாயிரப்படியில் நம்பிள்ளை, "மந்தமதிகளான சேதநருடைய ப்ரதிபத்தி தோஷங்களாலும், லேகக தோஷங்களாலும் பாடபேதங்களாலும் இவை உருமாயுமளவிலே ஸம்ஹரித்தும், அபேக்ஷித ஸமயத்திலே ஸ்ருஷ்டித்தும் போருகிறான் தானே" என்று வியாக்கியானம் செய்துள்ளார். அபேக்ஷித ஸமயமான பிள்ளைலோகாசார்யருடைய எண்ணூறாம் திருநக்ஷத்திரத்திலேயே இந்நூலை வெளிப்படுத்தவேண்டும் என்று எம்பெருமானுடைய திருவுள்ளம் அமைந்திருந்தது போலும்.

## நன்றி நன்றி நன்றி

பொருளல்லாத என்னைப் பொருளாக்கி அடிமை கொண்டு, நூல்களைப் பதிப்பிக்கும் விஷயத்தில் அடியேனுக்கு ஆர்வத்தையும் அறிவையும் உண்டாக்கி,இந்நூல் வெளிவருவதற்கு முதற்காரணமாயமைந்த ஸ்ரீ உ.வே. மஹாவித்வான் ப்ரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசார்ய ஸ்வாமி திருவடிகளில் அடியேன் என்றென்றும் தலைமடுத்து நிற்கிறேன்.

இந்நூலை ஓலைச்சுவடிகளிலிருந்து படியெடுப்பதற்கு மிக மிக உதவியவர் சென்னைப் பல்கலைக்கழக வைணவத்துறையின் முன்னாள் தலைமைப் பேராசிரியர் டாக்டர் எம். நரசிம்மாசாரி அவர்கள். அவர் இன்றேல், இந்த நூலை அடியேன் பிரதி எடுத்திருக்கவே முடியாது. தெலுங்கிலும், வடமொழியிலும் ஒப்பற்ற புலமை உடைய டாக்டர் நரஸிம்மாசாரி அவர்கள், தெலுங்கு எழுத்திலும் கிரந்த எழுத்திலும்



அமைந்திருந்த ஓலைச் சுவடிகளைப் பிரதி எடுப்பதற்கும், ஒப்பிட்டுப் பார்ப்பதற்கு தம்முடைய சிரமத்தையும் நேரத்தையும் பார்க்காமல் உதவி செய்ததற்கும், இதிலுள்ள பிழைகள் பலவற்றைத் திருத்திக் கொடுத்ததற்கும் எவ்வளவு நன்றி கூறினாலும் போதாது. அவருக்கு அடியேனுடைய க்ருதஜ்ஞதையைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

ஸ்ரீ உ.வே. திருமலை அனந்தாண்பிள்ளை க்ருஷ்ணமாசார்ய ஸ்வாமி, தேவநாகர எழுத்தில் எழுதியிருந்த இந்நூலின் கையேட்டுப் பிரதியினை முழுவதுமாகக் கடாக்ஷித்து, ஆங்காங்கே செய்ய வேண்டிய திருத்தங்களையும் செய்து கொடுத்து, இது நிச்சயம் பூர்வாசார்யர் அருளிச்செய்த நூலேயாதலால் அவசியம் புத்தகமாக வெளியிடவேண்டும் என்று நியமித்தார். பல பிரமாணங்களுக்குரிய ஆகரங்களையும் குறித்துக் கொடுத்தார். அவருடைய மங்களாசாஸனம் ஒன்றே இந்நூல் வெளிவருவதற்குக் காரணமாயமைந்தது. அவருடைய திருவடிகளில் தலையல்லால் கைம்மாறிலேன் என்று க்ருதஜ்ஞதையைத் தெரிவிக்கிறேன்.

நூல்முழுவதும் வடமொழியிலேயே அமைந்திருப்பதால், வடமொழி அறிந்தவர்கள் மட்டுமே இந்நூலை அநுபவிக்கமுடியும். எனவே இதை தமிழ் மொழி பெயர்ப்புடன் வெளியிட்டால்தான் அனைவருக்கும் பயன்படும் என்று எண்ணி, அதற்கு வேளை வராமலே சில ஆண்டுகளைக் கழித்துவிட்டேன். அப்போது ஸ்ரீ உ.வே. திருப்புல்லாணி ஸுந்தரராஜ ஐயங்கார் ஸ்வாமி, தாம் இவ்விஷயத்தில் உதவி செய்வதாகக் கூறி, தமிழில் மொழிபெயர்ப்பதில் பேருதவி புரிந்துள்ளார். சரியான பாடங்கள் பலவற்றையும் குறித்துக் கொடுத்தார். அவருக்கும் தலையல்லால் கைம்மாறிலேன்.

ஓலைச்சுவடிகளைப் பிரதி எடுப்பதற்கும், ஒப்பிட்டுப் பார்ப்பதற்கும் அனுமதி அளித்த சென்னை அரசாங்க கீழ்த்திசைச் சுவடி நூலகம், சென்னை அடையாறு நூலகம், மேலக்கோட்டை ஸம்ஸ்க்ருத ஆராய்ச்சிக் கழகம் ஆகியவற்றின் இயக்குநர்களுக்கு எனது நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இதுநாள்வரை நூலகங்களில் ஓலைச்சுவடிகளிலேயே இருந்ததும், முதன்முறையாகப் புத்தகமாக அச்சிட்டு வெளியிடப்படுகின்றதுமான இந் நூலை அனைவரும் வாங்கிப்படித்துப் பயனடைவார்கள் என்று நம்புகிறேன்.

ஸ்ரீவைஷ்ணவபாததூளி

வேங்கடகிருஷ்ணன்

# பொருளடக்கம்



श्रीमल्लोकाचार्यविरचित

# तत्त्वविवेक:

பிள்ளைலோகாசார்யர் அருளிச்செய்த

# தத்த்வவிவேகம்

## இந்நூல் உள்ள ஓலைச் சுவடிகள்

**T 1 - Madras Government Oriental Manuscript Library M D.5254**

**T 2 - Madras Government Oriental Manuscript Library M T. 6038(m)**

**G 1 - Academy of Sanskrit Research, Melkote. 979A**

**G 2 - Adyar Library and Research Institute, Chennai D X 255 (71441)**

### श्रीमल्लोकाचार्यविरचित

# तत्त्वविवेकः

[1]लोकाचार्याय गुरवे कृष्णपादस्य सूनवे।
संसारभोगिसन्दष्टजीवजीवातवे नमः॥[1]

रामानुजाङ्घ्रिरजसा[2] तेजितस्वान्तदर्पणे।
प्रतिबिम्बतु याथार्थ्यमात्मानात्मतदात्मनाम् ॥

[3]रामानुजदयालब्धगुणरत्नविभूषिताः ।
स्वरूपदर्पणं स्वच्छं वीक्षन्तां सात्त्विका मुहुः ॥

औदार्यकरुणाक्षान्तिज्ञानवैराग्यवारिधिम्।
रामानुजदयाकारं श्रीकृष्णगुरुमाश्रये ॥[3]

---

In the begining G1 has the following lines:
श्रीमते रामानुजाय नमः। श्रीमते रम्यजामातृ मुनये नमः।
श्रीमद्वेलापुरी सौम्यकेशवाय नमः। श्री रामाख्य महागुरवे नमः।
वेदान्तविषये स्वरूपदर्पणाय निरन्तरं मङ्गलमातनोतु॥
श्रीशैलेश...
श्रीबालवल्लि(धन्वि?)कुलवारिधिपूर्णचन्द्रं श्रीरामसूरिपदपङ्कज मत्तभृङ्गम्।
कल्प....मन्त्रवरमात्मगुणाभिरामं श्रीरामदेशिकमहं शरणं भजामि ॥
वाधूलश्रीनिवासाचार्यचरणौ संश्रयेमहि।
यत्स्मृतिः सर्वसिद्धीनां अन्तरायनिवारिणी ॥
(The last verse is found in T2 also)

1. T1 alone has this verse
2. T1 रामानुजार्याङ्घ्रिरजः
3. T1 omits this and the following verse.

### ஸ்ரீமல்லோகாசார்யர் அருளிச்செய்த

# தத்த்வ விவேகம்

லோகாசாரியர் என்ற திருநாமத்தை உடையவரும், க்ருஷ்ணன் என்ற திருநாமமுடைய வடக்குத் திருவீதிப் பிள்ளையின் திருக்குமாரரும், ஸம்ஸாரமாகிற பாம்பினால் கடியுண்டவர்களாய் அதனால் பகவானாகிற ப்ராணனை இழந்தவர்களான ஜீவாத்மாக்களுக்கு அதை வழங்குபவருமான குருவை வணங்குகிறேன்.

எம்பெருமானாரின் திருவடிப் பொடியினால் துலக்கப்பட்ட தங்களுடைய மனமாகிற கண்ணாடியில் ஆத்மாவாகிற சித்து, அநாத்மாவாகிற அசித்து, ததாத்மாவாகிற (அவர்களுக்கு ஆத்மாவாகிற) ஈப்வரன் என்கிற இவர்களைப் பற்றின உண்மையானது ப்ரதிபிம்பம் போல் தோற்றட்டும்.

உடையவரின் அருளால் பெறப்பட்ட குண ரத்நங்களால் அலங்கரிக்கப்பட்ட ஸாத்விகர்கள் நிர்மலமாகவுள்ள சிதசிதீப்வர ஸ்வரூபமாகிற கண்ணாடியை எப்பொழுதும் பார்க்கட்டும்.

ஔதார்யம், கருணை, பொறுமை, ஜ்ஞாநம், வைராக்யம் என்கிற குணங்களுக்குக் கடலாய், எம்பெருமானாரின் க்ருபையே உருவு கொண்டு வந்தாற்போல் இருப்பவராய் உள்ள ஸ்ரீக்ருஷ்ணராகிற குருவை (வடக்குத் திருவீதிப் பிள்ளையை)ப் பற்றுகிறேன்.

श्रीमल्लोकाचार्यविरचित



# तत्त्वविवेकः

[1]लोकाचार्याय गुरवे कृष्णपादस्य सूनवे।
संसारभोगिसन्दष्टजीवजीवातवे नमः॥[1]

रामानुजाङ्घ्रिरजसा[2] तेजितस्वान्तदर्पणे।
प्रतिबिम्बतु याथार्थ्यमात्मानात्मतदात्मनाम्॥

[3]रामानुजदयालब्धगुणरत्नविभूषिताः।
स्वरूपदर्पणं स्वच्छं वीक्षन्तां सात्त्विका मुहुः॥

औदार्यकरुणाक्षान्तिज्ञानवैराग्यवारिधिम्।
रामानुजदयाकारं श्रीकृष्णगुरुमाश्रये॥[3]

---

In the begining G1 has the following lines:
श्रीमते रामानुजाय नमः। श्रीमते रम्यजामातृ मुनये नमः।
श्रीमद्वेलापुरी सौम्यकेशवाय नमः। श्री रामाख्य महागुरवे नमः।
वेदान्तविषये स्वरूपदर्पणाय निरन्तरं मङ्गलमातनोतु॥
श्रीशैलेश...
श्रीबालवल्लि(धन्वि?)कुलवारिधिपूर्णचन्द्रं श्रीरामसूरिपदपङ्कज मत्तभृङ्गम्।
कल्प....मन्त्रवरमात्मगुणाभिरामं श्रीरामदेशिकमहं शरणं भजामि॥
वाधूलश्रीनिवासाचार्यचरणौ संश्रयेमहि।
यत्स्मृतिः सर्वसिद्धीनां अन्तरायनिवारिणी॥
(The last verse is found in T2 also)

1. T1 alone has this verse
2. T1 रामानुजार्याङ्घ्रिरजः
3. T1 omits this and the following verse.

ஸ்ரீமல்லோகாசார்யர் அருளிச்செய்த

# தத்த்வ விவேகம்

லோகாசாரியர் என்ற திருநாமத்தை உடையவரும், க்ருஷ்ணன் என்ற திருநாமமுடைய வடக்குத் திருவீதிப் பிள்ளையின் திருக்குமாரரும், ஸம்ஸாரமாகிற பாம்பினால் கடியுண்டவர்களாய் அதனால் பகவானாகிற ப்ராணனை இழந்தவர்களான ஜீவாத்மாக்களுக்கு அதை வழங்குபவருமான குருவை வணங்குகிறேன்.

எம்பெருமானாரின் திருவடிப் பொடியினால் துலக்கப்பட்ட தங்களுடைய மனமாகிற கண்ணாடியில் ஆத்மாவாகிற சித்து, அநாத்மாவாகிற அசித்து, ததாத்மாவாகிற (அவர்களுக்கு ஆத்மாவாகிற) ஈஶ்வரன் என்கிற இவர்களைப் பற்றின உண்மையானது ப்ரதிபிம்பம் போல் தோற்றட்டும்.

உடையவரின் அருளால் பெறப்பட்ட குண ரத்நங்களால் அலங்கரிக்கப்பட்ட ஸாத்விகர்கள் நிர்மலமாகவுள்ள சிதசிதீஶ்வர ஸ்வரூபமாகிற கண்ணாடியை எப்பொழுதும் பார்க்கட்டும்.

ஔதார்யம், கருணை, பொறுமை, ஜ்ஞாநம், வைராக்யம் என்கிற குணங்களுக்குக் கடலாய், எம்பெருமானாரின் க்ருபையே உருவு கொண்டு வந்தாற்போல் இருப்பவராய் உள்ள ஸ்ரீக்ருஷ்ணராகிற குருவை (வடக்குத் திருவீதிப் பிள்ளையை)ப் பற்றுகிறேன்.

# आत्मस्वरूपशोधनाधिकारः

## प्रथमः

[1]श्रियःपतेः अखिलचेतनाचेतनपदार्थ–सार्थ[2]–सकलविध–शासितुः परमात्मनः परमबन्धोः[3] परावरनिखिल–जगज्जन्म[4]–जीवन–लयैक–लीलस्य, भगवतो नारायणस्य, अनन्यार्हशेषभूतेन नित्य–अमल–सुखावबोध–स्वरूप–स्वभावेन, सर्वप्रकार तत्पारतन्त्र्य–युक्तेन तच्चरणारविन्द–नित्यकिङ्क्रियारसिकेन[5] तन्मुख–कमल[6]–विकासानुभवसम्भूत[7]–निरतिशयानन्द–सिन्धु–कल्लोल–डोलाविहरण–लीला–निरन्तरोचितेनापि, त्रिगुणात्मक[8]–अनादिमायातिरोहित–स्वप्रकाशतया समधिगत–अयथायथ[9]ज्ञानेन तद्धेतुक–विरुद्धधर्म[10]वर्तिना तन्निबन्धन–ब्रह्मादि–स्तम्बपर्यन्त–सर्वविधशरीर–पञ्जरप्रवेश–निरन्तर–अनुभूयमान–निरवधिकदुःख–सागर–निमग्नेन[11] [12]तद्दुःखविलोकन [13]सम्भवन्निर्हेतुक–

---

1. G2 Starts here
2. G1 T1 omits सार्थ
3. T1 omits परमबन्धोः
4. G1, T2 अखिलजगज्जनि G2 अखिलजगज्जीवन
5. G1,T2 कैङ्कर्यसञ्जात G2 किङ्करतारसिकेन
6. G1 omits कमल
7. G1,G2, T2 सम्भावित
8. G1,G2, T2 गुणत्रयात्मक
9. G1, T2 अयथार्थ G2 अयथा
10. G1, G2 कर्म
11. G2 मग्नेन
12. G1 omits तत्
13. G1 सम्भवेन T2 सम्भव



# ஆத்மஸ்வரூபஶோதநாதிகாரம்

## [முதல் அதிகாரம்]

ஶ்ரிய:பதியாய், சேதநாசேதந பதார்த்தங்களாகிற யாவற்றுக்கும் ப்ரயோஜநமுடைய ஸகலவிதமான நியமநத்தையும் பண்ணும் பரமாத்மாவாய், பரமபந்துவாய், உயர்ந்ததாயும் தாழ்ந்ததாயுமுள்ள எல்லா உலகினுடையவும் உற்பத்தி, வாழ்ச்சி, அழிவு, ஆகியவற்றைச் செய்வதையே விளையாட்டாகக் கொண்டவன் பகவான் நாராயணன். அவனுக்குத் தவிர வேறு ஒருவருக்கு ஆட்படுவதற்குத் தகுதி இல்லாதபடி ஆட்பட்டவனாய், நித்யமாயும் குற்றமற்றதாயுமுள்ள ஜ்ஞாநாநந்த ஸ்வரூபத்தையும் ஸ்வபாவத்தையும் உடையவனாய், எல்லா ப்ரகாரத்தாலும் அந்த எம்பெருமானைக் குறித்த பாரதந்த்ர்யத்தை உடையவனாய், அவனுடைய திருவடித்தாமரைகளில் நித்ய கைங்கர்யத்தை ரஸிப்பவனாய், அவனுடைய முகத்தாமரை மலர்வதால் உண்டான எல்லையற்ற மகிழ்ச்சியாகிற கடலின் பெரிய அலையில் ஊஞ்சலாடுதலாகிற விளையாட்டுக்கு நிரந்தரமாக ஏற்றவனாக இருக்கிறான் சேதனன். ஆயினும் ஸத்வம், ரஜஸ், தமஸ் என்ற முக்குணங்களையுடைய அநாதிமாயையால் தன்னுடைய ப்ரகாஶம் மறைக்கப்பட்டவனாய்க் கொண்டு அதனால் ஏற்பட்ட அஜ்ஞாநம், அதன் காரணமாக தர்மம் அல்லாதவற்றைச் செய்தல் என்பவை அவனுக்கு வருகின்றன. அதனால் ப்ரஹ்மா தொடங்கிப் புல் ஈறாகவுள்ள எல்லாவித உடல்களாகிற கூண்டுகளில் நுழைகிறான் [அகப்பட்டுக் கொள்கிறான்.] அவற்றில் நிரந்தரமாக அநுபவிக்கப்படும் எல்லையற்ற துன்பக்கடலில் மூழ்குகிறான். இப்படி அவன்படும் துன்பத்தைப் பார்ப்பதால் பகவானுக்கு அவனிடம் நிர்ஹேதுக க்ருபை ஏற்படுகிறது. அந்த க்ருபையினால் தூண்டப்பட்டு

कृपाप्रेरित[1]–भगवदवलोकनामृत–जननसमय–अभिषिक्तेन, तन्निमित्त–निगमबाह्य–कुदृष्टिमत–वितान–वैमुख्य–विभूषितेन[2], नित्य[3]निरवद्यवेदजातसञ्जातविश्वासेन, [4]तत्पूर्वभाग–अवगतनश्यत्पुरुषार्थतत्साधनविधुरेण, ब्रह्मभाग–अवगम्यमान–परमपुरुषार्थ–तत्साधनप्रणय–सङ्क्रान्त[5]–चेतसा चेतनेन, सांसारिक–सकलदुःखनिरसनपूर्वक–परमपुरुषार्थलाभाय तत्त्वत्रयं समवगन्तव्यम्[6]॥ ननु–

"तमेवं विद्वानमृत इह भवति", (तै.आ.पु. 3–13–17)

"तमेव विदित्वा अतिमृत्युमेति" (श्वे.उ. 3–8)

इत्यादिभिः भगवत्तत्त्व[7]ज्ञानस्यैकस्यैव मोक्षसाधनत्वं श्रूयते। किमर्थं तत्वान्तरज्ञानमिति चेत् उच्यते[8] – कारणत्वादिविशिष्ट[9]–भगवत्स्वरूपस्य[10] कार्यत्वादि–विशिष्ट–[11]चिदचिद्विलक्षणतया ज्ञातव्यत्वेन,

"भोक्ता भोग्यं प्रेरितारं च मत्वा
जुष्टस्ततस्तेन अमृतत्वमेति", (श्वे.उ. 1–12)

"पृथगात्मानं प्रेरितारञ्च मत्वा" (श्वे.उ. 1–6)

---

1. G1 पूरित
2. T1 भूषितेन
3. G2 alone reads नित्य
4. G1,G2, T2 omit तत्
5. G1 सञ्जात T2 संश्रान्त
6. G1 सम्यगधिगन्तव्यम्
   T2 सम्यगवगन्तव्यम्
7. G1, T2 omits तत्त्व
8. G2 only has उच्यते
9. G2 adds स्य
10. G1 विभवस्वरूपस्य
11. G1, G2 T2 चेतनाचेतन





உண்டான பகவத் கடாக்ஷ அமுதத்தால் இந்த ஜீவாத்மா பிறக்கும் காலத்தில் நனைக்கப்படுகிறான். அதன் காரணமாக வேதத்தை ப்ரமாணமாக ஒப்புக் கொள்ளாதவர்கள், வேதத்துக்குத் தவறான பொருளைக் கருத்தில் கொண்டிருப்பவர்கள் ஆகியவர்களின் மதங்களில் உதாஸீனத்தன்மை கொண்டவனாகிறான். நித்யமாய்க் குற்றமற்றதாயுள்ள வேதங்களில் நம்பிக்கையை அடைகிறான். அந்த வேதத்தின் பூர்வ பாகத்தால் அறியப்படும் புருஷார்த்தம், அதனுடைய ஸாதநம் ஆகியவற்றைக் கைவிட்டவனாய், உத்தரபாகமான ப்ரஹ்ம பாகத்தால் அறியப்படும் பரமபுருஷார்த்தம், அதன் ஸாதநம் ஆகியவற்றில் அன்போடு கூடிய மனத்தையுடையவனாக ஆகிறான். உலகவாழ்வின் எல்லாத் துன்பங்களும் நீங்கப் பெற்று, பரமபுருஷார்த்தத்தைப் பெறுவதற்காக அந்த சேதனனால் தத்த்வத்ரயமும் [சித்து, அசித்து, ஈஶ்வரன் என்ற மூன்று வஸ்துக்களும்] நன்றாக அறியப்படவேணும். நநு [ஆனால்],

'அந்த பகவானை இப்படியறிந்து கொண்ட ஜ்ஞாநி இவ்வுலகில் முக்தனுக்குத் ஸமமானவனாக ஆகிறான்' [தை.ஆ.புரு. 3–13–17]

'அவனை [அந்தப் பரமபுருஷனை] அறிந்தே ஸம்ஸாரத்தைத் தாண்டுகிறான்' [ஶ்வே.உப. 3–8]

முதலிய ஶ்ருதி வாக்யங்களில் பகவானை அறிவது ஒன்று மட்டுமே மோக்ஷத்துக்கு ஸாதநம் என்று ஓதப்படுகிறது; அப்படியிருக்கும்போது எதற்காக மற்ற தத்த்வங்களைப் பற்றி அறிந்துகொள்ள வேண்டும்? எனில், கூறுகிறோம்: காரணத்வம் [காரணமாக இருக்கும் தன்மை], தாரகத்வம் [தாங்கும் தன்மை], நியந்த்ருத்வம் [நியமிக்கும் தன்மை] முதலிய ஸ்வபாவங்களுடன் கூடிய பகவத் ஸ்வரூபமானது, கார்யத்வம் [கார்யமாக இருக்கும் தன்மை], தார்யத்வம் [தாங்கப்படும் தன்மை], நியாம்யத்வம் [நியமிக்கப்படும் தன்மை] முதலிய ஸ்வபாவங்களுடன் கூடிய சித்து, அசித்து என்கிற இரண்டைக் காட்டிலும் வேறுபட்டது என்று அறிந்து கொள்ளப்பட வேணும் என்று ஶ்ருதிகள் நியமிக்கின்றன.

'அனுபவிப்பவனான சேதனனையும், அனுபவிக்கப் படுமதான அசேதனத்தையும், இந்த இரண்டையும் ஆள்பவனான ஈஶ்வரனையும் அறிந்து அந்த அறிவினால் அந்த ஈஶ்வரனை மகிழ்வித்து அதனால் உண்டான அவனுடைய க்ருபையால் மோக்ஷத்தை அடைகிறான்' [ஶ்வே. உப. 1–12]

'நியமிக்கப்படுமவனான ஜீவாத்மாவையும் நியமிப்பவனான பரமாத்மாவையும் அறிந்து' [ஶ்வே.1–6]

इति [1]श्रुतिविहितत्वात् [2]तदर्थं तत्वान्तरज्ञानस्यापि[2] अवश्यापेक्षणीयत्वम् इति[3]। तानि च तत्त्वानि[4] चिदचिदीश्वरसंज्ञकानि। तत्र चैतन्याधारत्वेन आत्मा चिच्छब्देन उच्यते। स च देहेन्द्रियादिविलक्षणः।

ननु देहः आत्मेति चेत् न।[5] देहस्तावत् अवयवसमुदायो वा, अवयवी वा। अवयवसमुदाय इति चेत् न।[6] तेषां[7] अवयवानां [8]"ममायं हस्तपादादिकः"[8] इति ममत्वविषयत्ववत्[9] "अहं हस्तपादादिकः"[10] इति अहम्बुद्धिविषयत्वादर्शनात्। तत्र[11] एकावयवस्य आत्मत्वाङ्गीकारे तद्विच्छित्तौ अवयवान्तराणां[12] अनात्मत्वेन अहंव्यवहार[13]विच्छेद-प्रसङ्गात् तददर्शनाच्च[14]। तेषां एकैकस्य आत्मत्व अभ्युपगमे पुरुषान्तरदुःखस्य पुरुषान्तरेण[15] अप्राप्तिवत्[16], पादादि-कण्ठ-क्षतात् अहं दुःखी इतिवत् अन्यया[17], जिह्वया वचनव्यवहारस्य अनुपपद्यमानत्वाच्च न तस्य आत्मत्वम्।

1. G2 omits श्रुति
2. G1 तदर्थज्ञानस्य T1 तत्वान्तरज्ञानस्य
3. G2 alone reads इति
4. G1, G2, T2 omit च तत्त्वानि
5. G2 alone reads न
6. G2 alone reads न
7. T1 omits तेषां
8. T1 ममेदं हस्तपादादिकं
9. G1 ममत्वविशिष्टत्ववत् (?) T1 omits ममत्व
10. T1 हस्तपादादिकम्
11. G1 अत्र
12. G1, T2 तद्विच्छिन्नानां अवयवानां
13. G1 adds दर्शन
14. T2 प्रसङ्गादर्शनाच्च
15. G1, T2 omits पुरुषान्तर
16. G1 T1 T2 अप्राप्यत्वात्
17. G2 अन्यथा







என்று அந்த ஶ்ருதிகள் கூறுவதால் மற்ற தத்த்வங்களை [வஸ்துக்களை]ப் பற்றின அறிவு அவஶ்யம் தேவைப்படுகிறது. அந்த தத்த்வங்கள் சித்து, அசித்து, ஈஶ்வரன் என்ற பெயர்களை உடையவையாம். அவற்றுள் ஆத்மா, சைதந்யத்துக்கு [ஜ்ஞாநத்துக்கு] ஆதாரமாக இருப்பதால் சித் என்ற சொல்லால் சொல்லப்படுகிறான். அவனோவென்னில் தேஹம், இந்த்ரியம் முதலியவற்றைக் காட்டிலும் வேறுபட்டவனாக இருக்கிறான்.

நநு, [ஆனால்] தேஹமே ஆத்மாவாகட்டுமே – என்று நாஸ்திகர் ஆக்ஷேபித்தால் – அந்த ஆக்ஷேபம் தவறு. தேஹமானது அவயவங்களின் ஸமுதாயமா [கூட்டமா]? அல்லது அவயவங்களிலிருந்து உண்டான அவயவி என்ற தனிப்பொருளா? அவயவங்களின் ஸமுதாயம் தேஹம், அதுவே ஆத்மா என்ற முதல் பக்ஷத்தை [கருத்தை] ஆராய்வோம். அந்த அவயவங்களைக் குறித்து "இந்தக் கை கால் முதலிய உறுப்புக்கள் என்னுடையவை" என்ற புத்தி ஏற்படுகிறது. அதைப் போல் 'நான் கைகால் முதலிய உறுப்புக்கள்' என்ற புத்தி ஏற்படவில்லை. [கை கால் முதலிய உறுப்புக்களில் அஹம் [நான்] என்ற புத்தி ஏற்படுவதில்லை என்று பொருள்.] அவற்றில் கை, கால் முதலிய ஏதோவொரு அவயவத்தை மட்டும் ஆத்மா என்று ஒப்புக் கொண்டால் அது வெட்டப்பட்டு நீக்கப்படும்போது மற்ற அவயவங்கள் ஆத்மா அல்லவாகையால் அவற்றில் அஹம் [நான்] என்ற வ்யவஹாரம் [வழக்கு] இல்லாதொழிய வேணும். கை, கால் முதலிய ஏதோவொரு உறுப்பை இழந்தவனிடம் அப்படி நான் என்ற வ்யவஹாரம் [வழக்கு] அழிந்ததாக உலகில் காணப்படவுமில்லை. இந்த தோஷத்தை நீக்குவதற்காக அந்த அவயவங்கள் ஒவ்வொன்றுமே ஆத்மா என்று ஒப்புக் கொண்டால் ஒரு புருஷனின் துக்கமானது இன்னொரு புருஷனிடம் வாராதப்போலே பாதம் முதல் கழுத்து முடியவுள்ள அவயவங்களில் ஏதோவொன்று புண்பட்டால் இன்னொரு அவயவமானது நான் துக்கியாக இருக்கிறேன் என்று துக்கத்தை அனுபவிப்பதும், வாக்கானது அதை வ்யவஹரிப்பதும் [சொல்லுவதும்] பொருந்தாது. எனவே ஒவ்வொரு அவயவமும் [உறுப்பும்] ஆத்மா என்ற பக்ஷமும் [கருத்தும்] தவறானது.

अवयवी इति चेत् न।[1] अवयवसमुदायव्यतिरेकेण अवयविनः पार्थक्येन अदर्शनात्, "अयं मम देहः" इति स्वस्मात् देहस्य पृथग्व्यवहारोपलब्धेः, अत्यन्ताज्ञानामपि मृतशरीरेषु आत्मत्व[2]बुद्ध्यसम्भवाच्च देहस्य न आत्मत्वम्[3]॥

अथ बाह्येन्द्रियाण्येव[4] आत्मेति चेत् न। "य एवाहं[5] अद्राक्षं स एवाहं[6] स्पृशामि" इति दर्शनस्पर्शनयोः एकस्यैव कर्तृत्वेन प्रतीयमानत्वात् रूपैकविषयग्रहण[7]हेतोः चक्षुषः, स्पर्शैकविषयग्रहण[7] निमित्तभूतत्वगिन्द्रियस्य च[8] आत्मत्वानुपपत्तेः[9] एकैकविषयग्रहण हेतुभूत इन्द्रियान्तराणामपि आत्मत्वानुपपत्तिः। अन्यथा केवलत्वगिन्द्रियस्यैव दर्शनस्पर्शनश्रवणादिसम्भवापत्त्या[10] लोके[11] अन्ध-बधिराद्यभावप्रसङ्गात्॥

अथ मनः आत्मेति चेत् न[12]। कर्तुः [13]स्मरणादि-कार्याणां करणत्वेन कल्पितत्वात् । तस्यैव स्मृतिकर्तृत्वमिति चेत्[13] [14]न, तत्र करणाभावात्। स्मृतिकर्तुरिव

---

1. G2 alone reads न
2. G2 T1 T2 आत्म
3. G2 अनात्मत्वं
4. T1 omits एव
5. G1, T2 यमेवाहं
6. G1, T2 तमेवाहं
7. G1 omits
8. G1 वा
9. G2, T1 add एव
10. G1 omits सम्भव T2 सद्भावापत्या
11. G1 omits लोके G1 लोकेषु
12. G1 omits न
13. G1 omits स्मरणादि......चेत्
14. G2 alone reads न तत्र





அவயவங்களால் ஆரம்பிக்கப்பட்ட தனி த்ரவ்யம் [அவயவங்களைக் காட்டிலும் வேறான த்ரவ்யம்] தான் அவயவீ, அது தான் ஆத்மா என்ற கருத்தும் தவறானது. அவயவஸமுதாயத்தைக் காட்டிலும் வேறான அவயவீ என்ற த்ரவ்யமானது தனித்துக் காணப்படாததாலும், 'இது என் தேஹம்' என்று தன்னைக் காட்டிலும் – தேஹத்துக்குத் தனித்த வ்யவஹாரமானது [வழக்கானது] காணப்படுவதாலும், மிகுந்த அஜ்ஞாநம் உடையவர்களுக்குங்கூட மரணமடைந்த ஶரீரங்களில் இது ஆத்மா என்ற புத்தி ஏற்படாதபடியாலும் தேஹமானது ஆத்மாவாக இயலாது.

இனி பாஹ்யேந்த்ரியங்களே ஆத்மா என்கிற பக்ஷமும் [கருத்தும்] தவறு. 'எந்த நான் பார்த்தேனோ அந்த நானே தொடுகிறேன்' என்று பார்த்தல், தொடுதல் என்ற இரண்டு கார்யங்களுக்கும் ஒருவனே கர்த்தவாகத் தோற்றுவதால் ரூபத்தை [நிறத்தை] மட்டுமே க்ரஹிப்பதற்கு ஹேதுவாகவுள்ள கண்ணுக்கும், ஸ்பர்ஶத்தை [தொடுவுணர்ச்சியை] மட்டுமே க்ரஹிப்பதற்கு காரணமாகவுள்ள த்வகிந்த்ரியத்துக்கும் [தோல்] ஆத்மத்வம் பொருந்தாது. அவ்வாறே ஶப்தம்[ஒலி], ரஸம் [சுவை], கந்தம் [மணம்] என்ற ஓரோ விஷயங்களை மட்டும் க்ரஹிப்பதற்கு ஹேதுக்களாயுள்ள காது, நாக்கு, மூக்கு என்ற மற்ற இந்த்ரியங்களுக்குங்கூட ஆத்மத்வம் பொருந்தாது. அப்படியன்றிக்கே ஒரு இந்த்ரியமே ஆத்மாவாக ஆகி விட்டால் வெறும் த்வகிந்த்ரியமே [தோலே] பார்த்தல், தொடுதல், கேட்டல், முகர்தல், சுவைத்தல் என்ற கார்யங் களைச் செய்து விடலாமாகையால் லோகத்தில் குருடன், செவிடன், முதலியவர்களே இல்லாமல் போக வேண்டிவரும்.

இனி, மனமே ஆத்மா என்கிற பக்ஷமும் [கருத்தும்] தவறு; கர்த்தாவினுடைய ஸ்மரணம் [நினைவு கூர்தல்], மனனம் [யுக்திகளால் நிலை நிறுத்துதல்], த்யாநம் [தொடர்ந்து நினைத்தல்] முதலிய கார்யங்களுக்குக் கரணமாக [ஸாதநமாக] அமைக்கப்பட்டிருக்கிறபடியால் அந்த மனமே ஸ்ம்ருதி கர்த்தாவாகவுள்ளது என்றால் அன்று; கரணம் [ஸாதநம்] இல்லாமற் போகிறபடியால். [நினைவு என்ற கார்யம் நடப்பதற்குக் கர்த்தா, கரணம் = ஸாதநம், கர்ம = நினைக்கப்படும் பொருள் என்ற மூன்றும் வேணும். மனமே கர்த்தாவாகி விட்டால் கரணம் இல்லாதபடியால் நினைவு என்ற கார்யம் நடைபெறாது]. ஸ்ம்ருதிகர்த்தாவான மனமே தத்கரணமாகவும் ஆகிறது என்றால்

तत्करणत्वमिति चेत न, विरुद्धत्वात्। अन्यत्करणमिति[1] तत् बाह्यकरणं चेत् तद्विधुरस्य[2] स्मृत्यसम्भवः। आन्तरकरणं[3] चेत् आत्मनो मन इति संज्ञारोपणं स्यात्। आन्तरकरणस्य[4] अनपेक्षितत्वे इन्द्रियाणां सर्वदा स्वस्वविषयग्रहण प्रसङ्गापत्तिः[5]। तस्मात् सर्वदा स्वस्वविषयग्रहण प्रसङ्गापत्तिः[5]। तस्मात् अन्तःकरणापेक्षा युज्यते। एवं महदनुगृहीत– अन्तःकरणमपि नात्मा। "योऽहमद्राक्षं स एव अहं[6] अध्यवस्यामि" इति दर्शन अध्यवसाययोः एकाश्रय एव प्रत्यभिज्ञाकरणात्, केवल अध्यवसायहेतुभूतबुद्धेः आत्मत्वानुपपत्तेः॥

अथ[7] प्राण एव[8] आत्मा इति चेत् न[9]। किमयं वायुविशेषः तदन्यो वा। वायुविशेषश्चेत् [10]बाह्यवायुवत् ज्ञानाश्रयत्वासम्भवः। अन्यश्चेत् पूर्वोक्तदेहादिषु अन्यतमो वा तदरिक्तो वा। देहादिषु अन्यतमत्वाभावः प्रथममेव प्रतिपन्नः[11]। पूर्वोक्त देहाद्यतिरक्तः[12] चेत् आत्मनः प्राण इति नामान्तर आरोपणं स्यात्। तस्मात्[13] प्राणोऽपि नात्मा।

1. G1,T2 करणात्
   G2 अन्यत्करणमितिचेत्
2. G1 तद्विविरुद्धस्य T2 तद्विविरुद्ध
3. T2 अन्तःकरणं
4. T2 अन्तःकरणस्य
5. G1 अनुपपत्तिः
   T2 आपत्तिः
6. G1, T2 omit अहं
7. G2 alone has अथ
8. T1, T2 omit एव
9. G2 adds न
10. G1, T2 omit बाह्य
11. G1, T2 प्रतिपादितः
12. G1, T2 देहाव्यतिरिक्तः
13. G1 omits तस्मात्





தவறு, விரோதம் வருகிறபடியால். வேறொன்று கரணம் என்றால் அது பாஹ்ய கரணமா அல்லது ஆந்தரகரணமா என்ற கேள்வி எழுகிறது. அது பாஹ்யகரணம் என்றால் அது இல்லாதவனுக்கு ஸ்ம்ருதி ஏற்படாது. ஆந்தரகரணம் என்றால் ஆத்மாவுக்கு மனம் என்று பெயரிடப்பட்டதாகிறது. ஆந்தரகரணம் தேவையில்லை என்றால் இந்த்ரியங்கள் யாவும் தங்கள் தங்கள் விஷயங்களை எப்பொழுதும் க்ரஹிக்க வேண்டி வரும். எனவே அந்த கரணத்தின் அபேக்ஷையானது பொருந்துகிறது. [ஒருவன் செல்லும்போது வழியில் எத்தனையோ கற்கள், செடி கொடிகள் முதலியவற்றைப் பார்த்துக் கொண்டே சென்றாலும் மனம் அவற்றில் ஈடுபடாததால் அவனுக்கு அவைகளைப் பற்றின அறிவு உண்டாவதில்லை. எனவே விஷயங்களை க்ரஹிப்பதற்கு அந்த:கரணமான மனம் தேவை என்று தெரிகிறது.] இப்படியே மஹத்தத்த்வத்தால் அநுக்ரஹிக்கப் பட்ட அந்த:கரணம் ஆத்மா என்பதும் பொருந்தாது. "எந்த நான் பார்த்தேனோ அந்த நானே நிஶ்சயிக்கிறேன்" என்று தர்ஶநம், அத்யவஸாயம் என்ற இரண்டுக்கும் ஒருவனே ஆஶ்ரயமாகவிருக்கிறான் என்று ப்ரத்யபிஜ்ஞை செய்யப் படுவதால் அத்யவஸாயத்துக்கு [நிஶ்சயத்துக்கு] மட்டும் ஹேதுவாயுள்ள புத்திக்கு ஆத்மத்வம் பொருந்தாது.

இனி, ப்ராணனே ஆத்மா என்ற பக்ஷமும் தவறு. ப்ராணன் என்பது வாயுவிஶேஷமா? அல்லது அதைக் காட்டிலும் வேறான பொருளா? என்பது கேள்வி. வாயுவிஶேஷமாக இருந்தால் பாஹ்யவாயுவைப் போலவே ஜ்ஞாநாஶ்ரயத்வம் ஏற்படாது. வேறொரு பொருள் என்றால் முன்பு சொல்லப்பட்ட தேஹம் முதலிய பொருட்களில் ஒன்றா அல்லது அவற்றைக் காட்டிலும் வேறானதா என்ற கேள்வி எழுகிறது. ஆத்மாவானது தேஹாதிகளில் ஒன்றன்று என்று முன்பே நிரூபிக்கப்பட்டு விட்டது. முன்பு சொல்லப்பட்ட தேஹாதிகளைக் காட்டிலும் வேறுபட்டது என்றால் ஆத்மாவுக்கு ப்ராணன் என்று பெயரிடப்பட்டதாக ஆகிறது. எனவே ப்ராணனும் ஆத்மாவன்று.

एवं उक्तयुक्तिभिः अस्य देहादिविलक्षणत्वे सिद्धेऽपि, गुणदूषित[1]-पुरुषबुद्धिशक्तिप्रयुक्तयुक्तिकलापस्य[2] वैविध्य[3]सम्भवात् अपेक्षितार्थ[4]प्रामाण्याङ्गीकार[5]-अयोगात्, इतरनिरपेक्षप्रबलप्रमाणभूतश्रुतिवाक्यैः तदुपबृंहणैकान्तस्मृतिपुराणादिभिश्च,

"अयमात्मा पञ्चविंशोऽयं पुरुषः" (महानारा.1)

[6]"अन्योन्तर आत्मा विज्ञानमयः[6]", (तै.उ.आन. 4-1)

"देहेन्द्रियमनःप्राणधीभ्योऽन्योऽनन्यसाधनः।
[7]नित्यो व्यापी प्रतिक्षेत्रं आत्मा भिन्नः स्वतस्सुखी[7]॥",
(आत्मसिद्धि श्लो.3)

"पञ्चभूतात्मके देहे देही मोहतमोवृतः।
अहं ममैतदित्युच्चैः कुरुते कुमतिर्मतिम्॥",
(वि.पु. 6-7-12)

"पिण्डः पृथग्यतः पुंसः शिरःपाण्यादि[8]लक्षणः।
ततोऽहमिति कुत्रैतां[9] संज्ञां राजन् करोम्यहम्[10]॥",
(वि.पु. 2-13-87)

"किं त्वं एतच्छिरः किन्नु उरः तव तथोदरम्।
किमु पादादिकं[11] त्वं वै तवैतत् किं महीपते॥,

1. G1 गुणभूषित
2. G2 पुरुषशक्तिकलापस्य
3. G1, T2 वैपरीत्य
4. T2,G1 add प्रद
5. T2 अनङ्गीकार
6. T1, G2 omit अन्योन्तर......मयः
7. T1 G2 omit नित्यो......सुखी
8. G1 पाण्यैक
9. G2 कुत्रैतां
10. G1 करोत्यहं
11. T1 पादादिकः



இப்படிக் கீழே சொல்லப்பட்ட யுக்திகளால் இந்த ஆத்மாவுக்கு தேஹங்கள் முதலியவைகளைக் காட்டிலும் வேறுபாடு ஸித்தித்தாலுங்கூட ரஜோகுண தமோகுணங் களால் கெடுக்கப்பட்ட புருஷர்களுடைய புத்தி ஶக்தியினால் பற்பல தவறான யுக்திகள் அந்தந்தப் புஷர்களுக்குத் தோன்றி ஆத்மாவின் தேஹாதி விலக்ஷணத்வத்தை இசைய வொட்டாமல் தடுக்கும். எனவே அபேக்ஷிதமாயுள்ள [தேவையாயுள்ள] இந்த அர்த்தத்தின் ப்ராமாண்யத்தை உண்மையை அங்கீகரிக்க முடியாமற் போகும். எனவே இதரநிரபேக்ஷப்ரபலப்ரமாணமாயுள்ள ஶ்ருதிவாக்யங்களாலும் அவற்றுக்கு உபப்ரும்ஹணங்களாகவே [விளக்கங்களாகவே] உள்ள ஸ்ம்ருதிபுராணாதிகளாலும் ஆத்மா இருபத்தைந்தாவது தத்த்வமாக ப்ரக்ருதியைக் காட்டிலும் வேறானவனாக கூறப்பட்டிருக்கையால் தேஹாதிகளைக் காட்டிலும் வேறுபட்டவனாக விளக்கப் பட்டிருக்கிறான். தேஹாதிகளில் ஏற்படும் ஆத்மபுத்தியானது மோஹமடையப் பண்ணும் தமோகுணத்தை மூலமாகக் கொண்டது என்றும் அந்த ப்ரமாணங்கள் கூறுகின்றன. எனவே ஆத்மா தேஹாதி விலக்ஷணன் [தேஹம் முதலியவைகளைக் காட்டிலும் வேறுபட்டவன்] என்ற அர்த்தம் உறுதிப்பட்டதாகிறது. இப்படி ஸ்தாபிக்கும் ப்ரமாணங்கள் வருமாறு:

'இந்த ஆத்மாவாகிற புருஷன் இருபத்தைந்தாவது தத்த்வம்' [மஹாநாராயண.]

'மனத்தைக் காட்டிலும் வேறானவனாய் அதற்குள்ளே இருப்பவனான ஆத்மா விஜ்ஞாநத்தையே பூர்ணமாகக் கொண்டவன்' [தை. ஆந. 4-1]

'தேஹம், இந்த்ரியம், மனஸ், ப்ராணன், புத்தி ஆகியவற்றைக் காட்டிலும் ஆத்மா வேறானவன்; இன்னொரு ஜ்ஞாநத்தால் அறியத் தேவையில்லாதபடி தானே 'நான், நான்' என்று தோற்றக் கூடிய ஸ்வயம் ப்ரகாஶவஸ்து; நித்யன்; ஶரீரம் முழுவதும் தன்னுடைய ஜ்ஞாநத்தால் பரவியிருப்பவன்; ஒவ்வொரு ஶரீரத்திலும் தனித்தனியாக இருப்பவன்; இயற்கையில் ஸுகியானவன்" [ஆத்மஸித்தி ஶ்லோ.3]

"பஞ்ச பூதாத்மகமான தேஹத்தில் உள்ள தேஹியான ஜீவாத்மா மோஹமடையப் பண்ணும் தமோகுணத்தால் மூடப்பட்டுள்ளான். எனவே விபரீதமான அறிவை அடைந்த அவன் தேஹத்தில் 'நான்' என்றும் தேஹஸம்பந்திகளான வஸ்துக்களில் 'என்னுடையது' என்றும் தீவ்ரமான புத்தியைச் செய்கிறான்." [வி.பு.6-7-12]

"தலை கால் முதலிய அவயவங்களையுடைய தேஹமாகிற பிண்டமானது புருஷனைக் காட்டிலும் வேறானது. எனவே 'நான்' என்ற புத்தியை எந்த அவயவத்தில் வைப்பேன் அரசனே!" [வி.பு.2-13-87]

समस्तावयवेभ्य:[1] त्वं पृथग्भूतो[2] व्यवस्थित:।
कोऽहमित्येव निपुणो भूत्वा चिन्तय पार्थिव॥"
(वि.पु. 2-13-100,101)

इति[3] पञ्चविंशकत्वेन[4] प्रकृते:परतया देहादि-विलक्षणत्वेन, देहाद्यात्मबुद्धे: मोहतमोवृतिमूलत्वेन[5] च[6] प्रतिपादितत्वात् आत्मा देहादिविलक्षण: इति सिद्धम्॥ अयं अजडश्च।

"हृद्यन्तर्ज्योति: पुरुष:" (बृह 6.3.7)
"विज्ञानघन एव" (बृह 4.4.12)
"अत्रायं पुरुष: स्वयञ्जोतिर्भवति", (बृह 6.3.9)
"विज्ञानं यज्ञं तनुते", (तै.उ.आन. 2.5.1)
"आत्मा विज्ञानमय:" (तै.उ.आन. 4-1)
"अनन्यसाधन:" (आ.सि.श्लो.3)
[7]"वासनामय एव अयमात्मा[7]", (?)
"आत्मा[8] ज्ञानमयोऽमल:", (वि.पु. 6-7-22)
[9]"दु:खाज्ञानमला: धर्मा: प्रकृतेस्ते न चात्मन:[9]।
(वि.पु. 6-7-22)
ज्ञानं तदरूपाख्यं[10] ज्ञानानन्दैकलक्षणम्॥" (वि.सं)

---

1. G1 अवयवैश्वर्य:
2. G1 पृथग्भाव: T1 पृथग्रूप:
3. T2 omits इति
4. T2 पञ्चविंशत्वेन
5. G1 प्रतिकूलत्वेन T2 वृत्तिमूल.त्वेन
6. T2 G2 omit च
7. T1 G2 omit वासना......त्मा
8. T2 omits आत्मा
9. T1 G2 omit दु:खा.....त्मन:
10. T2 G2 तदेकरूपाख्यं



"நீ இந்தத் தலையா அல்லது மார்பா அல்லது உன் வயிறு அல்லது உன்னுடைய இந்த பாதம் முதலியவையா இவற்றில் நீ யார்? பூமிக்கு அதிபதியே!"

"எல்லா அவயவங்களைக் காட்டிலும் நீ தனித்த ஆகாரமுடையவனாக நிலைபெற்றிருக்கிறாய். நான் யார் என்று விகாரமுடையவனாகிச் சிந்தித்துப் பார் அரசனே!"
[வி.பு. 2–13–100,101]

இவ்வாறு, ஆத்மா இருபத்தைந்தாம் தத்த்வமாய், ப்ரக்ருதியைக் காட்டிலும் வேறுபட்டவனாதலால் தேஹம் முதலியவைகளைக் காட்டிலும் வேறுபட்டவனாய், தேஹமே ஆத்மா என்ற நினைவு மோஹம், தமஸ் இவற்றினால் ஏற்படுவது என்று நிரூபிக்கப் பட்டபடியால், ஆத்மா தேஹாதிவிலக்ஷணன் என்பது நிரூபிக்கப்பட்டது.

இந்த ஆத்மா அஜடனாகவும் [ஸ்வயம்ப்ரகாஶனாகவும் = இன்னொரு ஜ்ஞாநத்தின் உதவியில்லாமல் தானே ப்ரகாஶிப்பவனாகவும்] இருக்கிறான்.

'ஹ்ருதயத்தினுள்ளே பிரகாசித்துக்கொண்டிருக்கும் புருஷன்' [ப்ருஹ. 6–3–7]

'விஜ்ஞாநக்கட்டியாகவே உள்ளான்' [ப்ருஹ. 4–4–2] [உப்புக் கட்டியானது உவர்ப்புச் சுவையற்ற பாகம் சிறிது மற்றிருக்கும். அவ்வாறே இவன் ஜ்ஞாநம் தவிர்ந்த ஜடபாகம் சிறிதும் இல்லாதவன் என்று பொருள்.]

"ஹ்ருதயத்திலுள்ள இந்தப் புருஷன் தானே ப்ரகாஶிப்பவனாகவுள்ளனான்" [ப்ருஹ 6–3–9]

"தானே ப்ரகாஶிப்பவனான ஜீவாத்மா யஜ்ஞத்தை விஸ்தரிக்கிறான் = விரிவாகச் செய்கிறான்"
[தை. ஆந. 2.5.1]

"ஆத்மாவானவன் விஜ்ஞாநம் மிகுந்தவன்"
[தை. ஆந. 4–1]

"வேறொரு ஜ்ஞாநத்தால் ப்ரகாஶியாமல் தானே ப்ரகாஶிப்பவன்" [ஆத்ம ஸித்தி ஸ்லோ 3]

"காமம், க்ரோதம், இரக்கம் முதலியவை நிறைந்தவனே இந்த ஆத்மா" [?]

"ஆத்மா ஜ்ஞாநம் நிறைந்தவன் குற்றமற்றவன்"
[வி. பு. 6–7–22]

"துக்கம், அஜ்ஞாநம், அழுக்கு என்ற தர்மங்கள் ப்ரக்ருதியின் ஸம்பந்தத்தாலேயே ஆத்மாவுக்கு வருகின்றன, இயற்கையில் ஆத்மாவுக்கு இவை இல்லை" [வி. பு. 6–7–22]

"அந்த ஜ்ஞாநஸ்வரூபனான ஆத்மா உருவமற்றவன், ஜ்ஞாநம் ஆநந்தம் என்ற இவற்றையே நிரூபக தர்மங்களாகக் கொண்டவன்." [?]

इत्यादि[1] श्रुतिस्मृतिभिः ज्ञानान्तरनिरपेक्षत्वेन[2] स्वयं[3]प्रकाशत्वलक्षणज्ञानमयत्वेन अभिहितत्वात्, अस्य केवल[4]ज्ञानसापेक्षप्रकाशत्वलक्षणजडवस्तु[5]व्यावृत्तिसिद्धेः॥

अयम् आनन्दरूपश्च। आनन्दरूपत्वं नाम[6] अनुकूलतया प्रकाशमानत्वम्। स्वस्य स्वयम् अनुकूलत्वात् प्रातिकूल्यौदासीन्यायोगाच्च तथात्वं अस्य सिद्धम्। तदुक्तम्[7] –

"आर्द्रं ज्वलति" (तै. उ. ना 5.10)

"आनन्दी भवति", (तै.उ.आन. 2.7.1)

"निर्वाणमय एवायम् [8]आत्मा ज्ञानमयोऽमलः",
"दुःखाज्ञानमलाः धर्माः प्रकृतेस्ते न चात्मनः"।"
(वि.पु. 6-7-22)

"[9]आनन्दमयस्त्वात्मा", (तै.उ.आन. 2.8.1)

"[10]आनन्दैकलक्षणः" (विष्वक्सेनसंहिता)

इति। 'सुखमहमस्वाप्सं' इति प्रत्यभिज्ञैव अस्य सुखरूपत्वे प्रमाणम्॥

नित्यश्च। नित्यत्वं नाम सतो वस्तुनः उत्पत्तिविनाश अत्यन्ताभाव अप्रति[11]योगित्वम्। तच्च,

1. G1 इति
2. G1 T2 G2 omit त्वेन
3. T1 omits स्वयं
   T2 G2 स्वप्रकाशत्व
4. T1 G2 omit केवल
5. T2 omits वस्तु
6. G2 omits
7. G1 T2 तथाच उक्ता G2 तथोक्तं
8. T1, G2 omit
9. T2 adds ज्ञान
10. T1, G1 ज्ञानानन्दैकलक्षणं
11. T1, G1, G2 omit अप्रति



இப்படிப்பட்ட ஶ்ருதி ஸ்ம்ருதிகளால் வேறொரு ஜ்ஞாநத்தை அபேக்ஷியாமல் = எதிர்பாராமல் ஸ்வயம்ப்ரகாஶத்வத்தை உடைய ஜ்ஞாநஸ்வரூபனாகக் கூறப்பட்டிருக்கிறான். எனவே ஜ்ஞாநத்தை மட்டுமே எதிர்பார்த்து ப்ரகாஶிக்கிற கடம்[பானை], படம்[துணி] முதலிய ஜடவஸ்துக்களிலிருந்து ஆத்மாவிற்கு வேறு பாடானது ஏற்படுகிறது.

இந்த ஜீவாத்மா ஆநந்தஸ்வரூபனாகவுமிருக்கிறான். ஆநந்தரூபத்வம் என்றால் அநுகூலமாக ப்ரகாஶிக்கையாகும். தனக்குத் தான் அநுகூலமாகவிருக்கிறபடியால், ப்ராதிகூல்யமும் ஔதாஸீந்யமும் இல்லாதபடியால் அந்த ஆநந்தரூபத்வம் நிலைபெறுகிறது. இவ்வர்த்தம் ஶ்ருதியிலும் புராணத்திலும் சொல்லப்பட்டிருக்கிறது. அவை வருமாறு –

"ஆநந்தரூபத்வத்தால் எப்பொழுதும் புதியவனாக ஜ்வலிக்கிறான் ஜீவாத்மா." [தை. உ. நா.5–10]

"ஆநந்தமுடையவனாக விருக்கிறான்" [தை.ஆந.2–7–1]

'ஸுகஸ்வரூபனாயேயுள்ள இந்த ஜீவாத்மா ஜ்ஞாந ஸ்வரூபனாய்க் குற்றமற்றவனாயிருக்கிறான். துக்கம், அஜ்ஞாநம், குற்றம் என்ற அந்த தர்மங்கள் இவனுக்கு ப்ரக்ருதியின் ஸம்பந்தத்தால் வருகின்றன, இவனிடம் இயற்கையாக இருப்பனவல்ல" [வி.பு. 6–7–22]

"ஆநந்தம் நிறைந்தவனாகவே ஆத்மா உள்ளான்" [?]

'ஆநந்தமே வடிவானவன் ஜீவாத்மா' [?]

இந்த வாக்யங்கள் ஆத்மா ஆனந்மே வடிவெடுத்தவன் என்பதற்கு ப்ரமாணங்களாகும். 'ஸுகமாக நான் உறங்கினேன்' என்ற ப்ரத்யபிஜ்ஞையே [ஏகத்வஜ்ஞாநமே] இவன் ஸுகரூபனாயிருக்கிறான் என்பதில் ப்ரமாணமாகிறது. [இப்பொழுதுள்ள 'நானும்' உறங்கின காலத்தில் ஸுகத்தையநுபவித்த 'நானும்' ஒருவன் என்ற ஏகத்வத்தைக் காட்டும் ஜ்ஞாநமே ப்ரத்யபிஜ்ஞையாகும்.]

இந்த ஜீவாத்மா நித்யனாயுமுள்ளான். நித்யத்வம் என்றால் இருக்கும் வஸ்துவினுடைய உத்பத்தி விநாஶங்களின் அத்யந்தாபாவத்தின் அப்ரதியோகித்வம். [உத்பத்தி விநாஶங்களின் அத்யந்தாபாவத்துக்கு ப்ரதியோகீ – கடம்[பானை] முதலிய அநித்ய வஸ்து. உத்பத்தி விநாஶங்களின் அத்யந்தாபாவத்துக்கு அப்ரதியோகி – நித்யவஸ்து. உத்பத்திவிநாஶங்களின் அத்யந்தாபாவத்துக்கு அப்ரதியோகித்வம் – நித்யத்வம். அந்த நித்யத்வமும் ஶ்ருதிஸித்தமாயுள்ளது.] அந்த ஶ்ருதிகளாவன –

"न जायते म्रियते वा विपश्चित्",(कठो. 1-2-18)

"ज्ञाज्ञौ द्वावजौ", (श्वेता. 1.9)

"नित्यो नित्यानाम्" (कठो. 2-5-3, श्वेता. 6-13)

इत्यादि[1] श्रुतिसिद्धम्।

"प्रजापतिः प्रजाः असृजत", (?)

"यतो वा इमानि भूतानि जायन्ते",(तै.भगु. 1)

"यतः प्रसूता जगतः प्रसूतिः" (तै.नारा. 4)

"न ब्रह्मा नेशानः" (महोप. 1-1)

इत्यादिषु उत्पत्तिविनाशवचनं तु देहसंयोगवियोग[2]-निबन्धनम्॥

अयं अणुपरिमाणश्च।

"तेन प्रद्योतेन एष आत्मा निष्क्रामति" (कौषी.)

इति उत्क्रान्तिश्रवणात्[3]। उत्क्रान्तिर्नाम शरीरवियोग-मात्रमिति चेत् न[4],

"ये[5] वैके च अस्माल्लोकात् प्रयन्ति[6]।
चन्द्रमसमेव ते सर्वे गच्छन्ति।"

"तस्माल्लोकात् पुनरेति अस्मै लोकाय कर्मणे।" (बृह. 6-4-6)

इति गत्यागतिश्रुतिविरोधाच्च[7]।

1. G1, G2, T2 इति आत्मनः
2. T2 omits वियोग
3. G1 प्रयोगात्
4. G1, T2 omits न
5. G1 ह
6. G1, T2 प्रयान्ति
7. T1 G1 omit च





"பலவற்றையும் அறியும் ஜ்ஞாநமுள்ளவனான ஜீவாத்மா பிறக்கிறானல்லன் இறக்கிறானல்லன்' [கட. 1–2–18]

"பரமாத்மாவாகிற அறிவு மிகுந்தவன், ஜீவாத்மாவாகிற அறிவு குறைந்தவன் என்ற இருவரும் பிறப்பற்றவர்கள் [ஶ்வேதா. 1–9]

'நித்யர்களான ஜீவாத்மாக்களுக்கு நித்யனான பரமாத்மா விருப்பங்களை நிறைவேற்றுகிறான்' [கட. 2–5–3, ஸ்வேதா 6–13] முதலியவை. ஆனால்,

'ப்ரஜாபதியானவர் ப்ரஜைகளை ஸ்ருஷ்டித்தார்' [?]

'எதனிடமிருந்து இந்த பூதங்கள் உண்டாகின்றனவோ' [தை. ப்ருகு. 1]

'எதனிடமிருந்து ஜகத்துக்கு உத்பத்தி ஏற்பட்டதோ' [தை.நா.2–2–1.]

'ப்ரளயகாலத்தில் ப்ரஹ்மா இலன், ருத்ரன் இலன்' [மஹோப. 1–1]

இத்யாதிகளிலுள்ள உத்பத்தி விநாஶ வசனங்களோ வென்றால் தேஹஸம்யோகவியோகத்தைக் காரணமாகக் கொண்டவை. [ஜீவாத்மாவுக்கு உத்பத்தியாவது தேஹத்துடன் ஏற்படும் ஸம்பந்தம். விநாஶமாவது தேஹத்தின் அழிவு. இவ்விரண்டையுமே இந்த வசநங்கள் காட்டுகின்றன.]

இந்த ஜீவாத்மா அணுபரிமாணமுடையவனாகவும் இருக்கிறான்.

'அந்த ஒளியால் இந்த ஆத்மா வெளிக் கிளம்புகிறான்' [கௌஷீதகீ]

என்று உத்க்ராந்தி [வெளிக் கிளம்புதல்] ஓதப்படுவதால் உத்க்ராந்தியாவது ஶரீரவியோகமாத்ரந்தான் [உடலின் பிரிவு மட்டுந்தான்], எனவே அணு பரிமாணமுடையவனாக இருக்கத் தேவையில்லை. விபு பரிமாணமுடையவனாகவே இருக்கலாம் என்னலாகாது:

'எந்த சிலர் இவ்வுலகிலிருந்து மரணமடைகிறார்களோ அவர்கள் யாவரும் சந்த்ரனையே அடைகிறார்கள்."

"ஸ்வர்க்கமாகிற அவ்வுலகிலிருந்து திரும்பி இவ்வுலகுக்கு வந்து கர்மத்தைச் செய்வதற்காகப் பிறக்கிறார்கள்." [ப்ருஹ. 6–4–6]

என்று செல்லுகை – வருகைகளைச் சொல்லும் ஶ்ருதிகளுக்கு விரோதம் வருவதால். [விபுபரிமாணம் உடையவனாக இருந்தால் செல்கையும் வருகையும் ஏற்படாது என்று பொருள்.]

तथा, "एषोऽणुरात्मा [1]चेतसा वेदितव्यः[1]",

(मुण्डक. 3-1-19)

"वालाग्रशतभागस्य शतधा कल्पितस्य च ।
भागो जीवः स विज्ञेयः स चानन्त्याय कल्पते।।",

(श्वेता. 5.9)

"आराग्रमात्रो ह्यवरोऽपि दृष्टः" (श्वेता. 5.8)

इति उन्मानश्रुतिः आत्मनां अणुपरिमाणं अभिधत्ते।
[2]उपबृंहणं च –

"स्वरूपमणुमात्रं[3] स्यात्[4]।"
"अणुमात्रोऽप्ययं जीवः"[5]।
"त्रसरेणु प्रमाणास्ते रश्मिकोटिविभूषिताः"

(विष्वक्सेनसंहिता)

इति।

'हृदि ह्येव अयमात्मा' (प्रश्नो. 3.6)

इति अणुपरिमाणतया हृत्प्रदेशस्थितस्यापि अस्य पाणिपादादिषु सुखदुःख- अनुभवः मणिद्युमणिदीपादीनां एकदेशस्थितानामपि[6] प्रभया परत्र व्याप्तिवत् स्वगुणभूतज्ञानेन [7]समन्तात् व्याप्तिसम्भवात्[7] उपपद्यते। तथा च[8] श्रूयते छान्दोग्ये दहरविद्यायां –

"प्रज्ञया वाचं समारुह्य वाचा सर्वाणि नामानि आप्नोति। प्रज्ञया घ्राणं समारुह्य घ्राणेन

---

1. G2 alone reads चेतसा वेदितव्यः
2. G1 add श्रुति
3. T1 स्वरूपगुणपरिमाणं
4. T1 omits स्यात्
5. T1 omits जीवः
6. G2 देशस्थानामपि
7. G2 omits समन्तात्.........सम्भवात्
8. G1 omits च



'இந்த ஆத்மா அணுபரிமாணமுடையவன் என்று புத்தியினால் அறியத்தக்கவன்' [முண்டகம் 3–1–19]

"நெல்லின் நுனியையெடுத்து நூறு கூறாக்கி அதில் ஒரு கூறை எடுத்து நூறு கூறாக்கினால் அதில் ஒரு கூறாக இருப்பவன் ஜீவன் என்று அறியப்பட வேண்டியவனாகிறான். அவன் தன்னுடைய தர்மபூத ஜ்ஞாநத்தால் விபுவாக ஆவதற்கு ஸமர்த்தனாகிறான். முக்தி நிலையில் அவனுடைய தர்மபூத ஜ்ஞாநம் விபுவாகிறது என்றர்த்தம்." [ஶ்வேதா 5–9]

'ஊசியின் நுனியளவுள்ளவன் இவன், அதையும் விடச் சிறியவனாகக் காணப்படுகிறான்' [ஶ்வேதா. 5–8]

என்ற உந்மாநஶ்ருதிகள் [அளவைக் கூறும் ஶ்ருதிகள்] ஆத்மாக்களுக்கு அணுபரிமாணம் உள்ளது என்று காட்டுகின்றன. இவ்வர்த்தத்தில் உபப்ரும்ஹணமும் உள்ளது:

'ஸ்வரூபம் அணுமாத்ரமாகவுள்ளது'
'அணுமாத்ரனாகவும் இந்த ஜீவன் இருக்கிறான்'
'ஸூர்ய ஒளியில் காணப்படும் துணுக்குகளின் அளவுள்ளவர்கள் ஜீவாத்மாக்கள், கோடிக்கணக்கான ஜ்ஞாநக் கதிர்களால் அலங்கரிக்கப் பட்டவர்கள்' [விஷ்வக்ஸேந ஸம்ஹிதை] என்று.

"ஹ்ருதயத்தியே அன்றோ இந்த ஆத்மா உள்ளான்'

[ப்ரஶ்ந. 3–6]

என்று அணுபரிமாணமுடையவனாக ஹ்ருதயப்ரதேஶத்தில் இருந்தாலுங்கூட இவனுக்குக் கைகால் முதலிய எல்லா அவயவங்களிலும் ஸுகதுக்காநுபவம் ஏற்படுகிறது. ரத்தினக் கல், ஸூர்யன், தீபம் முதலியவை ஓரிடத்திலிருந்தாலுங் கூட தங்களுடைய ஒளிக்கதிர்களால் வேறிடங்களில் வ்யாபிக்கின்றன. அவ்வாறே இவனும் தன்னுடைய குணபூதமான ஜ்ஞாநத்தால் தேஹம் முழுவதிலும் வ்யாபிக்கிறானாகையால் தேஹமெங்கும் ஸுகதுக்காநுபவம் ஏற்படுகிறது.

இவ்வர்த்தம் சாந்தோக்ய உபநிஷத்தில் தஹரவித்யா ப்ரகரணத்தில் –

"ப்ரஜ்ஞையினால் [தர்மபூதஜ்ஞானத்தால்] வாகிந்த்ரியத்தைக் கிட்டி வாக்கினால் எல்லாப் பெயர்களையும் அடைகிறான் [சொல்லுகிறான்]. ப்ரஜ்ஞையினால் முகரும் இந்த்ரியத்தைக் கிட்டி, அந்த

गन्धान् आप्नोति। प्रज्ञया चक्षुः समारुह्य चक्षुषा सर्वाणि रूपाणि आप्नोति। प्रज्ञया श्रोत्रं समारुह्य श्रोत्रेण सर्वान् शब्दान् आप्नोति। प्रज्ञया जिह्वां समारुह्य[1] जिह्वया सर्वान् रसान् आप्नोति। प्रज्ञया हस्तौ समारुह्य हस्ताभ्यां सर्वाणि कर्माणि आप्नोति। प्रज्ञया शरीरं समारुह्य[2] शरीरेण सुखदुःखे आप्नोति। प्रज्ञया उपस्थं समारुह्य उपस्थेन आनन्दं रतिं प्रजां[3] चाप्नोति। प्रज्ञया पादौ समारुह्य पद्भ्यां[4] सर्वा गतीः आप्नोति। प्रज्ञया धियं समारुह्य धिया विज्ञातव्यं काममवाप्नोति"[5]

इति[6]। तस्मात्[7] स्वधर्मज्ञानेन एककाल एव[8] एकस्य अनेक विग्रहपरिग्रहोऽपि उपपन्नः॥

असौ[9] अव्यक्तश्च[10]। [11]अव्यक्तत्वं नाम घटपटादिग्राहकचक्षुराद्यग्राह्यत्वम्[11]। [12]छेदनादियोग्यानि वस्तूनि यैः प्रमाणैः व्यज्यन्ते तैः अयमात्मा न व्यज्यत इति अव्यक्तः। अतः छेद्यादिविसजातीयः[12]।

1. G1 T1 आरुह्य
2. T2 आरुह्य
3. G1, T2 आनन्दरतिप्रज्ञां T1 प्रजातिं
4. G2 T1 पदाभ्यां
5. G1 कर्म आप्नोति G2 कामं आप्नोति
6. T2, omits इति
7. G2 omits तस्मात्
8. G1, T2 omits एव
9. G1 अयं
10. G1 omits च
11. T1, T2, G2 omit अव्यक्तत्वं.....अग्राह्यत्वं
12. G1 omits छेदनादि..........छेद्यादिविसजातीयः





இந்த்ரியத்தால் எல்லா கந்தங்களையும் முகர்கிறான். ப்ரஜ்ஞையினால் சக்ஷுரிந்த்ரியத்தைக் கிட்டி அந்த இந்த்ரியத்தால் எல்லா ரூபங்களையும் பார்க்கிறான். ப்ரஜ்ஞையினால் ஶ்ரோத்ரேந்த்ரியத்தைக் கிட்டி அந்த இந்த்ரியத்தால் எல்லா ஶப்தங்களையும் கேட்கிறான். ப்ரஜ்ஞையினால் நாக்கைக் கிட்டி அந்த நாக்கினால் எல்லா ரஸங்களையும் சுவைக் கிறான். ப்ரஜ்ஞையினால் கைகளைக் கிட்டிக் கைகளால் எல்லாக் கர்மங்களையும் செய்கிறான். ப்ரஜ்ஞையினால் ஶரீரத்தைக் கிட்டி ஶரீரத்தால் ஸுகதுக்கங்களை அநுபவிக்கிறான். ப்ரஜ்ஞையினால் மூத்ரேந்த்ரியத்தை கிட்டி அந்த இந்த்ரியத்தால் ஆநந்தத்தையும் ஸ்த்ரீயுடன் ஸம்யோகத்தையும், பிள்ளைப் பேற்றையும் அடைகிறான். ப்ரஜ்ஞையினால் பாதங்களைக் கிட்டிப் பாதங்களால் எல்லா கதிகளையும் [நடத்தல்களையும்] அடைகிறான். ப்ரஜ்ஞையினால் புத்தியைக் கிட்டி அந்த புத்தியினால் அறியப்பட வேண்டியவற்றை விருப்பப்படி அறிகிறான்."

என்று ஓதப் பட்டிருக்கிறது. எனவே தன்னுடைய தர்மபூத ஜ்ஞாநத்தால் ஒரே காலத்தில் ஒருவனுக்கு அநேக ஶரீரங்களை எடுத்துக் கொள்ளுதலுங்கூடப் பொருந்துகிறது.

இவன் அவ்யக்தனாகவும் இருக்கிறான். அவ்யக்தத்வம் என்றால் குடம் துணி முதலியவைகளை க்ரஹிக்கிற கண் முதலிய இந்த்ரியங்களால் க்ரஹிக்கப்படாமலிருக்கை. வெட்டப் படுதல், கொளுத்தப்படுதல் முதலிய செயல்களுக்கு ஆட்படக் கூடியவைகளான வஸ்துக்கள் எந்த ப்ரமாணங் களால் தோற்றுகின்றனவோ அந்த ப்ரமாணங்களால் தோற்றாதவன் என்பதால் இவன் அவ்யக்தன். எனவே சேத்யாதிவிஸஜாதீயன். [அதாவது வெட்டுதல், கொளுத்துதல், முதலிய க்ரியைகளுக்கு ஆட்படும் கடம், மரக்கட்டை முதலிய பதார்த்தங்களைக் காட்டிலும் வேறுபட்ட தன்மையையுடையவன் என்று பொருள்.]

तत एव प्राकृतवस्तुसदृशतयाऽपि[1] चिन्तााानर्हत्वात् अचिन्त्यश्च। तत एव विकारानर्हत्वात् अविकार्यश्च।

"अव्यक्तोऽयं अचिन्त्योऽयं अविकार्योऽयं उच्यते"

(गीता 2-25)

इति गीतत्वात्॥

निरवयवश्च अयम्[2]। अनेकद्रव्योपादानक[3]शरीर-विसजातीयतया,

"आत्मा शुद्धोऽक्षरः शान्तो निर्गुणः प्रकृतेः परः।
प्रवृध्द्यपचयौ नास्य [4]एकस्याखिलजन्तुषु।।"

(वि.पु. 2-13-7)

इत्युक्तत्वात्[4] अवयवसमुदायरहितः। उक्तैः[5] हेतुभिः शस्त्रा[6]-अग्नि-अम्बु-वायु-आतपाः[7] छेदन-दहन क्लेदन[8] शोषणानि आत्मानं प्रति कर्तुं न शक्नुवन्ति। आत्मनः सर्वव्यापनस्वभावतया[9] सर्वतत्त्वेभ्यः सूक्ष्मत्वात् [10]तैः अस्य[10] व्याप्त्यनर्हत्वात् व्याप्यकर्तव्यत्वाच्च[11] छेदनादीनाम्। तस्मात्,

"नैनं छिन्दन्ति शस्त्रणि नैनं दहति पावकः।
न चैनं क्लेदयन्त्यापो न शोषयति मारुतः॥

1. T1, G2 omits अपि
2. G1, T2, G2 omits अयं
3. G1, T2, G2 उपादान
4. T1, G2 omits
5. G1 उक्त
6. T1 शस्त्रास्त्र
7. G1, T2 वायुभिः G2 वायवः
8. G1 खेदन T2 भेदन
9. G1, T2 सर्वव्यापकस्वभावतया T1 सर्वव्याप्तिसम्भावनया
10. G2 तस्य तैः
11. T1 कर्मत्वाच्च





அதனாலேயே ப்ராக்ருதவஸ்துவுக்குச் சமமாகவும் கூட நினைக்கத் தகுந்தவனல்லன். எனவே அசிந்த்யனாகவும் உள்ளான். அப்படியே விகார அநர்ஹனாக [மாறுபாடு அற்றவனாக] உள்ளபடியால் அவிகார்யனாகவும் உள்ளான்.

'அவ்யக்தனாகவும் அசிந்த்யனாகவும் அவிகார்யனாக வும் இருக்கிறான் ஜீவாத்மா என்று சொல்லப்படுகிறான்'

[கீதை 2–25]

என்று பகவானால் அருளப்பட்டுள்ளபடியால்.

இந்த ஜீவாத்மா நிரவயவனாகவும் [அவயவங்கள் அற்றவனாகவும்] உள்ளான். அனேக த்ரவ்யங்களை உபாதாநமாகக் கொண்ட ஶரீரத்துக்கு விஸஜாதீயமாக,

"ஆத்மா கர்மரஹிதன், மலமூத்ராதி தோஷரஹிதன், பசி, தாஹம், ஶோகம், மோஹம், கிழத்தனம், மரணம் என்ற ஆறு அலைகளற்றவன்; ஸத்வம், ரஜஸ் தமஸ் என்ற முக்குணங்களற்றவன், இதற்குக் காரணம் ப்ரக்ருதியைக் காட்டிலும் வேறுபட்டவன், எனவே வளர்ச்சியும் குறைவும் அற்றவன். [இதற்கு மற்றொரு காரணம் அவன் அஸங்காத ரூபனாயிருத்தல் [அவயவங்களின் சேர்க்கையால் ஆகாதவனாயிருத்தல்]. ஸங்காத ரூபமாயுள்ள தேஹாதி களுக்குத்தான் வளர்ச்சி குறைவுகள் உண்டு; அஸங்காதரூபமாயுள்ள ஆகாஶத்துக்கும் பரமாணுவுக்கும் வ்ருத்திஹ்ராஸங்கள் கிடையா.] ஜீவாத்மாவின் இந்த ஸ்வாபாவங்கள் எல்லா ஜந்துக்களிலும் காணப்படுகின்றன."

[விஷ்ணுபுராணம் 2–13–7]

என்று சொல்லப்பட்டுள்ளபடியால் அவயவங்கள் அற்றவனாக வும் உள்ளான். சொல்லப்பட்ட காரணங்களால் ஆயுதம் ஆத்மாவை வெட்ட முடியாது, நெருப்பு கொளுத்த முடியாது, ஜலம் நனைக்க முடியாது, காற்றும் வெயிலும் உலர்த்த முடியாது. ஆத்மாவுக்கு எல்லா இடத்திலும் வ்யாபிக்கும் ஸ்வபாவம் உள்ளபடியால் எல்லா தத்த்வங்களைக் காட்டிலும் ஸூக்ஷ்மமாக [அளவில் சிறுத்தவனாக] உள்ளான். எனவே அவைகளால் இவனை வ்யாபிக்க முடியாது. [வெட்டுதல் முதலியவற்றை வ்யாபித்தே [ஆத்மாவுக்குள் உட்புகுந்தே] செய்ய வேணும். அது இயலாது.] எனவே,

"இவனை ஆயுதங்கள் வெட்டுவதில்லை, அக்நி கொளுத்துவதில்லை, ஜலம் நனைப்பதில்லை, காற்று உலர்த்துவதில்லை."

[கீதை 2–23]

अच्छेद्योऽयमदाह्योऽयं अक्लेद्योऽशोष्य एव च।
[1]नित्यः सर्वगतः स्थाणुरचलोऽयं सनातनः।।"[1]

(गीता 2-23, 24)

इति गीतानुसारात्[2] अच्छेद्यत्वादिगुण[3]युक्तत्वं अस्य अनुसन्धेयम्।

असौ ज्ञानाश्रयश्च। "अहमिदं जानामि" इति प्रत्यक्षेण[4] ज्ञानाश्रयतया[5] प्रतिपन्नत्वात्।

"अथ यो वेद इदं जिघ्राणि इति स आत्मा", (छा. 8-12-4)

"मनसैवैतान् कामान् पश्यन् रमते",(छा. 8-12-5)

"न पश्यो मृत्युं पश्यति", (छा. 7-26-2)

"विज्ञातारं अरे केन विजानीयात्",(बृ. 6-5-15)

"जानात्येवायं पुरुषः", (बृह. 4.4.14)

"एष हि द्रष्टा श्रोता घ्राता रसयिता मन्ता बोद्धा[6] कर्ता विज्ञानात्मा पुरुषः",(प्रश्न. 4-9)

"एवमेवास्य परिद्रष्टुः", (प्रश्न. 6-5)

"प्रज्ञया वाचम्" (कौषी. 3.6)

इति श्रुतत्वाच्च न चास्य चैतन्यं आगन्तुकम्।

"जानात्येवायं पुरुषः", (बृह. 4.4.14)

---

1. T1, G2 omit नित्यः.....सनातनः
2. T1 गीतोपदेशानुसारत्वात्
   T2 गीतोनुसारत्वात्
3. G1 छेद्यत्वादिगुणविजातीयत्व
   T2 अच्छेद्यत्वादिगुणविसजातीयत्व
4. G2 प्रत्यक्ष
5. T1 ज्ञानाधारतया
6. G1 भोक्ता





"ஆத்மா வெட்டப்பட முடியாதவன், கொளுத்தப்பட முடியாதவன், நனைக்கப்பட முடியாதவன், உலர்த்தப்பட முடியாதவன், எனவே அவன் நித்யன், எங்கு வேண்டுமானாலும் உட்புகும் தன்மையுள்ளவன், நிலைத்த தன்மையுள்ளவன், உபாதியினாலுங்கூடச் சலனம் அடையாதவன், எவ்வளவு தொன்மையானவனாக இருந்தாலும் புதியவனைப் போல் ஆனந்தமளிப்பவன்."

[கீதை 2–24]

என்ற கீதாவசநங்களையநுஸரித்து அச்சேத்யத்வாதி [வெட்டப்பட முடியாமை முதலிய] குணங்களோடு கூடியவன் இவன் என்று அனுஸந்திக்ககப்பட வேண்டியவனாகிறான்.

இவன் ஜ்ஞாநத்துக்கு ஆஶ்ரயமாகவுமிருக்கிறான், 'நான் இதை அறிகிறேன்' என்று ப்ரத்யக்ஷத்தால் ஜ்ஞாநத்துக்கு இருப்பிடமாக அறிப்படுகிறபடியால்.

"எவன் இதை முகர்கிறேன் என்று அறிகிறானோ அவன் ஆத்மா" [சாந்.உ.8–12–4]

'மனத்தால் இந்த விரும்பப்பட்ட பொருட்களைப் பார்த்து மகிழ்கிறான் [சாந். உ.8–12–5]

'ப்ரஹ்மத்தை மனத்தில் ஸாக்ஷாத்கரிப்பவன் ம்ருத்யுவாகிற ஸம்ஸாரத்தைப் பார்க்கிறானல்லன்'

[சாந். 7–26–2]

'விஜ்ஞாநத்தையுடையவனான இவனை எந்த மார்க்கத்தால் நாம் அறிய முடியும்?' [ப்ருஹ. 6–5–15]

"அறிபவனாகவே உள்ளான் இந்தப் புருஷன்' [ப்ருஹ.]

"இந்தப் புருஷனோவென்றால் பார்ப்பவன், கேட்பவன், முகர்பவன், நுகர்பவன், நினைப்பவன், அறிபவன், செயல்படுபவன், விஜ்ஞாநஸ்வரூபன்' [ப்ரஶ. 4–9]

'இப்படியே இந்தப் பார்ப்பவனுடைய' [ப்ரஶ். 6–5]

'தர்மபூதஜ்ஞாநத்தால் வாகிந்த்ரியத்தைக் கிட்டி'

[கௌஷீ 3–6].

என்று ஶ்ருதிகளில் ஓதப்பட்டிருப்பதாலும் இவனுடைய சைதந்யமானது [ஜ்ஞாநமானது] ஆகந்துகமன்று [வந்தேறியன்று].

'அறிபவனாகவே உள்ளான் இந்தப் புருஷன்"

[ப்ருஹ. 4–4–14]

"न हि विज्ञातुः विज्ञातेः विपरिलोपो विद्यते।"
(बृह. 4-3-30)

[1]"न हि द्रष्टु दृष्टेः विपरिलोपो विद्यते"[1]।
(बृह. 4-3-23)

[2]इति च आत्मनो ज्ञानायोगस्य तदनित्यतायाश्च श्रुत्यैव निषिद्धत्वात्।[2] विज्ञाननित्यत्वेऽपि अस्य न सर्वज्ञतापत्तिः सङ्कोचविकासलक्षणपरिणामवत्त्वात् तस्य। [3]तच्च कर्मकृतं परिणामवत्त्वं पराशरेण –

"तया तिरोहितत्वाच्च शक्तिः क्षेत्रज्ञसंज्ञिता।
सर्वभूतेषु[3] भूपाल तारतम्येन वर्तते॥
अप्राणवत्सु[4] स्वल्पासा स्थावरेषु ततोऽधिका।
सरीसृपेषु तेभ्योऽपि" (वि.पु. 6-7-63, 64)

इति[5] समभ्यधायि। सङ्कोचविकासौ नाम ज्ञानस्य विषयासम्बन्ध-सम्बन्धलक्षणम्। इन्द्रियासम्बन्ध-सम्बन्धानुबन्धिनौ च। ज्ञानं नाम स्वाश्रयं प्रत्येव [6]स्वविषयप्रकाशकत्वलक्षणम्। ज्ञानाश्रयत्वाभिधानादेव कर्तृत्वभोक्तृत्वसम्भवः। तयोः ज्ञानावस्थाविशेषत्वात्[7]। ज्ञानस्य विषयग्रहणानन्तरं अवस्थाविशेषाणामेव इच्छाद्वेष[8]प्रयत्न[9]क्रियाभोग[10]संज्ञया व्यपदिष्टत्वात्[11]।

1. T1, G2 omit न...विद्यते
2. broken in T1
3. G1 omit तच्च...सर्वभूतेषु
4. T1 G2 अप्राणिमत्सु
5. G1 इत्येतत्
6. G1 omits स्व
7. G1 °विषयग्रहणत्वात्
8. T1, G2 omits
9. G1 प्रयतन
10. G1 क्रोध
11. G1, T2 अप्युपदिष्टत्वात्





'அறிபவனாயுள்ள ஜீவாத்மாவின் அறிவுக்கு அழிவு இல்லை' [ப்ருஹ. உ. 4–3–30]

'பார்ப்பவனாயுள்ள ஜீவாத்மாவின் பார்வைக்கு அழிவு இல்லை' [ப்ருஹ. 2. 4–3–23]

என்று ஆத்மாவின் ஜ்ஞாநமின்மையும் அந்த ஜ்ஞாநத்தின் அநித்யத்வமும் ஶ்ருதியினாலேயே நிஷேதிக்கப்பட்டுள்ளது [இல்லை செய்யப்பட்டுள்ளது]. விஜ்ஞாநமானது நித்யமாய் இருந்தாலுங்கூட இவனுக்கு ஸர்வஜ்ஞத்வம் வாராது, ஸங்கோசம் [சுருக்கம்] விகாஸம் [விரிவு] என்ற வடிவத்தில் உள்ள பரிணாமமானது [மாறுதலானது] விஜ்ஞாநத்துக்கு இருக்கிறபடியால். தர்மபூதஜ்ஞாநத்துக்குப் பரிணாமம் உடைமையானது [மாறுதலடையும் தன்மையானது] உள்ளது என்று பராஶரரால் சொல்லப்பட்டுள்ளது: [அந்த ஶ்லோகங்கள் வருமாறு]

"கர்மரூபமான அவித்யையினால் க்ஷேத்ரஜ்ஞன் என்ற பெயருடைய ஶக்தியானது மறைக்கப்பட்டுள்ளது எனவே தர்மபூதஜ்ஞாநமானது ஸர்வபூதங்களிலும் ஏற்றத் தாழ்வுடன் இருக்கிறது.

ப்ராணனற்ற கல், கட்டை முதலியவற்றில் ஸ்வல்பமாக உள்ளது. செடி, கொடி முதலிய ஸ்தாவரங்களில் அதைவிடச் சிறிது அதிகமாகவுள்ளது. ஊர்வனவற்றில் அதைவிட அதிகமாகவுள்ளது." [வி.பு. 6–7–63,64]

ஜ்ஞாநத்துக்கு ஸங்கோசமாவது விஷயஸம்பந்தமின்மை, விகாஸமாவது விஷயஸம்பந்தமுடைமை. அல்லது ஜ்ஞாநத்துக்கு ஸங்கோசமாவது இந்த்ரியத்துடன் ஸம்பந்தம் இன்மை, விகாஸமாவது இந்த்ரியத்துடன் ஸம்பந்தம் உடைமை. ஜ்ஞாநம் என்பது தன்னுடைய ஆஶ்ரயமான [ஆதாரமான] ஆத்மாவைக் குறித்தே தன்னுடைய விஷயத்தை ப்ரகாஶப்படுத்தும் வஸ்துவாகும். ஜ்ஞாநாஶ்ரயத்வம் இருப்பதாலேயே ஜீவாத்மாவுக்குக் கர்த்ருத்வமும் போக்த்ருத்வமும் ஏற்படுகின்றன, அவைகளும் ஜ்ஞாநத்தின் அவஸ்தாவிஶேஷங்களாக [ஓரோநிலைகளாக] இருக்கிறபடியால் ஜ்ஞாநமானது விஷயக்ரஹணத்துக்குப் பிறகு அடையக் கூடிய அவஸ்தாவிஶேஷங்களே [நிலை வேறுபாடுகளே] இச்சை, த்வேஷம், ப்ரயத்நம், க்ரியை, போகம் என்ற பெயர்களையடைகின்றன.

केचित् गुणनामेव कर्तृत्वं नात्मनः इत्याहुः, तदयुक्तम्। तदानीं अस्य शास्त्रवश्यत्व[1]–सुकृतदुष्कृत–फलभूत–सुखदुःखोपभोगयोः[2] अभावप्रसङ्गात्। नापि बुद्धेः भोगाश्रयत्वम् आशङ्कनीयम्[3]। तथाहि अयथाज्ञानं संसारस्य हेतुः, तत्त्वज्ञानं तु[4] मोक्षस्य। तदुभयं यदाश्रयं भवति तस्यैव बन्धो मोक्षश्च। अन्यथा अन्यकृत–सुकृतदुष्कृत फलयोः अन्यानुभाव्यत्व प्रसङ्गात्। यदि बुद्धेरेव तदुभयं भवेत् बन्ध–मोक्षावपि तस्याः एव स्यातामिति पुरुषाश्रयत्वमेव युक्तम् भोगस्य। तथोक्तं–

"पुरुषः सुखदुःखानां भोक्तृत्वे हेतुरुच्यते"

(गीता. 13–20)

इति। अस्य सांसारिकप्रवृत्तिषु कर्तृत्वं[5] गुणसंसर्गकृतं, न तु[6] स्वरूपप्रयुक्तम्। कर्तृत्वमपि ईश्वरायत्तम्।

"कर्ता शास्त्रार्थवत्वात्", (ब्र.सू. 2-3-33)

"पुण्यः पुण्येन कर्मणा भवति[7] पापः पापेन [8]कर्मणा भवति[8]" (बृह. 6-4-5)

इति आत्मनः कर्तृत्वं उक्त्वा,

---

1. G1 शास्त्रोपयुक्त
2. G1 दुःखभोगयोः
   G2 दुःखयोः
3. G1 omits
4. G1 omits तु
5. G1 कर्तृकत्वं
6. G1 omits तु
7. T2 omits भवति
8. G2 only reads कर्मणा भवति





சிலர் [ஸாங்க்யர்கள்] குணங்களுக்கே [குணத்ரய ஆத்மகமாயுள்ள ப்ரக்ருதிக்கே] கர்த்ருத்வம் உள்ளது, ஆத்மாவுக்கில்லை என்கிறார்கள், அது தவறு. அப்பொழுது ஶாஸ்த்ரத்திற்கு வஶப்பட்டிருத்தல், நற்செய்கை தீய செய்கை இவற்றின் பலன்களான சுகதுக்கங்களை அனுபவித்தல் என்பவை இவனுக்கு வாராமல் போகும். புத்திக்கு போகாஶ்ரயத்வமும் ஆஶங்கிக்கப்படக்கூடாது. அதை விளக்குகிறோம் – அயதாஜ்ஞாநம் [அஜ்ஞாநம்] ஸம்ஸாரத்துக்கு ஹேது. தத்த்வஜ்ஞாநமோ என்றால் மோக்ஷத்துக்கு ஹேது. அவ்விரண்டும் எவனை ஆஶ்ரயமாக [இருப்பிடமாக]க் கொண்டுள்ளனவோ அவனுக்கே பந்தமும் மோக்ஷமும் வருகின்றன. இல்லையெனில் ஒருவனால் செய்யப்பட்ட நற்செய்கை, தீய செய்கைகளின் பலன்களை மற்றொருவன் அனுபவிக்கும்படி நேரும். புத்திக்கே நற்செய்கை, தீய செய்கைகளின் பலன்கள் வருகின்றன என்றால் அஜ்ஞாநமும் தத்த்வஜ்ஞாநமும் கூட புத்திக்கே வருமாகையால் பந்தமோக்ஷங்களும் கூட அந்த புத்திக்கே வரவேண்டியதாக ஆகும். ஆனால் அசேதநமான புத்திக்கு பந்தமோக்ஷங்களோ ஜ்ஞாந அஜ்ஞாநங்களோ வரவியலாது. எனவே போகமானது புருஷனை ஆஶ்ரயித்துள்ளது என்பதே பொருத்தமானது. இந்த அர்த்தமானது –

'புருஷன் ஸுகதுக்கங்களின் போகத்துக்கு ஆஶ்ரயம் என்று சொல்லப்படுகிறான்' [கீதை 13–20]

என்று பகவத்கீதையில் சொல்லப்பட்டுள்ளது. இவனுக்கு ஸாம்ஸாரிகப்ரவ்ருத்திகளில் [உலகவாழ்க்கையில் செய்யும் செய்கைகளில்] கர்த்ருத்வமானது [செயல்படும் தன்மையும்] ஸத்வரஜஸ் தமஸ்ஸுக்களாகிற குணங்களின் சேர்க்கையால் வருகிறது; இயற்கையாக வந்ததன்று. அந்த கர்த்ருத்வமும் ஈஶ்வராதீநமானது [பகவானுக்கு உட்பட்டது].

"ஜீவாத்மாவே செயல்களுக்குக் கர்த்தா, விதிநிஷேத ஶாஸ்த்ரங்கள் ப்ரயோஜநமுள்ளவைகளாக ஆக வேண்டுகையால்' [ப்ர. ஸூ 2–3–33]

'புண்யம் செய்பவன் புண்யகர்மத்துடன் பிறக்கிறான், பாபம் செய்பவன் பாப கர்மத்துடன் பிறக்கிறான்" [ப்ருஹ. உ. 6–4–5]

என்று ஆத்மாவுக்குக் கர்த்ருத்வத்தைக் கூறி,

"परात्तु तच्छ्रुतेः", (ब्र.सू. 2-3-40)
"एष एव साधुकर्म कारयति तं यं
येभ्यो लोकेभ्यः उन्निनीषति।
एष एव[1] असाधुकर्म कारयति
तं यमधो निनीषति॥" (कौषी. 3-64)

इति [2]तत्कर्तृत्वस्य पराधीनत्व[3]विधानात्॥

ननु आत्मा[4] ज्ञानाश्रयः[5] चेत्,
"विज्ञानं यज्ञं तनुते", (तै.उ.आन. 5)
"आत्मा[6] विज्ञानमयः", (तै.उ.आन. 4)
"यो विज्ञाने तिष्ठन्" (बृह. 5-7-26))

इति ज्ञानमात्रतया कथं व्यपदिश्यते इति चेत् ज्ञानान्तरनिरपेक्षस्वप्रकाशत्वात्[7] ज्ञानस्य[8] सारभूत धर्मत्वात् ज्ञाननिरूपणीयत्वाच्च तथा व्यपदेशो युक्तः। तथोक्तं भाष्यकारैः

"ज्ञानमात्रव्यपदेशस्तु ज्ञानस्य प्रधान-[9]गुणत्वात्
स्वरूपानुबन्धित्वेन स्वरूपनिरूपक[9]-गुणत्वात्[10]
ज्ञानवत् स्वप्रकाशत्वाद्वा[11] उपपद्यत" (वेदान्तदीपे)

इति ॥

---

1. G1 एव
2. G1, T2 omit तत्
3. G1, T2 पराधीनता
4. T2 आत्मनो
5. G1, T2 ज्ञानाश्रयत्वं
6. G2 adds
7. T1 स्वप्रकाशकत्वात्
8. T1 G2 ज्ञान
9. G1 adds गुणत्वात्....निरूपक
10. T1 T2 धर्मांशत्वात्
11. G1 स्वप्रकाशत्वादि



'ஜீவாத்மாவின் கர்த்ருத்வம் பராதீநமாகவன்றோ உள்ளது; அப்படி ஶ்ருதிகளில் ஓதப்படுவதால்' [ப்ர.ஸூ.2–3–40]

'அந்த பகவான் தன்னிடம் அதிமாத்ரமான ஆநுகூல்யம் உடையவனை இவ்வுலகங்களைத் தாண்டி மிகவுயர்ந்த ஸ்தாநத்தில் வைக்க விரும்பியவனாய், தானே அவனை உயர்ந்த செயல்களைச் செய்விக்கிறான். தன்னிடம் அதிமாத்ரமான ப்ராதிகூல்யத்தையுடையவனைக் கீழே தள்ள விரும்பியவனாய், தானே தாழ்ந்த செயல்களைச் செய்விக்கிறான்.' [கௌஷீ. 3–64]

என்று ஜீவாத்மாவின் கர்த்ருத்வமானது பராதீநம் என்று ப்ரமாணங்களில் காட்டப்பட்டுள்ளது.

[வ்யக்திவிஶேஷர்களின் கர்த்ருத்வம் பராதீநம் என்று இந்த ஶ்ருதிவாக்யம் காட்டுகிறது. அவர்களைக் குறித்து பகவான் ப்ரேரகனாக [தூண்டுபவனாக] இருக்கிறான். மற்ற வ்யக்திகளின் கர்த்ருத்வமானது பகவானுடைய அனுமதியினால் ஏற்படுகிறது. இப்படி அனுமதி முன்னாகச் செயல்படுகையே கர்த்ருத்வத்தின் பராதீநத்வமாகும். பகவானுடைய அநுமந்த்ருத்வமே நியந்த்ருத்வம் என்று எம்பெருமானாருடைய திருவாக்கு [ஸ்ரீபாஷ்யம் 2–2–3] உரைக்கிறது.]

நநு, ஆத்மாவானவன் ஜ்ஞாநாஶ்ரயன் என்றால்,
'ஜ்ஞாநஸ்வரூபனான ஜீவாத்மா யஜ்ஞத்தை விஸ்தரிக்கிறான்' [தை. உ. ஆந. 5]
'ஆத்மா விஜ்ஞாநம் மிகுந்தவன்' [தை.உ. ஆந.4]
'எவன் விஜ்ஞாநஸ்வரூபனான ஜீவாத்மாவில் நிற்கிறானோ' [ப்ருஹ. 5–7–26]

முதலிய வாக்யங்களில் எப்படி ஜ்ஞாநமாத்ரனாக கூறப்படுகிறான் என்று கேட்டால், இன்னொரு ஜ்ஞாநத்தின் உதவியில்லாமல், தான் ப்ரகாஶிக்கிறபடியாலும், ஜ்ஞாநமானது ஸாரபூதமான [ப்ரதாநபூதமான] தர்மமானபடியால் ஜ்ஞாநத்தால் நிரூபிக்கப்பட வேண்டியவனாகச் சொல்லுதல் பொருத்தமாகும். ஸ்ரீபாஷ்யகாரரால்

'ஜ்ஞாநமாமானது ப்ரதாநமான குணமாக இருந்துகொண்டு ஸ்வரூபத்தை விட்டுப் பிரியாதபடியால் ஸ்வரூபநிரூபக குணமாகையாலோ, அல்லது ஜ்ஞாநத்தைப் போல் தானே ப்ரகாஶிக்கிறபடியாலோ ஜ்ஞாநமாத்ர வ்யபதேஶமானது பொருந்துகிறது' [வேதாந்ததீபம்]

என்று சொல்லப்பட்டிருக்கிறது.

अयं[1] नियाम्यश्च। नियाम्यत्वं नाम ईश्वरबुद्ध्यधीन-सर्वप्रवृत्तिकत्वम्। तच्च,

"य अत्मानं अन्तरो यमयति", (बृह. 5-7-22)

"अन्तःप्रविष्टः शास्ता जनानां",(तै.आर. 3-11)

"प्रशासितारं सर्वेषां", (मनुस्मृति 12-122)

"शास्ता चराचरस्य ईशः[2]", (?)

"शास्ता विष्णुः अशेषस्य" (वि.पु. 1-17-20)

इति श्रुति[3]स्मृत्यादिना कथितम्॥

धार्यश्च। धार्यत्वं नाम भगवत्स्वरूप[4]सङ्कल्पाधीन स्वसत्ताकत्वम्। तथोक्तं –

"एष सेतुर्विधरणः", (बृह. 6-4-22)

"को ह्येवान्यात् कःप्राण्यात् यदेष आकाश आनन्दो[5] न स्यात्", (तै.उ.आन. 7)

"तत्सर्वं प्रज्ञाने[6] प्रतिष्ठितं", (?)

"मेरोरिवाणुः[7]", (?)

"यस्यायुतायुतांशांशे[8] विश्वशक्तिरियं स्थिता" (वि.पु. 1-9-53)

इत्यादिभिः॥

---

1. G1 omits अयम्
2. G1 एकः
3. T1 omits श्रुति
4. T1 भगवतः
5. G1 omits आनन्दो
6. G1 विज्ञाने
7. G1 adds यस्यैतत्
8. G1 शतांशांशे



இந்த ஜீவாத்மா பகவானால் நியமிக்கப்படுமவனாகவும் இருக்கிறான். நியாம்யத்வம் என்றால் ஈஶ்வரனுடைய நினைவிற்கு ஏற்ப எல்லாச் செயல்களையும் உடையவனாக இருத்தல். அந்த நியாம்யத்வமும் ஶ்ருதிஸ்ம்ருதிபுராணங்களில் சொல்லப் பட்டுள்ளது. அவை வருமாறு–

'எவன் ஆத்மாவை உள்ளிருந்து நியமிக்கிறானோ' [ப்ருஹ. 5–7–22]

'சேதநர்களுக்கு உள்ளே புகுந்திருப்பவன், அவர்களுக்கு நியந்தா' [தை. ஆர. 3–11]

'யாவரையும் நியமிப்பவனாயுள்ள அந்தப் பரமாத்மாவை' [மநுஸ்ம்ருதி 12–122]

'அசையுமது அசையாததாயுள்ள ஜகத்துக்கு நியந்தா அந்த ஈஶன்' [?]

'யாவற்றுக்கும் நியந்தா விஷ்ணு' [வி.பு. 1–17–20].

இந்த ஜீவாத்மா பகவானால் தரிக்கப்படுபவனாகவும் உள்ளான். தார்யத்வம் என்றால் பகவத்ஸ்வரூபத்துக்கும் ஸங்கல்பத்துக்கும் அதீநமாகத் தன்னுடைய ஸத்தையை [இருப்பை] உடைமை. இவ்வர்த்தம் ஶ்ருதி, ஸ்ம்ருதி, புராணங்களில் காட்டப்பட்டுள்ளது. அவை வருமாறு –

'அந்தப் பரமாத்மா தரிக்கக் கூடிய பாலம்' [ப்ருஹ. 6–4–22]

'நிர்மலமானவனாய் ஆநந்தஸ்வரூபனான பரமாத்மா தரிக்கவில்லை எனில் எவன் இந்த ஜீவாத்மாவை பத்ததஶையிலும் முக்ததஶையிலும் தரித்து ரக்ஷிப்பான்?' [தை. ஆந. 7]

'அவை யாவும் ப்ரஜ்ஞாநஸ்வரூபனான பரமாத்மாவில் நிலைபெற்றுள்ளன'[?]

'மேருமலையைப் போல் பெரியவனான பரமாத்மாவுக்கு இந்த ஜகத்து முழுவதும் அணுவைப் போன்றது தாரண விஷயத்தில்' [?]

'எந்த பகவானின் பத்துக் கோடியில் ஒரு அம்ஶத்தின் அம்ஶத்தால் சேதநாசேதநாத்மகமான இந்த ஜகத்து முழுவதும் தரிக்கப்படுகிறதோ' [வி. பு. 1–9–53]

[1]शेषभूतश्च। शेषत्वं नाम स्वातिशयाधानाय भगवतो यथेष्टं उपादानार्हत्वम्।

"योऽहस्मि स सन् यजे", (तै.यजुर्ब्राह्मणे 3-7)

"यस्यास्मि [2]न तमन्तरेमि[2]", (तै.यजुर्ब्राह्मणे 3-7)

"पतिं विश्वस्यात्मेश्वरं [3]शाश्वतं शिवमच्युतम्[3]",
(तै.नारा. 11-25)

"प्रधानक्षेत्रज्ञपति: गुणेश:", (श्वेता. 6-16)

"स कारणं करणाधिपाधिप: (श्वेता. 6-9)

"आत्मदास्यं हरेस्स्वाम्यं", (विष्णुतत्त्वे)

"दासभूता: स्वतस्सर्वे हि आत्मान: परमात्मन:।
नान्यथा लक्षणं तेषां बन्धे मोक्षे तथैव च॥",
(हारीतस्मृति)

"कृष्णस्य हि कृते भूतमिदं विश्वं चराचरम्",
(भार.सभा. 38.23)

"उपादत्ते सत्तास्थितिनियमनाद्यै: चिदचिती[4]॥"
(श्रीरङ्गराजस्तवे उत्तरशतके 87)

इत्यादिभि: तथात्वमवगतम्[5]। अस्येदं शेषत्वं तु[6] गृहक्षेत्रपुत्रादीनामिव पृथक्सिद्धं न भवति। किन्तु शरीरिविषये शरीर[7]शेषत्ववत् अपृथक्सिद्धम्।

"यस्यात्मा शरीरं [8]यस्य पृथिवी शरीरं[8]"
(बृह.काण्व. 5-7-22)

---

1. T2 adds एष
2. G1, T1, T2 omit न तमन्तरेमि:
3. G1 T1G2 omit शाश्वतं शिवमच्युतं
4. T1 G2 चिदचितौ
5. T2, G1 सिद्धं
6. G1, T2 omits तु
7. T2 विषय शरीरि
8. G2 omits यस्य......शरीरं



இந்த ஜீவாத்மா அந்த எம்பெருமானுக்கு ஶேஷபூதனாகவும் உள்ளான். ஶேஷத்வம் என்றால் தனக்கு அதிஶயத்தை [மேன்மையை] உண்டாக்குவதற்காக பகவானால் விருப்பப்படி கைக்கொள்ளப்படுவதற்குத் தகுந்தவனாயிருத்தல்.

"எந்த நான் உள்ளேனோ அந்த நான் பகவானுக்கு ஶேஷனானபடியால் அவனை யஜிக்கிறேன் [பூஜிக்கிறேன்]
[தை. யஜுர்வேதப்ராஹ்மணம் 3–7]

'எவனுக்கு நான் ஶேஷபூதனாகவுள்ளேனோ அவனை நான் பிரிகிறேனல்லேன்' [தை. யஜுர்.ப்ராஹ். 3–7]

'சேதனாசேதனாத்மகமான ஜகத்துக்கு ஶேஷியாய், தனக்குத் தானே ஈஶ்வரனாய், நித்யனாய், மங்களகரனாய் தன் ஸ்வபாவங்களிலிருந்து நழுவாதவனாய் உள்ள பகவானை"
[தை. நாரா. 11–25]

'ப்ரக்ருதிக்கும் ஜீவாத்மாவுக்கும் ஶேஷீ, ஸத்வம் ரஜஸ் தமஸ் என்ற குணங்களையாள்பவன்' [ஶ்வேதா 6–16]

'அந்த பகவான் ஜகத்துக்குக் காரணன், இந்த்ரியங்களுக்கு அதிபனான ஜீவாத்மாவுக்கு அதிபன் = ஶேஷீ.'
[ஶ்வேதா 6–9]

'ஆத்மாவினுடைய ஶேஷத்வத்தையும் ஹரியினுடைய ஶேஷித்வத்தையும்' [விஷ்ணுதத்த்வம்]

'ஆத்மாக்கள் இயற்கையில் பரமாத்மாவுக்கு ஶேஷபூதர்கள். அவர்களுக்கு பந்தத்திலும் [ஸம்ஸாரத்திலும்] மோக்ஷத்திலும் இந்த ஶேஷத்வத்தைத் தவிர வேறு லக்ஷணமில்லை.' [ஹாரீதஸ்ம்ருதி]

'க்ருஷ்ணனுக்கு ஶேஷமாக இந்த சராசரமான ஜகத்து உள்ளது' [பார. ஸபா. 38–23]

'பகவான், சிதசித்துக்களை ஸத்தா ஸ்திதி நியமநம் முதலியவற்றால் ஸ்வீகரிக்கிறான்' [ஸ்ரீரங்க. உத்தர. 87].

இப்படிப்பட்ட வசநங்களால் ஜீவாத்மாவினுடைய ஶேஷத்வமானது அறியப்படுகிறது. பகவானைக் குறித்து இவனுடைய ஶேஷத்வமானது க்ருஹம், க்ஷேத்ரம் [நிலம்], புத்ரன் முதலியவற்றைப் போல் ப்ருதக்ஸித்தமாக [விட்டுப் பிரியக் கூடியதாக] இல்லை, ஆயின் ஶரீரியை [ஆத்மாவை]க் குறித்து ஶரீரத்தின் ஶேஷத்வம் இருக்கிறாற்போல் அப்ருதக்ஸித்தமாக [விட்டுப் பிரியாததாக] இருக்கிறது.

'எவனுக்கு ஆத்மா ஶரீரமோ, எவனுக்கு ப்ருதிவீ ஶரீரமோ"
[ப்ருஹ.காண்வ 5–7–22]

"पूः प्राणिनः सर्वगुहाशयस्य", (आपस्त.धर्म.1.8.22.4)
"यानि मूर्तान्यमूर्तानि [1]यान्यत्रान्यत्र वा क्वचित्।
सन्ति वै वस्तु जातानि[1] तानि सर्वाणि तद्वपुः॥",
(वि.पु. 1-22-86)
"तत्सर्वं वै हरेस्तनुः[2]", (वि.पु. 1-22-38)
"परस्य ब्रह्मणो रूपं पुरुषः प्रथमं द्विज"
(वि.पु. 1-2-15)

इत्यादिषु[3] परमात्मानं प्रति प्रत्यगात्मनः शरीरत्वविधानात्। तस्मात्[4] आत्मस्वरूपं देहादिविलक्षणं, अजडं, आनन्दरूपं, नित्यं, अणुपरिमाणं, अव्यक्तं[5], अचिन्त्यं, अनवयवं, अविकार्यं [6], अच्छेद्यं, अदाह्यं, अक्लेद्यं[7], अशोष्यं, ज्ञानगुणकं, कर्तृत्वभोक्तृत्वयुक्तं, भगवतो नियाम्यं धार्यं शेषभूतञ्चेति सिद्धम्॥

इदं च आत्मस्वरूपं बद्ध-मुक्त-नित्यभेदेन त्रिविधम्।

तत्र बद्धाः[8] अनादिमाया[9]तिरोहित-स्वस्वरूपाः[10] अन्यथाज्ञानविपरीतज्ञानदूषिताः तदनुगुणरागद्वेषादि-पारवश्योल्लङ्घितभगवदाज्ञारूप विधिनिषेधसमाचाराः

1. G1 adds यान्यत्र.....जातानि
2. G1 हरेर्वपुः
3. T2,G1 इत्यादिभिः
4. G2 omits
5. G1 अव्यक्तरूपं
6. T1 G2 अविकारं
7. T1 G2 अक्षोभ्यं
8. G2 add हि
9. G1 मायया
10. G2 स्वरूपाः







'எல்லாருடையவும் ஹ்ருதயகுஹையில் வாழ்பவனான பகவானுக்கு ப்ராணிகள் யாவும் ஶரீரம்'
[ஆபஸ்தம்பதர்ம ஸூத்ரம் 1-8-22-4]

'எவைகள் நம் கண்களால் காணத்தக்க மூர்த்தங்களான [அளவுபட்ட பரிமாணமுள்ள] வஸ்து ஸமூஹங்களோ, எவைகள் நம் கண்களால் காணமுடியாத அமூர்த்தங்களான [அணுபரிமாணம் அல்லது விபுபரிமாணம் உள்ள] வஸ்து ஸமூஹங்களோ அவைகள் யாவும் அவனுடைய ஶரீரங்கள்"
[வி.பு. 1-22-86]

'அவை யாவும் ஹரியின் ஶரீரம்' [வி.பு. 1-22-38]

'ஓ அந்தணனே பரப்ரஹ்மத்தினுடைய முதல் ஶரீரம் ஜீவாத்மா' [வி.பு. 1-2-15]

இத்யாதி வசநங்களில் பரமாத்மாவைக் குறித்து ஜீவாத்மாவுக்கு ஶரீத்வமானது விதிக்கப்படுவதால். எனவே ஆத்மஸ்வரூபமானது தேஹாதிவிலக்ஷணம், அஜடம் [ஸ்வயம்ப்ரகாஶம்], ஆநந்தரூபமுடையது, நித்யம், அணு பரிமாணமுடையது, அவ்யக்தம் [கண் முதலிய இந்த்ரியங் களால் அறியத்தக்கதன்று] அசிந்த்யம் [குடம், துணி முதலியவைகளுக்குச் சமமாக நினைக்கத் தக்கதன்று], அநவயவம் [அவயவங்களற்றது], அவிகார்யம் [மாறுதல் அற்றது], அச்சேத்யம் [வெட்டப்படமுடியாதது], அதாஹ்யம் [கொளுத்தப்பட முடியாதது], அக்லேத்யம் [நனைக்கப் படமுடியாதது], அஶோஷ்யம் [உலர்த்தப்பட முடியாதது], ஜ்ஞாநகுணகம் [ஜ்ஞாநத்தை குணமாகக் கொண்டது], கார்த்ருத்வம், போக்த்ருத்வம் என்ற குணங்களையுடையது; பகவானுக்கு நியாம்யம் [நியமிக்கப் படுவது], தார்யம் [தரிக்கப்படுவது], சேஷபூதம் [அடிமைப் பட்டது] என்று ஸ்தாபிக்கப்பட்டது.

இந்த ஆத்மஸ்வரூபம் பத்த – முக்த – நித்ய பேதத்தால் மூன்று விதமாகவுள்ளது.

அவர்களில் பத்தர்களாவார் – அநாதிமாயையினால் [ப்ரக்ருதியினால்] மறைக்கப்பட்ட ஸ்வஸ்ரூபத்தை யுடையவர்கள்; அந்யதாஜ்ஞாநம் விபரீதஜ்ஞாநம் என்ற இவற்றால் கெடுக்கப்பட்டவர்கள்; அந்த அஜ்ஞாநத்துக்கு அநுகுணமாக உண்டான ராகம் [ஆசை], த்வேஷம் [வெறுப்பு] முதலிய தீயகுணங்களுக்குப் வஶப்பட்டுக் கிடப்பதால் பகவனின் கட்டளைகளாய், செய் என்றும் செய்யாதே என்றும் கூறும் விதிநிஷேதங்களாயுள்ள

"पूः प्राणिनः सर्वगुहाशयस्य", (आपस्त.धर्म.1.8.22.4)

"यानि मूर्तान्यमूर्तानि [1]यान्यत्रान्यत्र वा क्वचित्।
सन्ति वै वस्तु जातानि[1] तानि सर्वाणि तद्वपुः॥",
(वि.पु. 1-22-86)

"तत्सर्वं वै हरेस्तनुः[2]", (वि.पु. 1-22-38)

"परस्य ब्रह्मणो रूपं पुरुषः प्रथमं द्विज"
(वि.पु. 1-2-15)

इत्यादिषु[3] परमात्मानं प्रति प्रत्यगात्मनः शरीरत्व-विधानात्। तस्मात्[4] आत्मस्वरूपं देहादिविलक्षणं, अजडं, आनन्दरूपं, नित्यं, अणुपरिमाणं, अव्यक्तं[5], अचिन्त्यं, अनवयवं, अविकार्यं [6], अच्छेद्यं, अदाह्यं, अक्लेद्यं[7], अशोष्यं, ज्ञानगुणकं, कर्तृत्वभोक्तृत्वयुक्तं, भगवतो नियाम्यं धार्यं शेषभूतञ्चेति सिद्धम्॥

इदं च आत्मस्वरूपं बद्ध-मुक्त-नित्यभेदेन त्रिविधम्।

तत्र बद्धाः[8] अनादिमाया[9]तिरोहित-स्वस्वरूपाः[10] अन्यथाज्ञानविपरीतज्ञानदूषिताः तदनुगुणरागद्वेषादि-पारवश्योल्लङ्घितभगवदाज्ञारूप विधिनिषेधसमाचाराः

---

1. G1 adds यान्यत्र.....जातानि
2. G1 हरेर्वपुः
3. T2,G1 इत्यादिभिः
4. G2 omits
5. G1 अव्यक्तरूपं
6. T1 G2 अविकारं
7. T1 G2 अक्षोभ्यं
8. G2 add हि
9. G1 मायया
10. G2 स्वरूपाः



'எல்லாருடையவும் ஹ்ருதயகுஹையில் வாழ்பவனான பகவானுக்கு ப்ராணிகள் யாவும் *ஶரீரம்*'
[ஆபஸ்தம்பதர்ம ஸூத்ரம் 1–8–22–4]

'எவைகள் நம் கண்களால் காணத்தக்க மூர்த்தங்களான [அளவுபட்ட பரிமாணமுள்ள] வஸ்து ஸமூஹங்களோ, எவைகள் நம் கண்களால் காணமுடியாத அமூர்த்தங்களான [அணுபரிமாணம் அல்லது விபுபரிமாணம் உள்ள] வஸ்து ஸமூஹங்களோ அவைகள் யாவும் அவனுடைய *ஶரீரங்கள்*"
[வி.பு. 1–22–86]

'அவை யாவும் ஹரியின் *ஶரீரம்*' [வி.பு. 1–22–38]

'ஓ அந்தணனே பரப்ரஹ்மத்தினுடைய முதல் *ஶரீரம்* ஜீவாத்மா' [வி.பு. 1–2–15]

இத்யாதி வசநங்களில் பரமாத்மாவைக் குறித்து ஜீவாத்மாவுக்கு *ஶரீ*த்வமானது விதிக்கப்படுவதால். எனவே ஆத்மஸ்வரூபமானது தேஹாதிவிலக்ஷணம், அஜடம் [ஸ்வயம்ப்ரகாஶம்], ஆநந்தரூபமுடையது, நித்யம், அணு பரிமாணமுடையது, அவ்யக்தம் [கண் முதலிய இந்த்ரியங் களால் அறியத்தக்கதன்று] அசிந்த்யம் [குடம், துணி முதலியவைகளுக்குச் சமமாக நினைக்கத் தக்கதன்று], அநவயவம் [அவயவங்களற்றது], அவிகார்யம் [மாறுதல் அற்றது], அச்சேத்யம் [வெட்டப்படமுடியாதது], அதாஹ்யம் [கொளுத்தப்பட முடியாதது], அக்லேத்யம் [நனைக்கப் படமுடியாதது], அஶோஷ்யம் [உலர்த்தப்பட முடியாதது], ஜ்ஞாநகுணகம் [ஜ்ஞாநத்தை குணமாகக் கொண்டது], கர்த்ருத்வம், போக்த்ருத்வம் என்ற குணங்களையுடையது; பகவானுக்கு நியாம்யம் [நியமிக்கப் படுவது], தார்யம் [தரிக்கப்படுவது], சேஷபூதம் [அடிமைப் பட்டது] என்று ஸ்தாபிக்கப்பட்டது.

இந்த ஆத்மஸ்வரூபம் பத்த – முக்த – நித்ய பேதத்தால் மூன்று விதமாகவுள்ளது.

அவர்களில் பத்தர்களாவார் – அநாதிமாயையினால் [ப்ரக்ருதியினால்] மறைக்கப்பட்ட ஸ்வஸ்ரூபத்தை யுடையவர்கள்; அந்யதாஜ்ஞாநம் விபரீதஜ்ஞாநம் என்ற இவற்றால் கெடுக்கப்பட்டவர்கள்; அந்த அஜ்ஞாநத்துக்கு அநுகுணமாக உண்டான ராகம் [ஆசை], த்வேஷம் [வெறுப்பு] முதலிய தீயகுணங்களுக்குப் வஶப்பட்டுக் கிடப்பதால் பகவனின் கட்டளைகளாய், செய் என்றும் செய்யாதே என்றும் கூறும் விதிநிஷேதங்களாயுள்ள

तदनुरूपलब्ध[1]चतुर्विधशरीरप्रवेशाः तत्तच्छरीरोचित-विविधविचित्र-सुखदुःखभोगपरम्परोपेताः[2] निगदिताः।

मुक्ताः पुनः अनादिसंसारबन्ध निरन्तरानुभूत-बहुविध-दुःखपरम्परापरिक्षीणजनित-तज्जिहासया स्वगुरुसमाश्रयण-सम्प्राप्त-वेदान्तावगत-चिदचिदीशविवेकाः[2] समनन्तरानुष्ठित-त्रिविधत्यागपूर्वककर्माविर्भूत-तैलधारावदविच्छिन्नस्मृतिसन्तानरूपध्रुव[3]विशदप्रिय-भावनाप्रसादित-भगवद्प्रसादेन वा, अथवा[4] निर्हेतुक-सौहार्दविशेषेण आदौ यादृच्छिक सुकृतपरम्परां परिकल्पयतः[5] पश्चात् अमृतमयकरुणावर्षिणा[6] कटाक्ष जालेन[7] जननदशायां अभिषिञ्चतः[8], [9]तत्समनन्तरं निजगुणचरितादिषु स्वाभिमतेषु भागवतजनेषु च[10] अद्वेषरूपमहाफलं प्रतिपादयतः ततो निजगुणरूपचरित कथाश्रवणाभिमुख्यं उत्पादयतः[11] तदनु सात्विकजन सम्भाषणमहोदयं उपकुर्वतः तदुपदिष्टपरमश्रोत्रिय ब्रह्मनिष्ठवरिष्ठ-आचार्यपादारविन्दं उपसादयतः[12]

---

1. T2 तदपराधानुरूपलब्ध
2. G1 T2 परंपरोपेत
3. T1 G1 विवेक
4. T2 दृत
5. G2 यद्वा
6. G1 परम्परादीन् कल्पयत:
7. T2 G1 वर्षेण
8. T2 G1 जातेन
9. T1 अभिवार्षितञ्च
10. G1 T2 add here तदनु सात्विकजनसम्भाषण महोदयत:
11. G2 adds च
12. G2 उद्भावयत:







ஸமீசிநங்களான ஆசாரங்களை மீறினவர்கள், அதனால் ஏற்பட்ட புண்ய பாபங்களுக்கு அநுரூபமாகப் பெறப்பட்ட தேவர், மனிதர், விலங்கு, தாவரம் என்கிற நான்குவிதமான உடல்களிலும் நுழைந்திருப்பவர்கள், அந்தந்த உடல்களுக்கு ஏற்ற பல விதங்களாயுள்ள விசித்ரங்களான இன்பதுன்ப பரம்பரைகளையடைந்தவர்கள். இப்படி ஶ்ருதிஸம்ருதிகளில் கூறப்பட்டவர்களே பத்தர்களாவர்.

முக்தர்களாவார் – [இரண்டு வகைப்பட்டவர்கள். முதல்வகை] – அநாதியான ஸம்ஸாரபந்தத்தால் நிரந்தரமாக அனுபவிக்கப்பட்ட துக்கபரம்பரையினால் ஏற்பட்ட நலிவைக் கண்டு அதிலுண்டான வெறுப்பினால் தங்கள் குருவைச் சென்று நன்கு கிட்டுகிறார்கள். அவருடைய உபதேஶத்தால் வேதாந்தத்தை அறிந்தவர்களாய், சித் அசித்து ஈஶ்வரன் என்பவர்களைப் பற்றின விவேகத்தையுடையவர்களாக ஆகிறார்கள். பிறகு கர்த்ருத்வத்யாகம் [நான் செய்தேன் என்ற நினைவை விடுதல்], மமதாத்யாகம் [என்னுடைய செயல் என்ற நினைவை விடுதல்], பலஸங்கத்யாகம் [பலத்தில் ஆசையை விடுதல்] என்ற மூன்றுவித த்யாகத்துடன் அனுஷ்டிக்கப்பட்ட கர்மயோகத்தினால் தங்கள் நெஞ்சில் எழுந்த பகவானைப் பற்றின, எண்ணெயின் தாரையைப் போன்ற தடையற்ற நினைவின் தொடர்ச்சி ரூபமான, நிலைத்தாய், தெளிவானதாய், ப்ரிய ரூபமானதாயுள்ள த்யாநத்தினால் உண்டான பகவானின் அருளால் ஸாம்ஸாரிகமான ஸகலதுக்கங்களிலிருந்து விடுபட்டுப் பரமபதத்தையடைந்து அதன் பிறகு நன்றாகத் தோற்றக் கூடிய ஸ்வரூபத்தையுடையவர்கள். [இரண்டாவது வகை] – பகவானுடைய நிர்ஹேதுகமான ஸௌஹார்த விஶேஷத்தால் ஆதியில் கூட்டப்பட்ட யாத்ருச்சிகஸுக்ருத பரம்பரையை உடையவர்களாய், பிறகு அம்ருதமயமான கருணையைப் பொழியக் கூடிய விசித்ரமான கடாக்ஷத்தால், பிறக்கும் காலத்தில் நனைக்கப் படுகிறார்கள். அதற்குப் பிறகு தங்களுக்கு விருப்பங்களாயுள்ள பகவத்குணங்களிலும் சரிதங்களிலும், பாகவதஜநங்களிடத்திலும் அத்வேஷமாகிற உயர்ந்த பயனை அடைகிறார்கள். அதன் பிறகு பகவானுடைய குணங்கள், திருமேனி, சரிதங்கள் ஆகிய இவைகளைப் பற்றின கதாஶ்ரவணத்தில் ஆர்வத்தையடைகிறார்கள். அதன்பிறகு நல்லோர்களுடன் உரையாடுதலாகிய பெரிய ஏற்றத்தை அடைகிறார்கள். அவர்களாலே உபதேஶிக்கப் பட்டு, வேதாந்தஸாரார்த்ததை நன்கறிந்தவராய் ப்ரஹ்ம நிஷ்டராய், உயர்ந்தவராயுள்ள ஆசார்யருடைய திருவடித் தாமரைகளைச்

[1]तद्रूपेण श्रीमदष्टाक्षरमन्त्ररत्नादिकं प्रसाद्य, मूलमन्त्रेण स्वरूप-साधन-पुरुषार्थयाथात्म्यं परिज्ञाप्य, मन्त्ररत्नेन स्वरूपानुरूपवरण निक्षेपात्मक-न्यासानुष्ठाननिष्ठां[2] प्रापय्य सदाचार्यकरुणा तरङ्गिणी[3]पूरं हृदि विहरतः[4] अभिमत[5]जननपूर्वकं आत्मानं स्वयमेव प्रसादयतः श्रियःपतेः आश्रित-वात्सल्यैकमहोदधेः अनवधिक-ज्ञानशक्त्यादिगुणरत्न-विभूषितस्य भगवतः पुरुषोत्तमस्य निरतिशयप्रसादेन वा सांसारिकसकलदुरित निरसन पूर्वक-परमपदप्राप्ति- समनन्तरं सम्यगाविर्भूतस्वरूपाः॥

नित्यास्तु कदाचिदपि अस्पृष्टसंसारबन्धगन्धाः निरन्तरानुभूतभगवत्स्वरूप-रूपगुणविभवविषय-आविर्भवन्निरतिशय[6]प्रीतिप्रवाह[7]-बलात्कारित[8]-कमलानायकपादारविन्दद्वय[9]-सार्वकालिक-सकलविध दास्यवैभव-आविर्भावित-तन्महानन्द-सुधा-जलधि-सम्पत्कर्णेजपप्रसन्नवदनारविन्दविकास-एकभोग-चुलुकित-निखिलानन्दसन्दोहाः॥

ननु ज्ञानानन्दमयस्य आत्मनः कथं अज्ञानदुःखादि-संयोगः इति चेत्, स्वभावशीतलस्य सलिलस्य

1. G1 adds here तस्य उपायस्य अनुष्ठानं प्रापय्य
2. G1 निक्षेपात्मकस्य स्वानुष्ठानं T2 निक्षेपायत्त
3. G1 G2 add तरङ्गिणी
4. T1 वितरतः
5. G1 स्वहित
6. G1 विषयाविर्भाव निरतिशय
7. T1 प्रीतिभाव
8. G2 बलात्तारित
9. G1 द्वन्द्व



சென்று கிட்டுகிறார்கள். அப்படிக் கிட்டினபடியால் அவர் இவர்களுக்கு ஸ்ரீமதஷ்டாக்ஷரம், மந்த்ரரத்நம், சரமஶ்லோகம் ஆகியவற்றை உபதேஶிக்கிறார். மூலமந்த்ரத்தால் ஆத்ம ஸ்வரூபத்தின் உண்மை, ஸாதநத்தின் உண்மை ஆகியவற்றை அறிவிக்கிறார். மந்த்ரரத்நத்தால் ஆத்மஸ்வரூபத்திற்குத் தகுதியாக பகவானுடைய திருவடிகளைப் பற்றுதல் முன்னாக ஶரணாகதியின் அநுஷ்டாநத்தைச் செய்விக்கிறார். ஸதாசார்யனுடைய கருணையாகிற நதியால் அன்பு நிறைந்த இவர்களுடைய ஹ்ருதயத்தில் விளையாடுபவனான எம்பெருமான் இவர்களுக்கு விருப்பங்களை நிறைவேற்றி இவர்களுடைய பாபங்களால் தன் திருவுள்ளத்திலுண்டான சீற்றத்தைத் தானே ஆற்றிக் கொள்ளுகிறான். பிறகு ஶ்ரிய:பதியாய், ஆஶ்ரித வாத்ஸல்யமாகிற குணத்துக்குக் கடலானவனாய் எல்லை யற்ற ஜ்ஞாநம் ஶக்தி முதலிய குணரத்நங்களால் அலங்கரிக்கப்பட்டவனாயுள்ள அந்த பகவான் புருஷோத்தமனுடைய எல்லையற்ற கருணையால் உலகவாழ்வின் எல்லாத் துன்பங்களும் நீக்கப்பட்டுப் பரமபதப்ராப்தியை யடைந்து நன்றாக ஆவிர்ப்பவித்த [எழுந்த] ஸ்வரூபத்தை யுடையவர்களாக [முக்தர்களாக] ஆகிறார்கள்.

நித்யர்களோவென்றால் ஒரு நாளும் ஸம்ஸார பந்தத்தின் கந்தமும் தட்டாதவர்கள்; பகவானாகிற ஸ்வரூபம், அவனுடைய ரூபம் [திருமேனி], குணங்கள், விபூதிகள் ஆகியவற்றை நிரந்தரமாக அனுபவிப்பவர்கள். அதனால் எழுந்த எல்லையற்ற ப்ரீதிப்ரவாஹத்தால் தூண்டப்பட்டு, கமலாநாயகனின் பாதாரவிந்தங்களிரண்டில் ஸர்வகாலமும் ஸகலவிதமான கைங்கர்யமாகிற வைபவத்தின் எழுச்சியை யுடையவர்கள். அதனால் அந்த பகவானுக்கு ஏற்படும் மகிழ்ச்சி என்கிற அமுதக்கடலாகிற செல்வத்தைக் கோள் சொல்லிக் கொடுக்கும்படி மலர்ந்த அவனுடைய முகத்தாமரையின் அநுபவத்தால் மட்டும் உண்டான போகத்தால் துள்ளும் மீன் போல் இருந்து கொண்டு எல்லாவிதமான ஆநந்தத்தின் மிகுதியையும் உடையவர்கள்.

நநு [ஆனால்] ஜ்ஞாநாநந்தமயனான ஆத்மாவுக்கு எப்படி அஜ்ஞாந துக்காதிகளின் சேர்க்கை ஏற்படுகிறது என்றால், இயற்கையில் குளிர்ந்துள்ள தண்ணீருக்கு நெருப்புடன் சேர்ந்துள்ள பாத்திரத்தின் சேர்க்கையால் ஔஷ்ண்யம்

ज्वलनसंसृष्टस्थालीसङ्गात् औष्ण्यशब्दाद्यागन्तुक-विकृतियोगवत्, स्वाभाविकानन्दमयस्यापि चेतनस्य[1] त्रिगुणात्मक[2] अनादिप्रकृतिसम्बन्धात् अविद्याकर्म-वासनाद्यौपाधिकविकृति-परम्परायोगः[3] सञ्जायते;

ßv ukfnek; ;k l[illegible]] (माण्डूक्यकारिका)

"अनीशया शोचति मुह्यमानः", (मुण्डक. 3-1-2)

"तस्मिंश्चान्यो मायया सन्निरुद्धः[4]" (श्वे. 4.9)

"दुःखाज्ञानमला धर्माः प्रकृतेस्ते न चात्मनः",
"जलस्य चाग्निसंसृष्टस्थालीसङ्गात् तथापि हि।[5]
शब्दोद्रेकादिकान् धर्मान् तत्करोति यथा नृप[6]॥
तथाऽत्मा प्रकृतेस्सङ्गात् अहम्मानादिदूषितः।
भजते[7] प्राकृतान्धर्मान्[8] अन्यस्तेभ्योऽपि सोऽव्ययः॥"

(वि.पु. 6-7-22, 23, 24)

इत्यभिहितत्वात्। प्रकृतिसंसर्गवियोगादेव अविद्या-विनाशः।

"एष सम्प्रसादोऽस्माच्छरीरात् समुत्थाय"[9]

(छा. 8-3-4)

---

1. G1 omits चेतनस्य
2. T1, G2 त्रिगुणात्मिक
3. T1 परम्परायोगात्
4. T1 अवनिरुद्धः
5. T2 बहिः
6. T2 G2 यथा
7. G1 भजेत
8. T2 भोगान्
9. T1 adds here तान्येव अनु विनश्यति



[வெப்பம்], ஶப்தம் [தண்ணீர் கொதிக்கும் போது ஏற்படும் ஒலி] முதலிய வந்தேறியான மாறுதல் ஏற்படுகிறதே, அவ்வாறே ஸ்வாபாவிகமாக ஆநந்தமயனாகவுள்ள சேதனனுக்கு த்ரிகுணாத்மகமான அநாதியான ப்ரக்ருதியின் ஸம்பந்தத்தால் அவித்யா, கர்ம, வாஸநா முதலிய ஔபாதிக மான மாறுதல் பரம்பரையின் ஸம்பந்தம் உண்டாகிறது.

'அநாதியான அஜ்ஞாநத்தால் மயங்கினவன்'

[மாண்டூக்யகாரிகை]

'ப்ரக்ருதியினால் ஶோகிக்கிறான் அதில் மயங்கிக் கிடக்கும் ஜீவாத்மா' [முண்டகம் 3–1–2]

'அந்த ப்ரக்ருதியில் முக்தனைக் காட்டிலும் வேறுபட்ட இன்னொருவனான ஜீவாத்மா கட்டுண்டு கிடக்கிறான்'

'துக்கம், அஜ்ஞாநம், அழுக்கு என்ற தர்மங்கள் ப்ரக்ருதி யினுடையவை; ஆத்மாவினுடையவையல்ல. ஜலத்துக்கு அந்நியின் சேர்க்கையானது நேரிடையாக ஏற்படுவது இல்லை, சூடாக்கப்பட்ட பாத்திரத்தின் சேர்க்கையாலேயே ஏற்படுகிறது, ஶப்தத்தின் எழுச்சி முதலிய தர்மங்களையும் அக்நிஸம்பந்தமானது ஜலத்தில் ஏற்படுத்துகிறது. அவ்வாறே ஆத்மாவானவன் ப்ரக்ருதியினுடைய சேர்க்கையால் அஹங்காரமமகாரங்களால் கெடுக்கப்பட்டு ப்ராக்ருத தர்மங்களை யடைகிறான். அவற்றைக் காட்டிலும் வேறானவனாய் விகாரமற்றவனாய் இருப்பவன் இந்த ஆத்மா. [வி.பு. 6–7–22,23,24]

என்று பிரமாணங்கள் கூறுகின்றன. ப்ரக்ருதியின் தொடர்பு அழிந்தால்தான் அவித்யை தொலையும் என்று ப்ரமாணங்கள் கூறுகிறன்றன.

'இந்த முமுக்ஷுவானவன் இந்த ஶரீரத்திலிருந்து விடுபட்டு' [ஶரீரமாகப் பரிணமித்த பூதங்களையே பின்பற்றி [அவித்யையில் மூழ்கி] நஶித்துப் போகிறான்]

[சாந். 8–3–4]

"भूत्वा शरीरं तत् सुकृतदुष्कृते विधूनुते"(?)
"देवादिभेदेऽपध्वस्ते नास्त्येवावरणो हि सः"
(वि.पु. 2-14-33)

इत्यादिषु तथाभिधानात्। त्रितयेऽप्येते पृथक् पृथक् अपरिच्छेद्याः।।

केचिदात्मभेदं नेच्छन्ति। तदा[1] केषाञ्चित् सुखानु[2]भवसमये परेषां दुःखानुभवो न सङ्गच्छते। सुखदुःखादिनियमः शरीरान्तःकरणभेदेनेति चेत् न। सौभरिशरीरेषु तथात्वदर्शनात्[3]। देहान्तःकरणभेदस्य सुखदुःखादिनियमहेतुत्वानभ्युपगमे कथं[4] इदानीं जन्मान्तरानुभूतविषयास्मरणं इति[5] चेत्, संस्कारस्य[6] अनुदयात् विनाशात् वा। ततः खलु संस्कारानुवृत्त्या जाति[7]स्मरण सुखदुःखादिस्मरण-दर्शनम्। तर्हि शरीरान्तर सुखदुःख स्मृत्यसम्भवोऽपि द्वयोरन्यतरेणेति चेत् न। एकस्मिन्नपि[8] शरीरे सुखदुःखादेः अस्मरणप्रसङ्गात्। अन्यथा एकस्य[9] बन्धमोक्षव्यवस्था शिष्याचार्यव्यवस्था सृष्टिवैषम्यञ्च नोपपद्यते।

1. T2, G1 तन्न
2. G1 सुखदुःखानु
3. G1 अदर्शनात्
4. G1 omits कथं
5. T2 कथमिति
6. T2 संसारस्य
7. G1 जातीय
8. G1 कस्मिन्नपि
9. T2, G1 G2 एकैव



'இந்த ஶரீரத்தை விடுத்து ஸுக்ருதது்ஷ்க்ருதங்களை நீக்கிக் கொள்கிறான். தேவாதி பேதமானது நீங்கிற்றென்றால் ஆவரணம் [மறைப்பு], அற்றவனாகவே அவன் ஆகிறான்.'
[வி.பு. 2–14–33]

பத்தர், முக்தர், நித்யர் என்ற இந்த மூன்று வகையான சேதநர்களும் தனித்தனியே எண்ணிலடங்காதவர்கள்.

சிலர் [ஜீவாத்வைதத்தை ப்ரதிபாதிக்கும் ஶாஸ்த்ரத்தில் குத்ருஷ்டிகள்] ஆத்மபேதத்தை இசைவதில்லை. அவர்கள் கூற்று உண்மையாகவிருந்தால் ஒருவன் ஸுகத்தை அநுபவிக்கும் போது மற்றவர்கள் துக்கத்தையநுபவித்தல் பொருந்தாது. ஸுகதுக்கம் முதலியவைகளின் நியமமானது ஶரீரம், மனது என்ற இவற்றின் பேதத்தால் என்று கூறினால் அது தவறு; [பல உடல்களை எடுத்துக் கொண்ட] ஸௌபரியின் உடல்களில் அப்படிக் காணப்படாமையால். அதாவது அவர் பல உடல்களை எடுத்துக் கொண்டபோதிலும் ஒரு உடலில் ஸுகமும் இன்னொரு உடலில் துக்கமும் அவரால் அனுபவிக்கப்படவில்லை. தேஹபேதம், மனத்தின் பேதம் என்பவை ஸுகதுக்கங்களுக்குக் காரணம் என்று ஒப்புக் கொள்ளவில்லையானால், முன் ஜன்மங்களில் அநுபவிக்கப் பட்ட விஷயங்களின் அஸ்மரணம் [நினைவின்மை] இப்பொழுது எப்படி ஏற்படுகிறது என்றால், ஸம்ஸ்காரமானது [முன் ஜந்மத்தின் பதிவானது] உண்டாகாதபடியாலோ விநாஶம் அடைவதாலோ ஏற்படுகிறது. யாரேனும் சிலருக்கு ஸம்ஸ்காரத்தின் [பதிவின்] [தொடர்ச்சியால்] முன் ஜந்மத்தின் ஸ்மரணம் [நினைவு] அந்த ஜந்மத்தில் ஏற்பட்ட ஸுகதுக்காதிகளின் ஸ்மரணம் ஆகியவை ஏற்படுகின்றன. ஆக தேஹபேதம் இருந்துங்கூட ஸுகதுக்காதிகளின் நியமத்துக்கும் அவற்றின் அஸ்மரணத்துக்கும் தேஹ பேதந்தான் காரணம் என்னவொண்ணாது. ஆத்மபேதமே அவற்றுக்குக் காரணம். [ஒரு ஆத்மாவுக்கு ஸம்ஸ்காரத்தின் அநுதயத்தாலோ விநாஶத்தாலோ இரண்டு ஶரீரங்களில் ஸ்ம்ருதி வரவில்லையென்றால், அதே ஆத்மாவுக்கு ஒரு ஶரீரத்திலேயேகூட இவ்விரு காரணங்களால் ஸ்ம்ருதி வராமல் போக வேண்டும். அதாவது கையில் ஏற்பட்ட வலி ஹ்ருதயத்திற்குத் தெரியாமல் போகவேணும்.] மேலும், ஆத்மா ஒருவன் தான் அநேகர் கிடையாது என்ற பக்ஷத்தில் ஒருவன் பந்தத்தில் இருக்கையும் இன்னொருவன் முக்தனாகையும், ஒருவன் ஶிஷ்யனாகையும் மற்றவன் ஆசார்யனாகையும், தேவன், மநுஷ்யன், திர்யக்கு, ஸ்தாவரம் என்ற ஸ்ருஷ்டியில் வேற்றுமையும் பொருந்தாது.

"नित्यो नित्यानां", (कठ. 2-5-13, श्वेता. 6-13)

[1]"ज्ञाज्ञौ द्वावजौ ईशनीशौ", (श्वेता. 1-9)

"द्वासुपर्णा", (मुण्ड. 3-1-1, श्वेता. 4-6)

"क्षरात्मानावीशते देव एकः", (श्वेता. 1-10)

"जहात्येनां भुक्तभोगां अजोऽन्यः[1]", (श्वे. 4.5)

"आत्मेश्वरं"[2] (तै. नारा. 11-24)

"न त्वेवाहं जातु नासं नत्वं नेमे जनाधिपाः", (गीता 2-12)

"दासभूताः स्वतस्सर्वे[3]", (भारद्वाजसंहिता)

"आत्मदास्यं हरेस्स्वाम्यं", (विष्णुतत्त्वम्)

इत्यादिश्रुतिस्मृतिविरोधोऽपि प्रसज्यते। (ननु) श्रुतिः औपाधिक भेदं वक्ति। अन्यथा जीवाद्वैतश्रुति विरोधः इति चेत् न[4]। जीवाद्वैतश्रुतीनां जीवविशिष्ट ब्रह्माद्वैत बोधन परत्वेन निश्चितत्वात्। अन्यथा,

"सदा पश्यन्ति", (पुरुषसू.)

"येन येन धाता गच्छति तेन तेन सह गच्छति", (परमसंहिता)

"सोऽश्नुते सर्वान् कामान् सह ब्रह्मणा विपश्चिता[5]", (तै.उ.आन.1)

---

1. T1 G2 omit ज्ञाज्ञौ......अजोऽन्यः
2. G1 only reads आत्मेश्वरम्
3. G1 only reads स्वतस्सर्वे
4. G1 omits न
5. G1 omits विपश्चिता



'நித்யர்களான ஜீவாத்மாக்களுக்கு நித்யனான பரமாத்மா' [கட. 2 2-5-13, ஶ்வேதா. 6-13]

'ஸர்வஜ்ஞன ஈஶன் அஜ்ஞனான அநீஶன் என்ற இருவரும் பிறப்பற்றவர்கள்' [ஶ்வேதா. 1-9]

'அழகிய இறக்கையையுடைய இரு பக்ஷிகள் போன்ற ஜீவாத்மபரமாத்மாக்கள்' [முண்டகம்3-1-1, ஶ்வேதா 4-6]

'மாறுதலையடையக் கூடிய ப்ரக்ருதி, ஆத்மா என்ற இரண்டையும் ஆள்கிற ஒரு தேவன்' [ஶ்வேதா 1-10]

'போகம் அனுபவிக்கப்பட்ட இந்த ப்ரக்ருதியை பத்தனைக் காட்டிலும் வேறுபட்டவனான முக்தஜீவன் துறக்கிறான்' [தை. நா]

'தனக்குத் தானே ஈஶ்வரனாயுள்ளவனை' [தை.நா.11.24]

'பரமாத்மாவான நான், என் முன்னிற்கும் ஜீவாத்மாவான நீ, நம்மருகிலுள்ள அரசர்களான இந்த ஜீவாத்மாக்கள் ஆகிற யாவரும் நித்யர்கள்' [கீதை 2-12]

'இயற்கையில் எல்லா ஜீவாத்மாக்களும் பரமாத்மாவுக்கு ஶேஷபூதர்கள்' [பாரத்வாஜ ஸம்ஹிதை]

'ஜீவாத்மாவின் ஶேஷத்வத்தையும் ஹரியின் ஶேஷித்வத்தையும்' [விஷ்ணுதத்த்வம்]

இப்படிப்பட்ட ஶ்ருதிஸ்ம்ருதி விரோதமும் வந்து சேரும், ஆத்மா ஒருவன் தான் அனேகர் இலர் என்ற பக்ஷத்தில்.

நநு, ஶ்ருதியானது ஔபாதிகபேதத்தைச் சொல்லுகிறது, அதாவது ஆத்மாவோடு ஸம்பந்தப்படும் ஶரீரம், இந்த்ரியம் முதலிய உபாதிகளால் வரும் பேதத்தைச் சொல்லுகிறது, ஆத்மஸ்வரூபத்தில் பேதத்தைச் சொல்லவில்லை, சொன்னால் ஜீவாத்வைதஶ்ருதிக்கு விரோதம் வருமே என்று [பூர்வபக்ஷி] கூறினால் அது தவறு. ஜீவாத்வைத ஶ்ருதிகளுக்கு ஜீவனை ஶரீரமாகக் கொண்ட ப்ரஹ்மத்தின் அத்வைத்தை [ஐக்யத்தை] போதிக்கும் தன்மையிருப்பதாக நிஶ்சயிக்கப் பட்டுள்ளபடியால். இல்லையெனில்,

'நித்யஸூரிகள் பகவானை எப்பொழுதும் பார்க்கிறார்கள்' [புருஷஸூக்தம்]

'எங்கெங்கே ஸ்ருஷ்டிகர்த்தா செல்கிறானோ அங்கங்கே கூடவே முக்தபுருஷனும் செல்கிறான். [பரமஸம்.]

'ஸர்வஜ்ஞனான பரமாத்மாவுடன் சேர்த்து அவனுடைய கல்யாண குணங்கள் யாவற்றையும் முக்தபுருஷன் அனுபவிக்கிறான்.' [தை. உ. ஆந.-1]

"ब्रह्मणो महिमानमाप्नोति", (तै.नारा. 150)
"इमं मानवं आवर्तं नावर्तन्ते", (छा. 4-15-6)
"इदं ज्ञानमुपाश्रित्य मम साधर्म्यमागता:।
सर्गेऽपि नोपजायन्ते[1] प्रलये न व्यथन्ति च",
(गीता 14-2)
"किंकरा मम ते नित्यं भवन्ति निरुपद्रवा:",
(?)
[2]"वैकुण्ठे तु परे लोके" (शैवपुराणे)
"नित्यत्वेन व्यवस्थिता:"[2], (?)
[3]"पश्यन्तीव सदा देवं नेत्रज्ञानेन वैभवात्"[3]
(?)

इति मोक्षदशायामपि भेदसमर्थनश्रुतिस्मृतिविरोध-प्रसङ्गात्। मोक्षदशायां निवृत्तरागद्वेषादि-देवमनुष्यादिभेदानामपि स्वाभाविक-ज्ञानानन्दाद्याकार-साम्यात् अत्यन्तं अन्योन्यसदृशानां आत्मनां सर्वात्मना[4] वैषम्याभावेऽपि[5] आकारपरिमाणादिभि: अत्यन्तपरस्पर-सदृशरत्नव्रीह्यादिपदार्थानामिव व्यक्तिभेदस्य अपरिहार्यत्वात्, आत्मभेद: सम्प्रतिपन्न:। एतेषां असाधारणलक्षणं शेषत्वयुक्तं ज्ञातृत्वम्। एतेषां स्वरूपवत् ज्ञानस्यापि नित्यद्रव्यत्वं[6], अजडत्वं,

1. T1 नोपालभन्ते
2. T1 G2 omit वैकुण्ठे.....व्यवस्थिता:
3. T2, G1 omit पश्यन्तीव.....वैभवात्
4. G1 omit सर्वात्मना
5. G1 G2 वैषम्यानामपि
6. G1 नित्यत्वं



'ப்ரஹ்மத்தின் ஏற்றத்தையநுபவிக்கிறான்'
[தை. நா. 150]

'இந்த மானிடவுலகத்தைத் திரும்ப அடையமாட்டார்கள்'
[சா. 4–15–6]

"இந்த ஜ்ஞாநத்தையடைந்து என்னுடன் ஸமாநமான தர்மத்தையடைந்தவர்கள் ஸ்ருஷ்டியில் திரும்பவும் பிறக்கிறார்களல்லர், ப்ரளயத்தில் மரிக்கிறார்களல்லர்'
[கீதை 14–2]

'என்னுடைய கிங்கரர்கள் நித்யமாகத் தொல்லை அற்றிருக்கிறார்கள்' [?]

'வைகுண்டமாகிற மேலான உலகத்தில்'
[ஶைவபுராணம்]

'நித்யமாகத் தங்கள் தங்கள் ஸ்தாநத்தில் நிலை பெற்றிருக்கிறார்கள்' [?]

'தங்களுக்குண்டான ப்ரபாவத்தால் கண்ணால் உண்டாகும் ஜ்ஞாநத்தால் தேவனான எம்பெருமானை எப்பொழுதும் பார்க்கிறார்கள்'

என்று மோக்ஷதஶையில் கூட பேதத்தைக் கூறும் ஶ்ருதி ஸ்ம்ருதிகளுக்கு விரோதம் ஏற்படும். மோக்ஷதஶையில் ராகம் த்வேஷம் முதலியவை நீங்கி விடுகின்றன. தேவன் மநுஷ்யன் போன்ற பேதங்களும் நீங்கி விடுகின்றன. இயற்கையாகவுள்ள ஜ்ஞாநம் ஆநந்தம் முதலிய ஆகாரங்களின் ஸாம்யத்தால் ஆத்மாக்கள் அனைவரும் ஒருவர்க்கொருவர் ஒத்தவர்களாயுள்ளார்கள். அவர்களுக்குள் எந்த ப்ரகாரத்தாலும் வேறுபாடில்லை.

வடிவம், அளவு முதலியவற்றால் அத்யந்தம் ஒன்றுக்கொன்று ஒத்ததாய் உள்ள ரத்தினங்கள், நெற்கள் முதலிய பொருள்களைப்போல் முக்தாத்மாக்களுக்கும் வ்யக்தி பேதமானது பரிஹரிக்கப்பட வியலாது. எனவே ஆத்மாக்கள் பல என்பது நிரூபிக்கப்பட்டதாகிறது. இந்த ஜீவாத்மாக்களுக்கு அஸாதாரணலக்ஷணம் [தனிப்பட்ட அடையாளம்] ஶேஷத்வத்தோடே [அடிமைத் தன்மையோடு] கூடின ஜ்ஞாத்ருத்வமாகும் [அறிவுடைமையாகும்]. இவர்களுடைய ஸ்வரூபத்தைப் போலவே இவர்களுடைய ஜ்ஞாநமுங்கூட நித்யத்ரவ்யமாய்[என்றும் உள்ளதாய்], அஜடமாய் [ஸ்வயம்

आनन्दरूपत्वं च अनुसन्धेयम्। तर्हि स्वरूपज्ञानयो: को विशेष इति चेत् – स्वरूपस्य धर्मित्व-सङ्कोच-विकासायोग्यत्व-स्वव्यतिरिक्तपदार्थ-[1]व्यवहारासमर्थत्व स्वस्मै स्वयंप्रकाशमानत्व[2] अणुपरिमाण युक्तत्वानि[3]

"जानात्येवायं पुरुष:", (बृह. 4.4.14)

"मनसैतान् कामान् पश्यन् रमते[4]", (छा. 8.12.5)

"सर्व ह पश्य: पश्यति", (छा. 7-26-2)

"आत्मा निर्विकार: प्राणेषु हृद्यन्तर्ज्योति:", (बृह. 4.3.7)

"[5]एषोऽणुरात्मा" (मुण्ड. 3-1-9)

इति श्रुतिस्मृति[6]-प्रतिपादनात्[7]। ज्ञानस्य तु[8] [9]धर्मत्व-सङ्कोचविकासयोग्यत्व-स्वव्यतिरिक्तपदार्थ-प्रकाशकत्व -स्वस्मैस्वयंप्रकाशरहितत्व – स्वाश्रय[10]प्रकाशत्व विभुत्वयुक्तत्वेन[11]

"विज्ञातारं [12]अरे केन विजानीयात्"[12], (बृह. 4-4-14)

---

1. T1 adds स्व
2. T1 स्वयम्भासमानत्वानि
3. T2 G1 G2 युक्तत्वेन
4. T1 omits रमते
5. G2 only reads परुष:
6. G1 only reads स्मृति
7. G1G2 प्रतिपादितत्वात्
8. T1 omits तु
9. T1 adds तत्
10. T2 G1 omit स्व
11. T2 G1 युक्तत्वेन
    T1 वियुक्तत्वानि
12. T1 omit अरे.....विजानीयात्



ப்ரகாஶமாய்] ஆநந்தரூபமாய் இருக்கிறது என்று நம்மால் அறிந்து கொள்ளப்பட வேணும். அப்படியானால் ஆத்மஸ்வரூபம் அதனுடைய ஜ்ஞாநம் என்ற இரண்டுக்கும் என்ன வேறுபாடு – என்றால் ஸ்வரூபமானது தர்மியாய், ஸங்கோசவிகாஸங்களை [சுருக்கம் விரிவு என்பவைகளை] அடையாததாய் தன்னைத் தவிர்ந்த பதார்த்தங்களை ப்ரகாஶப்படுத்தாததாய் தனக்குத்தானே ப்ரகாஶிக்கக் கூடியதாய் அணுபரிமாணத்தை உடையதான த்ரவ்யம் என்று ஶ்ருதி ஸ்ம்ருதிகளில் ப்ரதிபாதிக்கப் பட்டிருக்கிறது.

'அறிபவனாகவே உள்ளான் இந்தப் புருஷன்' [ப்ருஹ.]

'விரும்பப்பட்ட பொருள்களை மனத்தின் வழியாகப் பரவும் தர்மபூதஜ்ஞாநத்தால் பார்த்துக் கொண்டு மகிழ்கிறான்' [சாந். 8–12–5]

'ப்ரஹ்மத்தை ஸாக்ஷாத்கரிப்பவன் அதனுடைய விபூதிகள் யாவற்றையும் பார்க்கிறான்' [சாந். 7–26–2]

'ஆத்மா நிர்விகாரன், ப்ராணன்களின் இடையிலுள்ள ஹ்ருதயத்திலுள்ள ஸ்வயம் ப்ரகாஶவஸ்து அவன்' [ப்ருஹ.]

'இந்த ஆத்மா அணுபரிமாணமுடையவன்' [முண்டகம் 3–1–9]

ஜ்ஞாநமோவென்றால் தர்மமாய் ஸங்கோசவிகாஸங்களை [சுருக்கம் விரிவு என்பவைகளை] அடையக் கூடியதாய், தன்னைத் தவிர்ந்த பதார்த்தங்களை ப்ரகாஶப்படுத்தக் கூடியதாய் – தனக்குத் தான் ப்ரகாஶிக்கவியலாததாய் – தன்னுடைய ஆஶ்ரயமான ஆத்மாவுக்கு ப்ரகாஶிக்கக் கூடியதாய் – விபுபரிமாணத்தையுடைய த்ரவ்யம். இந்தத் தன்மைகளைக் காட்டும் ப்ரமாணங்கள் வருமாறு–

விஜ்ஞாநமுடையவனான ஜீவாத்மாவை த்யாநம் தவிர்ந்த எந்த உபாயத்தால் அறிய முடியும்? [ப்ருஹ. 4–4–14]

"तया तिरोहितत्वाच्च शक्तिः क्षेत्रज्ञसंज्ञिता।
सर्वभूतेषु भूपाल तारतम्येन वर्तते",
(वि.पु. 6-7-63)

"प्रज्ञया वाचं[1] समारुह्य" (कौषी. 3.6)

"मनसैतान् कामान्[2] पश्यन् रमते[3]" (छा. 8.12.5)

इत्यभिहितत्वाच्च, धर्मित्वादिगुणविशिष्टात् स्वरूपात् धर्मत्वादिगुण विशिष्टस्य ज्ञानस्य व्यावृत्तिः सिद्धा।

[4]"आश्रयात् अन्यतो वृत्तेः आश्रयेण समन्वयात्।
द्रव्यत्वं च गुणत्वं च ज्ञानस्यैवोपपद्यते[4]।।"
(सिद्धित्रयम्)

तत्र[5] बद्धानां ज्ञानस्य सर्वदापि[6] अविभुत्वमेव। मुक्तज्ञानस्य[7] तु संसारदशायां अविभुत्वयुक्त्वेऽपि बन्धनिवृत्तिसमनन्तरं विभुत्वमेव तिष्ठति। ततः तस्य उभयस्वरूपत्वम्[8]। नित्यानां कदाचिदपि अस्पृष्टसंसार[9]गन्धत्वात् नित्यासङ्कुचित[10]ज्ञानत्व अवगमात् तज्ज्ञानस्य सर्वदा[11] विभुपरिमाणत्वमेव।

यदि ज्ञानस्य नित्यत्वं, तर्हि[12] "मम घटपटज्ञानं[13] उत्पन्नं विनष्टं एतावन्तं कालं भवन्तं नाज्ञासिषं इदानीं

---

1. G1 चक्षुः
2. T1 adds सर्वंह
3. T1, G2 omit रमते
4. T1, G2 omit आश्रयात्....उपपद्यते
5. T2 अत्र
6. T1 सदापि
7. G1 मुक्तानां
8. G2 उभयरूपत्वं
9. G2 adds सम्बन्ध
10. G1 adds त्व
11. G1 सदा
12. T2, G1, G2 omit तर्हि
13. G1 घटादिज्ञानं



'அவித்யையினால் ஜீவாத்மா மறைக்கப்பட்டுள்ள படியால் அவனுடைய தர்மபூதஜ்ஞாநமானது எல்லா பூதங் களிலும் ஏற்றத் தாழ்வுடன் இருக்கிறது.' [வி.பு.6–7–63]

'தர்மபூதஜ்ஞாநத்தால் வாகிந்த்ரியத்தையடைந்து'
[கௌஷீதகீ 3–6]

'விரும்பப் பட்ட பொருள்களை மனத்தின் வழியாகப் பரவும் தர்மபூதஜ்ஞாநத்தால் பார்த்துக் கொண்டு மகிழ்கிறான்.'
[சாந். 8–12–5]

இப்படி ப்ரமாணங்கள் கூறுவதால் தர்மித்வாதிகுண விஶிஷ்டமான ஆத்ம ஸ்வரூபத்தைக் காட்டிலும் தர்மத்வாதி குண விஶிஷ்டமான ஜ்ஞாநத்துக்கு வேறுபாடானது ஏற்படுகிறது.

"ஆஶ்ரயமான [ஆதாரமாயுள்ள] ஆத்மாவிலிருந்து வெளியில் பரவுவதால் ஜ்ஞாநம் த்ரவ்யமாகிறது. அதே ஸமயத்தில் ஆஶ்ரயத்தை விட்டுப் பிரியாமல் நன்கு சேர்ந்திருப்பதால் அது குணமாகவும் ஆகிறது'
[ஸித்தித்ரயம்]

பத்தர்களுடைய ஜ்ஞாநத்துக்கு எப்போதும் அவிபுத்வமே [எங்கும்பரவி இல்லாமையே] உள்ளது. முக்தர்களுடைய ஜ்ஞாநத்துக்கோவென்றால் ஸம்ஸாரதஶையில் அவிபுத்வம் இருந்தாலுங்கூட ஸம்ஸாரதிதிலிருந்து விடுபட்ட பிறகு விபுத்வமே நிற்கிறது. எனவே அதற்கு [ஜ்ஞாநத்துக்கு] உபய[இரண்டு]ஸ்வரூபத்வம் உள்ளது. நித்யர்களுக்கு ஒருநாளும் ஸம்ஸாரகந்தமே தட்டாதபடியால் எப்போதும் சுருங்காத ஜ்ஞாநத்வம் அறியப்படுகிறது. எனவே அவர்களுடைய ஜ்ஞாநமானது எப்பொழுதும் விபுபரிமணம் உடையதாகவே இருக்கும்.

ஜ்ஞாநத்துக்கு நித்யத்வமிருந்தால் 'எனக்கு குடம் துணி இவற்றைப் பற்றிய அறிவு உண்டாயிற்று, நாஶமடைந்தது, இத்தனை காலம் உங்களை நான் அறிந்தேனல்லேன், இப்பொழுது அறிந்தேன்' என்று ஜ்ஞாநத்துக்கு உற்பத்தி அழிவு

अज्ञासिषं" इति ज्ञानस्य[1] उत्पत्तिविनाशादि[2]व्यवहारः कथमिति चेत्, इन्द्रियद्वारा प्रसृत्य विषयग्रहणात्, निवृत्य[3] तदग्रहणाच्च तथाव्यवहारो युक्तः। अस्य एकत्वेऽपि अनेकत्व-व्यवहारः प्रसरणभेदनिबन्धनः। ततः चक्षुःश्रोत्रादिद्वारा प्रसृत्य[4]रूपशब्दादिग्रहणस्य दर्शनश्रवणादिसंज्ञान्तरप्राप्तिः उपपन्ना। तथा च श्रूयते

"कामः[5] सङ्कल्पो विचिकित्सा श्रद्धा अश्रद्धा धृतिः अधृतिः भीः [6]धीः ह्रीः[6] इत्येतत्सर्वं मन एव" (बृह. 1.5.3)

इति। अजडस्य तस्य[7] द्रव्यत्वमपि[8] सङ्कोचविकासरूप-क्रियाश्रयत्वात् संयोगविभागविभुत्वादि-गुणाश्रयत्वाच्च अनुसन्धेयम्। क्रियाश्रयो द्रव्यं गुणाश्रयो द्रव्यं इति लक्षणत्वात्[9]। अजडत्वेऽपि सुषुप्तिमूर्च्छादिषु तस्य अनुपलब्धिः, मलावकुण्ठितमणिप्रकाशादिवत् प्रसरणाभावात्।

[10]"यथा न क्रियते ज्योत्स्ना मलप्रक्षलनात् मणेः। दोषप्रहाणात् न ज्ञानं आत्मनः क्रियते तथा॥

---

1. G2 omits ज्ञानस्य
2. T1, G2 omits आदि
3. T2 निवृत्यादि
   T1 निवर्त्य
4. T2 G1 श्रोत्रादेःप्रसृत
5. T2, G1 omit कामः
6. T2, G1 omit धीः ह्रीः
7. G1 omits तस्य
8. T1 द्रव्यमपि
9. T1 adds द्रव्य
10. T2, G2 add from यथा न to अत्मनो हि ते on the next page



போன்ற வ்யவஹாரம் வருகிறதே எப்படி? என்றால் இந்த்ரியம் மூலமாக வெளிப்பட்டு விஷயத்தை க்ரஹிப்பதால் ஜ்ஞாநத்துக்கு உத்பத்தி என்ற வ்யவஹாரம் வருகிறது. வெளிப்படாமல் இருந்து கொண்டு க்ரஹிக்காதபடியால் விநாஶம் என்ற வ்யவஹாரம் வருகிறது – என்பது ஸமாதாநம். இது ஒன்றாயிருந்தாலுங்கூட இது வெளிப்படுவதற்கு த்வாரங்களாயுள்ள [வாசல்களாயுள்ள] இந்த்ரியங்கள் பல ஆகையால், அநேகம் என்ற வ்யவஹாரம் வருகிறது. எனவே கண், காது முதலிய இந்த்ரியங்கள் மூலம் வெளிப்பட்டு ரூபம், ஶப்தம், முதலியவற்றை க்ரஹிக்கக் கூடிய ஜ்ஞாநத்துக்கு முறையே தர்ஶநம் [பார்த்தல்], ஶ்ரவணம் [கேட்டல்] முதலிய வேறு பெயர்கள் ஏற்படுதல் பொருந்துகிறது. இது விஷயமான ஶ்ருதி வருமாறு–

"இச்சை, உறுதி, ஸந்தேஹம், – முனைப்பு, முனைப்பின்மை, தைர்யம், அதைர்யம், பயம், அறியும் புத்தி, வெட்கம் என்ற ஜ்ஞாநங்கள் யாவற்றுக்கும் மனமே ஹேது". [ப்ருஹ 1–5–3]

மனத்தின் மூலம் வெளிப்படக் கூடிய ஜ்ஞாநத்துக்கு இத்தனை நிலைகள் ஏற்படுகின்றன. ஒவ்வொரு நிலையிலும் அது வெவ்வேறு பெயர்களையடைகிறது. அஜடமாய் [தானே ப்ரகாஶிப்பதாயுள்ள] இந்த தர்மபூதஜ்ஞாநமானது ஸங்கோசம் [சுருக்கம்] விகாஸம்[விரிவு] என்ற க்ரியைகளைக் கொண்டது. ஸம்யோகம் [சேர்க்கை] வியோகம் [பிரிவு] விபுத்வமாகிற பரிமாணம் [அளவு] முதலிய குணங்களையும் உடையது. க்ரியாஶ்ரயமாயிருந்தாலும் குணாஶ்ரயமாய் இருந்தாலும் த்ரவ்யம் என்று த்ரவ்யலக்ஷணம் இருக்கிறபடியால் இந்த தர்மபூதஜ்ஞாநம் த்ரவ்யமாகும். அஜடமாய் [ஸ்வயம் ப்ரகாஶமாய்] இருந்தாலுங்கூட ஸுஷுப்தி [தூக்கம்], மூர்ச்சை [மயக்கம்] முதலிய நிலைகளில் இது ஏன் ப்ரகாஶிக்கவில்லை என்றால், அழுக்கினால் மூடப்பட்ட மணியின் [ரத்நத்தின்] ஒளியானது ப்ரஸரணம் [பரவுதல்] இல்லாமையால் ப்ரகாஶியாதாப் போலே இதுவும் அந்நிலைகளில் ப்ரஸரணமின்மையால் ப்ரகாஶிக்கவில்லை.

'அழுக்கை நீக்குவதால் மணிக்கு [ரத்நத்துக்கு] ஒளியானது எப்படி புதிதாக உண்டாக்கப்படவில்லையோ அப்படியே தோஷத்தை நீக்குவதால் ஆத்மாவுக்கும் ஜ்ஞாநமானது புதிதாக உண்டாக்கப்படவில்லை.'

यथा उदपानकरणात् क्रियते न जलाम्बरम्।
सदेव नीयते व्यक्तिं असत: सम्भव: कुत:॥
तथा हेयगुणध्वंसात् अवबोधादयो गुणा:।
प्रकाश्यन्ते न जन्यन्ते नित्या एवात्मनो हि ते॥

(विष्णुधर्मे 104-55, 56, 57)

इति ह्युच्यते। तस्य[1] ज्ञानस्य आनन्दरूपत्वं च अवगन्तव्यम्[2]। सर्वशरीरिभूतभगवद्विषयत्वेन तस्य[3] शरीरभूत[4]-चिदचिन्मय-गुणाश्रय[5]विभूतिद्वय[6]विषयत्वेन [7]च अत्यन्त[7]-अनुकूलतया स्वाश्रयं प्रति प्रकाशमानत्वात्। प्रतिकूलोदासीनवस्त्वन्तर-विषयत्वाभावाच्च। विषशस्त्रादि[8]-प्रातिकूल्यप्रकाशनस्य चन्दनकुसुमाद्यानुकूल्यवेदनस्य[9] काष्ठलोष्टादि-औदासीन्यस्य च एषां स्वातन्त्र्याकार-प्रतिपत्तेश्च कर्म-देहात्मभ्रमाद्युपाधिमूलत्वात् न स्वाभाविकत्वम्। तेषां अस्वाभाविकत्वानभ्युपगमे कस्यचित् कदाचित् अनुकूलतया प्रतीतानां चन्दनकुसुमादीनां तस्यैव अन्यत्र अन्यदा, तत्र तदैव अन्येषां च प्रातिकूल्येन प्रकाशनं च नोपपद्यते। तथोक्तं पराशरेण-

---

1. T2 अस्य
2. T2, G1, G2 अनुत्तन्धेयं
3. T1 तत्
4. G2 शरीरस्थित
5. G1, G2 omits गुणाश्रय
6. G2 omits द्वय
7. G1 omits च अत्यन्त
8. G1 विषयस्य
9. T1 omits वेदन



'கிணறு வெட்டும் செயலால் ஜலமானது புதிதாக உண்டாக்கப்படவில்லை. இருக்கும் ஜலமே வெளிப் படுத்தப் படுகிறது. இல்லாத பொருள் எப்படி உண்டாகும்?'

'அப்படியே ஹேயகுணங்களின் நாஶத்தால் ஜ்ஞாநம் முதலிய குணங்கள் ப்ரகாஶப்படுத்தப்படுகின்றன, உண்டாக்கப் படுவதில்லை. அவை ஆத்மாவுக்கு நித்யங்களாகவன்றோ இருக்கின்றன!'

[விஷ்ணுதர்மம் 104 – 55,56,57]

இந்த ஜ்ஞாநத்துக்கு ஆநந்தரூபத்வம் உள்ளது என்பதும் அறிப்பட வேணும். யாவருக்கும் ஆத்மாவாயுள்ள பகவானை விஷயமாகக் கொண்டுள்ளபடியாலும், அவனுக்கு ஶரீரமாயுள்ள சிதசித்ரூபங்களாயுள்ள குணாஶ்ரயங்களான இரண்டு விபூதிகளையும் விஷயமாகக் கொண்டுள்ள படியாலும் ஸ்வாஶ்ரயத்துக்கு அத்யந்தம் அநுகூலமாக ப்ரகாஶிக்கிறது. ப்ரதிகூலவஸ்துவையோ உதாஸீந வஸ்துவையோ விஷயமாகக் கொள்ளாதபடியாலும் ஆஶ்ரயத்துக்கு அத்யந்தம் அநுகூலமாக ப்ரகாஶிக்கிறது. விஷம் ஆயுதம் முதலியவைகளிடத்தில் அவை ப்ரதிகூலம் என்ற புத்தி, சந்தநம் புஷ்பம் முதலியவைகளிடத்தில் அவை அநுகூலம் என்ற புத்தி, கட்டை மண்ணாங்கட்டி முதலிய வஸ்துக்களில் உதாஸீநம் என்ற புத்தி, சேதநாசேதநங்கள் யாவும் அப்ரஹ்மாத்மகங்களாக இருந்து கொண்டு ஸ்வதந்தரங்கள் என்ற புத்தி ஆகியவை, கர்மம் தேஹாத்மப்ரமம் முதலிய உபாதிகளை [வந்தேறிகளை] மூலமாகக் கொண்டுள்ளபடியால் ஸ்வாபாவிகங்களல்ல [இயற்கையானவைகளல்ல]. இதற்கான காரணம் வருமாறு: ஒருவனுக்குச் சிற்சில ஸமயங்களில் அநுகூலங்களாகத் தோற்றுகிற சந்தநம், புஷ்பம் முதலிய வஸ்துக்கள் அவனுக்கே வேறிடத்தில் வேறு ஸமயத்தில் ப்ரதிகூலங்களாக ஆகின்றன. அதே இடத்தில் அப்பொழுதே வேறு சிலருக்குங் கூட ப்ரதிகூலங்களாக ஆகின்றன. இத்தால் அநுகூலத்வ ப்ரதிகூலத்வங்கள் இயற்கையானவை அல்ல என்று தெரிகிறது. இயற்கையானவைகளாக இருந்தால் சந்தநம் புஷ்பம் முதலியவை எல்லாருக்கும் எல்லாக் காலத்திலும் அநுகூலங்களாகவே இருக்க வேணும். இவ்வர்த்தம் பராஶரரால் ஸ்ரீவிஷ்ணுபுராணத்தில் சொல்லப்பட்டுள்ளது.

"वस्त्वेकमेव दुःखाय सुखाय ईर्ष्यागमाय च।
तस्माद्दुःखात्मकं नास्ति न च किञ्चित्सुखात्मकम्॥"
(वि.पु. 2-6-48)

इति[1]। तस्मात् ज्ञानस्य आनन्दरूपत्वमेव स्वाभाविकम् इति सिद्धम्।

तस्मादात्मस्वरूपं स्यात् देहादिभ्यो विलक्षणम्।
स्वप्रकाशं सुखाकारं नित्यं चाणुप्रमाणकम्॥
चक्षुराद्यनभिव्यक्तं अचिन्त्यं लोकसाम्यतः।
तथाऽनवयवं निर्विकारमच्छेदनोचितम्॥
अदाह्यमक्लेदनीयमशोष्यं ज्ञानधर्मकम्।
कर्तृत्वभोक्तृत्वोपेतं नियाम्यं धार्यमीशितुः॥
यथेष्टविनियोगार्हं शरीरं परमात्मनः।
एवं यतीन्द्रसिद्धान्तनिष्णातैरभिधीयते॥

[1]इति श्रीमल्लोकाचार्यविरचिते तत्त्वविवेके
आत्मस्वरूपशोधनाधिकारः प्रथमः॥[2]

---

1. T1 omits इति
T2 इति तत्त्वविवेके आत्मस्वरूपनिरूपणं नाम प्रथमोऽधिकारः॥
G1 इति तत्त्वविवेके आत्मस्वरूपो नाम प्रथमोऽधिकारः॥ श्रीरामाख्यमहागुरवे नमः॥
G2 इति तत्त्वविवेके आत्मस्वरूप शोधनं नाम प्रथमाधिकारः॥हरिः ओँ॥
2. T1 reads here श्रीमते वरदगुरवे नमः



'ஒரு வஸ்துவே துக்கத்துக்கும், ஸுகத்துக்கும் பொறாமைக்கும் காரணமாகிறது. எனவே எந்த வஸ்துவும் துக்காத்மகமோ ஸுகாத்மகமோ அன்று.' [வி.பு. 2–6–48]

என்று கூறப்பட்டுள்ளது. எனவே ஜ்ஞாநத்துக்கு ஆநந்தரூபத்வமே ஸ்வாபாவிகம் என்பது ஸித்தம்.

எனவே ஆத்மஸ்வரூபமானது தேஹாதிகளைக் காட்டிலும் விலக்ஷணமாகும் [வேறுபட்டதாகும்]. அது ஸ்வப்ரகாஶமாயும் [தானே ப்ரகாஶிப்பதாயும்] ஸுகமே வடிவெடுத்ததாயும் நித்யமானதாயும் அணுபரிமாணம் உடையதாகவும் இருக்கிறது.

கண்கள் முதலிய இந்த்ரியங்களுக்குப் புலப்படாததாய் உலகத்திலுள்ள பொருள்களுக்கு ஸமமாக எண்ணப்பட முடியாததாய் அவயவங்கள் அற்றதாய் நிர்விகாரமானதாய் [மாறுதலற்றதாய்] வெட்டப்பட முடியாததாய்,

கொளுத்தப்பட முடியாததாய் நனைக்கப்பட முடியாததாய் உலர்த்தப்பட முடியாததாய் ஜ்ஞாநத்தை தர்மமாகக் கொண்டதாய் கர்த்ருத்வம், போக்த்ருத்வம் ஆகியவற்றுடன் கூடியதாய் பகவானால் நியமிக்கப் படுமதாய் தரிக்கப்படுமதாய்,

விருப்பப்படி விநியோகிக்கத் தகுதியுள்ளாய் அந்தப் பரமாத்மாவுக்கு ஶரீரமாயுள்ளது ஜீவாத்மஸ்வரூபம். இப்படி யதீந்த்ரரான எம்பெருமானாரின் ஸித்தாந்தத்தை நன்கு உணர்ந்தவர்கள் கூறுகிறார்கள்.

ஸ்ரீமல்லோகாசார்யர் அருளிச் செய்த
தத்த்வவிவேகத்தில் ஆத்மஸ்வரூபஶோதநாதிகாரம் என்ற
முதல் அதிகார முடிந்தது.]

# अचित्स्वरूपशोधनाधिकारः

## द्वितीयः

*अचित्स्वरूपं – ज्ञानशून्यं सतत[1] विकारास्पदं च। तच्च शुद्धसत्त्वं मिश्रसत्त्वं सत्त्वशून्यं इति त्रिविधम्। चैतन्यानाधारत्वेन[2] अचिच्छब्देन उच्यते। तत्र शुद्धसत्वं नाम रजस्तमोगन्धशून्यकेवलसत्त्वगुणयुक्तं नित्यं ज्ञानानन्दजनकं कर्मानपेक्ष[3]केवल[4]भगवदिच्छयैव विमान-गोपुर-मण्डप-प्राकारादिरूप[5]परिणामयुक्तं निरवधिकतेजोरूपं अपरिच्छिन्नं अत्यद्भुतम् इति परमव्योम[6] अभिधीयते।

[7]"क्षयन्तमस्य रजसः पराके", (तै.सं. 2-2-2)
"तमसः परस्तात्", (पुरुषसूक्तम्)
"परं ज्योतिः", (छा. 8-12-3)
"पञ्चशक्तिमये दिव्ये शुद्धसत्वे सुखाकरे।
स्वस्यापि स्पृहणीयेऽस्मिन्", (तै.उ. 2-12)

इत्यादिषु गुणान्तरास्पृष्ट-शुद्धसत्वमयं प्रतिपन्नम्। अत एव पञ्चशक्तिमयत्वं पञ्चोपनिषन्मयत्वं च तस्यभिधीयते,

---

* G1 omits from अचित्स्वरूपं तत् ........ upto ततः कर्मानपेक्ष on the next page.
1. T1 तत्
2. T1 चैतन्याकारत्वेन
3. T2 अपेक्ष्य
4. G2 omits केवल
5. G2 प्रासादादिरूप
6. G1 adds द्रव्यं
7. G2 omits क्षयन्तमस्य....शक्तयः

# அசித்ஸ்வருபஶோதநாதிகாரம்

## [இரண்டாம் அதிகாரம்]

அசித்ஸ்வருபமானது ஜ்ஞாநஶூந்யமாயும் எப்பொழுதும் விகாரங்களுக்கு [மாறுதல்களுக்கு] இருப்பிடமாயும் உள்ளது. அது ஶுத்தஸத்வம், மிஶ்ரஸத்வம், ஸத்வஶூந்யம் என்று மூன்று விதமாகவுள்ளது. சைதந்யத்துக்கு ஆதாரமாக இல்லாதபடியால் "அசித்து" என்ற ஶப்தத்தால் சொல்லப் படுகிறது. ஶுத்தஸத்வம் என்பது ரஜஸ்தமஸ்ஸுக்கள் சிறிதுமற்றதாய், ஸத்வகுணத்தை மட்டும் கொண்டதாய், நித்யமானதாய், ஜ்ஞாநாநந்தங்களை உண்டாக்குமதாய், கர்மத்தை அபேக்ஷியாமல் [எதிர்பாராமல்] பகவானுடைய இச்சையால் மட்டுமே விமாநம், கோபுரம், மண்டபம், ப்ராகாரம் [திருச்சுற்று] முதலிய ரூபத்தில் பரிணமித்து உள்ளதாய் எல்லையற்ற ஒளிவடிவானதாய், அளவற்றதாய் அத்யத்புதமாயுள்ள பரமாகாஶமாகும்.

'ரஜஸ்ஸுக்கு அப்பால் நித்யமாயிருக்கிற' [தை.ஸம். 2–2–2]
'தமஸ்ஸுக்கு அப்பாலுள்ளது' [புருஷஸூக்தம்]
'மேலான ஜ்யோதிஸ்ஸு' [சாந். 8–12–3]
'பரமேஷ்டீ, புமாந், விஶ்வ:, நிவ்ருத்த:, ஸர்வ: என்ற பஞ்சஶக்திகளால் ஆனதாய், அப்ராக்ருதமாய், ஶுத்த ஸத்வமாய், ஸுகத்தையளிப்பதாய் பகவானுக்கே விரும்பத் தக்கதாயுள்ள ஸ்ரீவைகுண்டத்தில்' [தை. உப. 2–12]

இத்யாதி ப்ரமாணங்களில் வேறு குணங்கள் கலசாத ஶுத்த ஸத்வமயமாய் இருக்குமது ஸ்ரீவைகுண்டம் என்று அறியப்படுகிறது. அதனால் தான் பஞ்சஶக்திமயத்வமும் பஞ்சோபநிஷந்மயத்வமும் அதற்கு [ஸ்ரீவைகுண்டத்துக்கு]

"शक्तयः पञ्च विख्याताः पञ्चोपनिषदाख्यया"

(?)

इत्यादिषु[1]। पञ्चोपनिषदो नाम पञ्चोपनिषन्मन्त्र बीजवाच्याः परमेष्ठि-पुरुष-विश्व[2]-निवृत्त-सर्व-संज्ञिताः परमव्योम-स्थिताः पञ्चभूतविशेषाः भगवद्दिव्यविग्रह[3] स्वरूपोक्ति[4]प्रदेशे विवरिष्यन्ते। केवलसत्वमयत्व अभिधानादेव ज्ञानानन्दजनकत्वञ्च[5] अनुसन्धेयम्। सत्वस्य ज्ञानानन्दजनकत्व प्रसिद्धेः। तस्य नित्यत्वञ्च –

"भ्रातृभिः सह देवाभैः[6] प्रविशस्व स्वकां तनुम्।
वैष्णवीं तां महातेजः तदाकाशं सनातनम्॥"

(रामा.उत्तर.110.9)

इति श्रीरामायणे,

"स्थानमेतन्महाभाग ध्रुवमक्षय[7]मव्ययम्।
ईश्वरस्य सदाप्येतत्[8] प्रणमात्र युधिष्ठिर॥"

(भार. ?)

इति आरण्यपर्वणि च तथोपदेशात्। अथ तस्य "धूत्वा शरीरमकृतं कृतात्मा [9]ब्रह्मलोकं अभिसम्भवानि"[9], (छा. 8-13-1)

1. T1 omits इत्यादिषु
2. T1 मिश्र
3. T1 भगवन्निग्रह
4. T2 रूपोत्पत्ति
5. T1 त्वाच्च
6. T2 देवाद्यैः
7. T2 अक्षरं
8. T2 सदाद्येतत्
9. G2 omits ब्रह्मलोकं अभिसम्भवानि



'பஞ்சோபநிஷத்துக்கள் என்ற பெயருள்ள பஞ்சஶக்திகள் அறியப்படுகின்றன"[?] என்பது முதலிய ப்ரமாணங்களில் சொல்லப்படுகின்றன. பஞ்சோபநிஷத்துக்களாவன – பஞ்சோபநிஷந் மந்த்ரங்களின் பீஜங்களுக்கு வாச்யங்களாய் [பீஜங்களால் சொல்லப்படுமவைகளாய்] பரமேஷ்ட, புருஷ:, விஶ்வ:, நிவ்ருத்த:, ஸர்வ: என்ற பெயர்களையுடையவைகளாய், பரமாகாஶத்திலுள்ள பஞ்சபூதவிஶேஷங்கள்; பகவானுடைய திவ்யவிக்ரஹம், ஸ்வரூபம் ஆகியவற்றைக் கூறும் மூன்றாவது அதிகாரத்தில் இவை விவரிக்கப்படும். ஸத்வகுணத்துக்கு ஜ்ஞாநாநந்தங்களை உண்டாக்கும் தன்மை உண்டு என்ற ப்ரஸித்தியிருப்பதால், ஸத்வமயமாய் மட்டுமே இது உள்ளது என்று சொல்லப் படுவதாலேயே ஜ்ஞாநாநந்தங்களை உண்டாக்கும் தன்மை இதற்கு உண்டு என்பது அநுஸந்திக்கப் படவேணும்.

அந்த ஸ்ரீவைகுண்டத்துக்கு நித்யத்வமும் ப்ரமாணங்களால் அறியப்படுகிறது.

'நித்யஸூரிகளுக்கு இணையான ஒளியுடைய தம்பிகளுடன் ஸ்ரீராமபிரானாகிற மஹாதேஜஸ்வியான தேவரீருடைய திருமேனியைப் பெற்று அந்த நித்யமான ஆகாஶத்தை [வைகுண்டத்தை] அடைய வேணும்.' [ராமா. உத்தர. 110–9]

என்று ஸ்ரீராமாயணத்திலும்.

'மஹாபாக்யவானான யுதிஷ்டிரனே! ஈஶ்வரனுடைய ஸ்ரீவைகுண்டமாகிற ஸ்தாநமானது உத்பத்தியற்றது, அழிவற்றது, விகாரமற்றது; இப்படியிருக்கும் அந்த ஸ்தாநத்தை நினைத்து எப்பொழுதும் வணங்கு'

என்று மஹாபாரதத்தில் ஆரண்யபர்வத்திலும் ஸ்ரீவைகுண்டத்தின் நித்யத்வமானது உபதேஶிக்கப்படுகிறது.

ஸ்ரீவைகுண்டத்தின் நித்யத்வமும் பரிணாமித்வமும் [மாறுதலடையும் தன்மையும்] வேறு சில ப்ரமாணங்களிலிருந்து தேறின அர்த்தங்களாகவும் ஆகின்றன. அந்த ப்ரமாணங்கள் வருமாறு–

'இந்த ப்ராக்ருத ஶரீரத்தை விடுத்து பாக்யவானான நான் ப்ரஹ்மலோகத்தையடையக் கடவேன்'[சாந்தோ. 8–13–1]

"पुण्यपापे [1]विधूय", (मुण्ड. 3-1-3)

"एकान्तिनः सदा ब्रह्मध्यायिनो योगिनो हि ये।
तेषां तत्परमं स्थानं[1] यद्वै पश्यन्ति सूरयः॥"

(वि.पु. 1-6-37)

इति कर्मनिवृत्तमुक्तप्राप्यत्वेन उदितत्वात्[2],

"देवानां पूरयोध्या तस्यां हिरण्मयः कोशः
यो वैतां ब्रह्मणो वेद [3]अमृतेनावृतां पुरीम्",

(यजुरारण्यकम् – 1)

"अपराजिता पूर्ब्रह्मणः", (छा. 8-5-5)

"प्रजापतेः सभां वेश्म प्रपद्ये[4]" (छा. 8-14-1)

इत्यादिभिः पत्तन[5]-प्राकार-मण्डप-गृहादिमत्त्वेन अभिहितत्वाच्च। तत्र स्थितानां पत्तन[6]-प्राकार-प्रासादादीनां कर्मानपेक्षकेवलभगवदिच्छया परिणामित्वं निश्चीयते।

[7]"दिव्यं स्थानं अजरं च अप्रमेयम्
दुर्विज्ञेयं चागमैः गम्यमद्य।
गच्छ प्रभो रक्ष चास्मान् प्रपन्नान्
कल्पे कल्पे जायमानः स्वमूर्त्या॥" (भार.मौसल)

इति मौसलपर्वणि दिव्यत्वेन अपरिणामित्वेन

---

1. T2 only reads विधूय .....स्थानं
2. T2 अनूदितत्वात्
3. G2 अमृतत्वेनावृतां
4. T1 G1 omit प्रपद्ये
5. T2 omits पत्तन
6. T2 मण्डप
7. T2 G2 add here अत एव



'புண்யபாபங்களை விடுத்து' [முண்டகம் 3–1–3]

'ஏகாந்திகளாய் [பகவானாகிற பலத்தை மட்டும் விரும்புமவர்களாய்] எப்பொழுதும் ப்ரஹ்மத்தை த்யாநிப்பவர்களாயுள்ள யோகிகளுக்கு அடையப்படும் மேலான ஸ்தானமான அந்த ஸ்ரீவைகுண்டமானது நித்யஸூரிகள் பார்த்துக் கொண்டிருக்கும் இடமாகும்'

[வி.பு. 1–6–37]

என்று கர்மங்களிலிருந்து விடுபட்ட முக்தர்களுக்கு ப்ராப்யமாகச் சொல்லப்பட்டிருக்கிறது ஸ்ரீவைகுண்டம்.

'விளங்குபவர்களான நித்யஸூரிகளின் பட்டணம் அயோத்யை [யாராலும் வெல்லப்பட முடியாதது]. அதில் தங்கமயமான கோஶம் [கோயில்] இருக்கிறது. அம்ருதத்தால் [ஸுகத்தால்] நிறைந்துள்ள இந்தப் பட்டணத்தை ப்ரஹ்மத்தை உபாஸிப்பவன் அடைகிறான்.

[யஜுராரண்யகம் – 1]

'ப்ரஹ்மத்தினுடைய வெல்ல முடியாத பட்டணம் ஸ்ரீவைகுண்டம்' [சாந் 8–5–5]

இப்படிப்பட்ட ப்ரமாணங்களால் பட்டணம், ப்ராகாரம் [திருச்சுற்று], மண்டபம், க்ருஹம் முதலியவற்றையுடையது ஸ்ரீவைகுண்டம் என்றறியப்படுகிறது. அங்கேயுள்ள பட்டணம், ப்ராகாரம் [திருச்சுற்று], மாளிகை முதலியவற்றுக்குக் கர்மத்தின் உதவியற்ற வெறும் பகவதிச்சையினாலேயே பரிணாமித்வம் வருகிறது என்று நிஶ்சயிக்கப்படுகிறது.

'அப்ராக்ருதமாய் கிழத்தனமற்றதாய் இந்த்ரியங்களால் அளவிட்டறிய முடியாததாய் ஶாஸ்த்ரங்களாலும் அறிய முடியாததாய் உள்ளது. நம்மால் அடையப்பட வேண்டியதாயுள்ள அந்த ஸ்ரீவைகுண்டமாகிற ஸ்தாநம். தங்களுடைய திருமேனியுடன் அவதரிக்கும் ப்ரபுவே ப்ரபந்நர்களான எங்களை ரக்ஷியும்.' [பாரதம் மௌஸல.]

என்று மஹாபாரதத்தில் மௌஸலபர்வத்தில் திவ்யமாகவும் [அப்ராக்ருதமாகவும்] அபரிணாமியாகவும் [மாறாததாகவும்],

प्रमाणान्तरानवगम्यत्वेन, [1]आगमैकसमधिगम्यत्वेन[1] च उच्यते। ततः कर्मानपेक्ष*–केवलभगवदिच्छया विमान–गोपुर–[2]मण्डपादिरूपपरिणामवत्वं उपपन्नम्। तत एव[3],

"न तत्र सूर्यो भाति न चन्द्रतारकम्।
नेमा विद्युतो भान्ति कुतोऽयमग्निः॥",

(कठ. 2-5-15, श्वे. 6-14)

"अत्यर्कानलदीप्तं तत्स्थानं विष्णोर्महात्मनः।
स्वयैव प्रभया राजन्" (भार. वन. 163-19)

"परञ्ज्योतिः" (छा. 8-12-3)

इत्यादिषु निरवधिकतेजोरूपत्वं [4]उच्यते तस्य।[4] तदपरिच्छिन्नं च।

"त्रिपादस्यामृतं दिवि", (पुरुषसूक्तम् - 3)

"परमे व्योमन्", (तै. आन. - 1)

"ब्रह्मणः सदनादूर्ध्वं तद्विष्णोः परमं पदम्।
शुद्धं सनातनं ज्योतिः परं ब्रह्मेति तद्विदुः॥"

(?)

इति त्रिपाच्छब्देन परमव्योमशब्देन परब्रह्मशब्देन च तस्य अपरिच्छेद्य[5]वचनात्।

---

1. T1 G2 omits आगमैकसमधिगम्यत्वेन
2. T1 G1 adds मणि
3. T2 G1 omit एव
4. T2 G1 अवगम्यते
5. T1 अपरिच्छेद

* G1 omits upto this portion



வேறு ப்ரமாணங்களால் அறியப்பட முடியாததாகவும் ஆகமங்களால் [ஶாஸ்த்ரங்களால்] மட்டும் அறியப்படக் கூடியதாகவும் சொல்லப்படுகிறது ஸ்ரீவைகுண்டம். எனவே கர்மத்தை அபேக்ஷியாமல் [எதிர்பாராமல்], பகவானுடைய விருப்பத்தினாலேயே விமாநம், கோபுரம், மண்டபம் முதலிய வடிவிலுள்ள பரிணாமவத்வமானது [மாறுதலடையும் தன்மையானது] பொருந்துகிறது. அதனால் தான்

'அந்த ஸ்ரீவைகுண்டத்தில் ஸூர்யன் ஒளிராது, சந்த்ரன், நக்ஷத்ரங்கள், மின்னல் ஆகியவை ஒளிரமாட்டா, அக்நி எப்படி ஒளிரும்?

[கட2 2–5–15, ஸ்வே 6–14]

'ஸூர்யன், அக்நி ஆகியவற்றின் ஒளியை விஞ்சும் ஒளியுடையது மஹாத்மாவான விஷ்ணுவினுடைய அந்த ஸ்தாநம் அது தன்னுடைய ஒளியினாலேயே விளங்குகிறது.' [பார. வந.163–9]

'மேலான ஜ்யோதிஸ்ஸு'

[சா 8–12–3]

முதலிய ப்ரமாணங்களில் அதற்கு அந்த ஸ்ரீவைகுண்டத்துக்கு நிரவதிக [எல்லையற்ற] தேஜோரூபத்வமானது சொல்லப் படுகிறது. அந்த ஸ்ரீவைகுண்டம் அபரிச்சிந்நமாகவும் [அளவிட முடியாததாகவும்] உள்ளது.

'இந்த ப்ரக்ருதி மண்டலத்தின் அப்ராக்ருதமான மூன்று பாதங்கள் ஸ்ரீவைகுண்டத்திலுள்ளன' [புருஷஸூக்தம் 3]

'மேலானதான [அளவற்றதான] ஆகாஸத்தில்'

[தை. ஆந – 1]

'சதுர்முக ப்ரஹ்மாவின் இருப்பிடத்தின் மேலுள்ளது அந்த விஷ்ணுவின் பரமபதம், ஶுத்தமானது, தொன்மையான ஜ்யோதிஸ்ஸு மேலான ப்ரஹ்மம் என்று அதை ஜ்ஞாநிகள் உணர்கிறார்கள்' [?] [ப்ரஹ்மம் = பெரிது]. என்று 'த்ரிபாத்', 'பரமவ்யோம', 'பரப்ரஹ்ம' என்ற ஶப்தங்களால் அபரிச்சேத்யம் [அளவிட முடியாதது] என்று சொல்லப் படுகிறது.

अत्यद्भुतत्वञ्च तस्य[1] अवगन्तव्यम्। मोक्षधर्मे जाबालोपाख्याने[2] चतुर्मुखलोकपर्यन्तान् लोकानुक्त्वा "एते वै निरयास्तात स्थानस्य परमात्मनः",

(भार.शान्ति. 193-6)

इति निरतिशयपुण्यसाध्यानां तेषां चतुर्मुखादिलोकानां अपि यमकूपसादृश्यावहत्वात्[3] निरतिशय[4]वैलक्षण्ययुक्तत्वेन तत्पदस्य[5] अभिधानात्। एतत्सर्वं अन्यत्रापि व्यक्तमुक्तं इतिहासपुराणोपबृंहिते उपनिषन्मते,

"परंधामाक्षर[6]परब्रह्मव्योमादिसंज्ञिते।
आगमेतरमानादिदूरापास्त[7]गुणार्णवम्॥
दुस्तार्किकदिवाभीततर्कनेत्रदिवाकरे।
अनादित्रिगुणाव्यक्तव्यक्तकालविलक्षणे॥
*रजस्तमोगन्धशून्ये शुद्धसत्वमये शुभे।
स्वयङ्गतात्मवर्णस्वरूपाविर्भावभेषजे॥
स्वसंयुक्तात्मपुनरावृत्तिराहित्यपौरुषे।
आनन्दानुबुभूषाब्धिवृद्धिशुद्धांशु[9]मण्डले॥*
स्वयम्भुशम्भुदेवर्षिसनकादिमनीषिणाम्।
विशुद्धवाङ्मनसयोरप्यगोचरवैभवे॥

1. T1 omits तस्य
2. G2 जापकोपाख्याने
3. T2 यमकूपलोकसादृश्यत्वात्
   T1 यमकूपसदृश्याव:
4. T2, G1, G2, निरवधिक
5. T2, G1 तद्भेदस्य
6. G2 परमात्मा अक्षर
7. T1 दूरापार
* G2 omits रजस्तमो.....
.....मण्डले
9. G1 शुभ्रांशु



அத்யத்புதத்வமும் இதற்கு [வைகுண்டத்துக்கு] அறியப்பட வேணும். மஹாபாரதத்தில் மோக்ஷதர்மத்தில் ஜாபாலோபாக்யாநத்தில் பிரம்மலோகம் வரையிலுள்ள உலகங்களைச் சொல்லி

'பரமாத்மாவின் ஸ்தாநத்துக்கு முன்னால் இவைகள் நரகத்திற்குச் சமமானவை' [பா4ர. ஶாந்தி 193 –6]

என்று, மிகுந்த புண்யங்களால் பெறக்கூடிய அந்த பிரம்மலோகம் முதலியவைகளும் கூட பரமபதத்தோடு ஒப்பிடும்போது நரகத்திற்குச் சமமாகையால், பரமபதம் என்பது எல்லையற்ற வைலக்ஷண்யம் [பெருமை] உடையது என்று சொல்லப்படுகிறது. இவை யாவும் இதிஹாஸபுராணங்களால் விளக்கப்பட்டுள்ள உபநிஷந் மதத்திலும் தெளிவாகச் சொல்லப்பட்டுள்ளது.

"பரம்தாம', 'அக்ஷரம்', 'பரப்ரஹ்மம்' 'பரமவ்யோமம்' முதலிய ஶப்தங்களால் சொல்லப்படுமதாய், ஆகமங்களைக் காட்டிலும் வேறுபட்ட ப்ரமாணங்களால் [ப்ரத்யக்ஷம், அனுமானம் என்ற ப்ரமாணங்களால்] அறியப்பட முடியாததாய், ரஜஸ்ஸு, தமஸ்ஸு அவற்றின் கார்யமான குணக்கடலற்றதாய்,

துஸ்தார்க்கிகர்களாய் தர்க்கமாத்ரத்தைக் கண்ணாக உடையவர்களான ஆந்தைகளுக்கு ஸூர்யனாக இருக்குமதாய், அநாதியானதாய், முக்குணமயமாய், வ்யக்தம் அவ்யக்தம் என்று பிரிந்துள்ள ப்ரக்ருதி, காலம் ஆகியவற்றைக் காட்டிலும் விலக்ஷணமானதாய்,

ரஜஸ்ஸு தமஸ்ஸு ஆகியவற்றின் கந்தமுமற்றதாய், ஶுத்தஸத்வமயமாய், ஶுபமானதாய், தன்னிடத்திலுள்ள வர்ணம் [நிறம்] ஸ்வரூபம் [தனித்தன்மை] ஆகியவற்றை வெளிப்படுத்தும் மருந்தாய்,

தன்னை வந்தடைந்த ஜீவாத்மாக்களுக்குப் பிறப்பையொழிக்கும் வீர்யமுடையதாய் ஆநந்தமாகிற அநுபவக்கடலின் வ்ருத்தியைச் செய்யும் ஶுத்தமான ஒளிமண்டலமாய்,

ப்ரஹ்மா, ஶிவன், தேவர்ஷிகளான ஸநகாதிகள் [ஸநகர், ஸந்தநர், ஸநாதநர், ஸநத்குமாரர்] முதலிய விஶுத்தமான வாக்கு மநஸ்ஸு இவைகளையுடைய ஜ்ஞாநிகளுக்கும் கூட எட்ட முடியாதபடியான வைபவம் உடையதாய்,

श्रीशानुकूल्यैक[1]रसैः महात्मभिरलङ्कृते।
अपि तेषामियन्मानम् इयदैश्वर्यमीदृशम॥
ईदृक्स्वभाव इति[2] वा परिच्छेत्तुमसाम्प्रते[3]॥
परमव्योम्न्यसङ्ख्यता लोका यत्र सुखाब्धयः।
पुण्डरीकामलदृशः पुंसः ते भोगभूमयः॥"
(??)

इति॥

तस्य अजडत्वमाहुः। जडत्वमपि केचित् आहुः[4]। अजडत्वं तु[5] भगवतो नित्यमुक्तानां च ज्ञानानपेक्ष्य[6] स्वप्रकाशक[7] [8]सामर्थ्यम्। संसारिणं[9] प्रति न तथात्वं[10],

"न सन्दृशे तिष्ठति रूपमस्य", (तै.नारा. 1–10)
"न मांसचक्षुरभिवीक्षते तं", (?)
"अपशयन्तः परं रूपं" (?)

इत्यादिना अवगम्यते। तर्हि[11] आत्मस्वरूपात्[12] तद्धर्माच्च[13] कथमस्य वैषम्यमिति चेत्– अहंबुद्धिविष्यत्वाभावात्, शरीराद्याकारपरिणामित्व[14]–विषयानपेक्ष[15]–स्वप्रकाशत्वात्

---

1. T1 श्रीसानुकूलैक
2. T1 ईदृक्स्वभावमिति
3. T1 असाम्प्रतम्
4. G2 adds आहुः
5. T2 G1 G2 च
6. T1 ज्ञानापेक्ष
7. T1 adds त्व
   G2 स्वस्वरूपप्रकाशकत्व
8. T2 G1 adds स्व
9. T1 संसारिणः
10. T1 adds च
11. G2 तस्य
12. G1 आत्मरूपात्
13. T2 G2 तद्धर्मज्ञानात् G1 तद्धर्मज्ञानस्य
14. T1 परिणामत्वात् G1 परिणामित्व
15. T1 अविषयानपेक्ष G1 विषयानमेक्षत्व



ஶ்ரிய:பதிக்கு அநுகூலமாகவிருப்பதையே ஸ்வரூபமாகக் கொண்டவர்களான மஹாத்மாக்களால் அலங்கரிக்கப் பட்டதாய், அவர்களாலுங்கூட இந்த அளவுடையது, இவ்வளவு ஐஶ்வர்யமுடையது, இன்னின்ன ப்ரகாரங்களை யுடையது, இப்படிப்பட்ட ஸ்வபாவமுடையது என்று அளவிட்டறிய முடியாததாய் உள்ள

பரமாகாஶத்தில் இன்பக் கடல்களாயுள்ள எண்ணில் அடங்காத லோகங்கள் உள்ளன. அவை தாமரை போன்ற அழகிய கண்களையுடைய நித்யஸூரிகளாகிய புருஷர்களுக்கு போகபூமிகளாகும்." [?]

அந்தப் பரமாகாஶத்துக்கு அஜடத்வம் [ஸ்வயம் ப்ரகாஶத்வம்] உள்ளது என்கிறார்கள். சிலர் ஜடத்வம் உள்ளது என்கிறார்கள். அஜடத்வமாவது பகவானுக்கும் நித்ய ஸூரிகளுக்கும் முக்தர்களுக்கும் ஜ்ஞாநத்தின் உதவி யின்றியே ப்ரகாஶிக்கும் ஸாமர்த்யம். ஸம்ஸாரிகளுக்கு அப்படித் தோற்றுவதில்லை என்பது,

'அதனுடைய ரூபம் பார்க்கவியலாததாகவுள்ளது'.
[தை. நா. 1–10]

'மாம்ஸக் கண்ணானது அதைப் பார்க்காது' [?]

'பரரூபத்தைப் பாராதவர்களாய்'[?]

என்கிற ப்ரமாணங்களிலிருந்து தெரியவருகிறது. அப்படியானால் ஆத்மஸ்வரூபம் அதனுடைய தர்மபூத ஜ்ஞாநம் என்ற இரண்டையும் காட்டிலும் இதற்கு வேறுபாடு எப்படி வரும் என்றால் – அஹம் புத்திக்கு விஷயமாக இல்லாதபடியாலும், ஶரீரம் இந்த்ரியம் முதலிய ஆகாரங்களாகப் பரிணமிக்கிறபடியாலும், விஷயங்களை எதிர்பாராமல் தானே ப்ரகாஶிப்பதாலும், ஶப்தம் – ஸ்பர்ஶம் – ரூபம் – ரஸம் – கந்தம் என்ற குணங்களுக்கு ஆஶ்ரயமாக

शब्दादिविषयाश्रय[1]त्वाच्च, तदुभयतः अस्य वैषम्यं सिद्धम्[2]।

मिश्रसत्त्वं तु सत्वरजस्तमोगुणकं बद्धचेतनज्ञानानन्दतिरोधायकं विपरीतज्ञानजनकं नित्यं भगवल्लीलोपकरणं देशकालभेदेन बहुविधविषमविकारजनकं प्रकृत्यविद्यामायाद्यपरपर्यायं वेदितव्यम्। सत्वरजस्तमांसि तस्य[3] स्वरूपानुबन्धिनः[4] स्वभावाः। तेषां लक्षणं पश्चादभिधास्यते। तद्गुणकत्वं,

"सत्वं रजस्तम इति गुणाः प्रकृतिसम्भवाः", (गीता 14-5)

"त्रिगुणं तत् जगद्योनिः", (वि.पु. 1-2-21)

"त्रिगुणं[5] कर्मिणां क्षेत्रं" (परमसंहिता – 2)

इत्यादिभिः अवगम्यते। बद्धचेतनज्ञानानन्दतिरोधायकत्वं [6]विपरीतज्ञानजनकत्वं च अस्य[6],

"निर्वाणमय एवायमात्मा[7] [8]ज्ञानमयोऽमलः। दुःखाज्ञानमला धर्माः प्रकृतेस्ते न चात्मनः॥"[8], (वि.पु. 6-7-23)

"अनीशया शोचति मुह्यमानः", (मुण्डक. 3-1-2)

"अनादिमायया सुप्तः" (माण्डूक्यकारिका)

इत्यादिना अभिधीयते॥

1. G1 omits आश्रय
2. G1 वैषम्यसिद्धिः
3. T1 इत्यस्य
4. T2, G1 omits नः
5. T1 त्रिगुणा
6. T2, G1 omit विपरीत.....अस्य
7. G1 omits आत्मा
8. G1 omits ज्ञानमयो......चात्मनः॥



இருக்கிறபடியாலும் அவ்விரண்டைக் காட்டிலும் வேறுபாடு ஸித்தம்.

மிஶ்ரஸத்வமோவெனில் ஸத்வரஜஸ்தமோ குணங்களையுடையதாய், பத்த சேதநர்களின் ஜ்ஞாநாநந்தங்களை மறைக்கக் கூடியதாய், விபரீதஜ்ஞாநஜநகமாய், நித்யமாக பகவானுடைய லீலைக்கு உபகரணமாய், தேஶகால பேதத்தால் பலவிதங்களான விஷமங்களான [ஸமமற்றவைகளான] ஆகாரங்களையுண்டாக்கக் கூடியதாய், ப்ரக்ருதி, அவித்யை முதலிய வேறு பெயர்களையுடையதாயிருப்பது என்று அறியப்படவேணும். ஸத்வம், ரஜஸ், தமஸ் என்ற குணங்கள் அதனுடைய ஸ்வரூபத்தை [மிஶ்ரஸத்வமாகிற வஸ்துவை]ப் பற்றிக் கிடக்கும் ஸ்வபாவங்களாகும். இந்த குணங்களின் லக்ஷணமானது [இலக்கணமானது] பின்பு கூறப்படும். இம்மூன்று குணங்களையுடைமையானது,

'ஸத்வம், ரஜஸ், தமஸ் என்ற குணங்கள் ப்ரக்ருதியிலிருந்து உண்டானவைகள்' [கீதை 14–5]

'முக்குணங்களையுடைய அந்த ப்ரக்ருதி ஜகத்துக்குக் காரணம்' [வி.பு. 1–2–21]

'முக்குணங்களையுடைய ப்ரக்ருதியானது கர்மிகளின் வாஸஸ்தாநமாகும்' [பரமஸம்ஹிதை 2]

என்கிற பிரமாணங்களால் அறியப்படுகிறது.

பத்தசேதநர்களின் ஜ்ஞாநாநந்தங்களை மறைக்கும் தன்மையும், விபரீதஜ்ஞாநத்தையுண்டாக்கும் தன்மையும் இதற்குள்ளது என்பது,

'ஸுகமயனாகவே இந்த ஆத்மாவுள்ளான், ஜ்ஞாநமயனாகவும் குற்றமற்றவனாகவும் இருக்கிறான். துக்கம், அஜ்ஞாநம், மலம் [தோஷம்] என்பவை ப்ரக்ருதியினுடையவை ஆத்மாவினுடையவையல்ல.' [வி.பு. 6–7–23]

'மோஹமடைபவன் ப்ரக்ருதியினால் ஶோகிக்கிறான்' [முண்டகம் 3–1–2]

'அநாதியான மாயையினால் [ப்ரக்ருதியினால் உண்டான மயக்கத்தால்] உறங்கினவன்' [மாண்டூக்ய...]

என்கிற ப்ரமாணங்களிலிருந்து அறியப்படுகிற...

नित्यत्वं च,

"अजामेकाम्", (श्वेता. 4-5)

"गौः अनाद्यन्तवती [1]सा जनित्री भूतभविनी[1]",

(मान्त्रिकोप. - 5)

"अचेतना परार्था च नित्या सततविक्रिया[2]"

(परमसंहिता - 2)

इत्यादिषु निगदितम्। अस्य भगवल्लीलोपकरणत्वं[3] च

"सितासिता च रक्ता च[4] सर्वकामदुघा विभोः",

(चूलिका. 5)

"दैवीह्येषा गुणमयी मम माया", (गीता 7-14)

"इयं [5]अभिन्ना प्रकृतिः", (?)

"क्रीडतो बालकस्येव चेष्टां तस्य निशामय।"

(वि.पु. 1-2-8)

"अप्रमेयोऽनियोज्यश्च यत्रकामगमो वशी॥

मोदते भगवान् भूतैः बालः क्रीडनकैरिव॥"

(वि.पु. 1-2-18)

इत्यादिना ज्ञायते। देशकालभेदेन बहुविध [6]विकारजनकत्वं च।

"बह्वीः प्रजाः सृजमानां सरूपाः", (श्वेता. 4-5)

"बह्वीं प्रजां जनयन्तीं सरूपां", (तै.नारा. 10-5)

"जनित्री भूतभाविनी", (मान्त्रिकोप.)

---

1. G2 adds
2. T1 T2 omit सततविक्रिया
3. T1 करणं
4. T1 adds या च
5. T2 भूमिः
   G1 भूमिः मेऽभिन्ना प्रकृतिः
   T1 भिन्ना
6. T2 G1 G2 add विषम



இதற்கு நித்யத்வம் உள்ளது என்பது,

'பிறவாத ஒன்றாயுள்ளள ப்ரக்ருதியை' [ஶ்வேதா. 4-5]

'பூதங்களுக்குக் காரணமாயுள்ள ப்ரக்ருதியானது பிறப்பிக்குமது ஆதியந்தங்களற்றது' [மந்த்ரிகோப-5]

'அசேதநமாயும் சேதநனுடைய போகத்துக்காக இருப்பதாயும் நித்யமானதாயும் எப்பொழுதும் விகாரத்தை அடையுமதாயும் உள்ளது ப்ரக்ருதி' [பரமஸம்ஹிதா.2]

என்ற ப்ரமாணங்களில் உரைக்கப்பட்டுள்ளது. இது பகவானுடைய லீலைக்கு உபகரணமாக உள்ளது என்பதும்,

'ஸத்வம், தமஸ்ஸு, ரஜஸ்ஸு என்ற குணங்களையுடையதாய் பகவானுக்கு எல்லா ரஸங்களையும் அளிப்பதாயிருக்குமது' [சூலிகா 5]

'என்னுடைய இந்த ஸத்வரஜஸ்தமோ மயமான ப்ரக்ருதியானது விளையாட்டில் ஈடுபட்டவனான என்னால் நிர்மிக்கப்பட்டது' [கீதை 7-14]

'இந்த ப்ரக்ருதி [பகவானுடைய லீலோபகரணமா யிருப்பதால்] அவனிடமிருந்து வேறுபடாதது' [?]

'விளையாடும் பாலகனைப் போன்று ப்ரக்ருதியை வைத்து விளையாடும் அந்த பகவானுடைய செயலைச் செவிமடு' [வி.பு.1-2-8]

'இந்த்ரியங்களால் அறியப்பட முடியாதவனாயும் நியமிக்கப்பட முடியாதவனாயும் தன் விருப்பப்படி நடப்பவனாயும், யாவரையும் தன் வஶத்தில் வைத்திருப்பவனாயுமுள்ள பகவான் பூதங்களால் மகிழ்கிறான், பாலகன், விளையாட்டுக் கருவிகளால் மகிழ்வது போல' [வி.பு. 1-2-18]

முதலிய ப்ரமாணங்களால் அறியப்படுகிறது. தேஶகால பேதத்தால் பலவிதங்களான விகாரங்களை உண்டாக்குகிறது என்பதும்–

'தனக்கு ஒப்பானவைகளான பல ப்ரஜைகளை உண்டாக்குமது' [ஶ்வேதா 4-5]

'தனக்கு ஒப்பான ஆகாரங்களையுடைய பல ப்ரஜைகளை உண்டாக்கும் ப்ரக்ருதி' [தை. நா. 10-5]

'பூதகாரணமான ப்ரக்ருதியானது பிறப்பிக்குமது' [மந்த்ரிகோப]

"विकारजननीं अज्ञां", (मान्त्रिकोप.)

"अचेतना परार्था च[1] नित्या सतत विक्रिया" (परमसंहिता)

इत्यादिषु कथितम्॥

अस्य[2] विकारजनकत्वात् प्रकृतित्वं, विद्या विरोधित्वात् अविद्यात्वं, विचित्रकार्यकरत्वात् मायाशब्दवाच्यत्वं, भगवतः चेतननियमनोपकरणत्वात् नियति शब्दाभिधेयत्वं, चेतन मोह[3] हेतुत्वात् मोहिनीत्वं च पर्यायतया अनुसन्धेयम्।

"महामायेत्यविद्येति नियतिः मोहिनीति च।
प्रकृतिर्वासनेत्येषा लीलाभूतिरुदीर्यते॥" (?)

इत्याद्यभिधानात्[4]।

"चतुर्विंशति सङ्ख्यातम् अव्यक्तं तत्वमुच्यते" (?)

इति वचनात् एतत् चतुर्विंशति तत्वात्मकम्। तेषां तत्वानां आदिभूता[5] प्रकृतिः,

"सर्वपूर्वा[6] प्रकृतिः" (?)

इत्यभिधानात्। साऽपि अक्षरत्व विभक्ततमस्त्व अविभक्ततमस्त्वरूप विविध सङ्कुचितावस्थायुक्ता। तत्र तस्याः समष्टिसूक्ष्मरूपेण अवस्थानमेव अक्षरावस्था।

1. T2 G1 omit अचेतना पारार्था च
2. T2 अस्याः
3. T1 मोह
4. T2 G1 omit इत्यभिधानात्
5. T2 आविर्भूता
6. G2 सर्वा पूर्वा



'விகாரங்களையுண்டாக்கும் அறிவற்ற ப்ரக்ருதி' [மந்த்ரிகோப]

'அசேதநமாயும் சேதனனுடைய போகத்துக்காக இருப்பதாயும் நித்யமானதாயும் எப்பொழுதும் விகாரத்தை அடையுமதாயும் உள்ளது ப்ரக்ருதி' [பரமஸம்ஹிதா]

முதலிய ப்ரமாணங்களில் உரைக்கப்பட்டுள்ளது.

மிஶ்ரஸத்வமானது விகாரஜநகமானபடியால் ப்ரக்ருதித்வம், வித்யாவிரோதியானபடியால் அவித்யாத்வம், விசித்ரகார்யகரமானபடியால் மாயாஶப்தவாச்யத்வம், பகவானுக்குச் சேதநநியமநோபகரணமாக இருக்கிறபடியால் நியதிஶப்தவாச்யத்வம், சேதனனுடைய மோஹத்துக்கு ஹேதுவானபடியால் மோஹிநீத்வம் என்ற இந்த தர்மங்கள் இதற்கு உண்டு என்று க்ரமப்படி நினைக்கப்பட வேண்டியவைகள்.

'மஹாமாயை, அவித்யை, நியதி:, மோஹிநீ, ப்ரக்ருதி:, வாஸனா என்று இந்த லீலாவிபூதியானது சொல்லப்படுகிறது' [?]

என்று ப்ரமாணமிருப்பதால்.

'இருபத்துநான்கு என்ற எண்ணிக்கையையுடையது அவ்யக்தமாகிற தத்த்வம்' [?]

என்ற வசநத்தால் இந்த லீலாவிபூதியானது இருபத்து நான்கு த்ரவ்யங்களாகவுள்ளது. அந்த த்ரவ்யங்களின் ஆதியாக [மூலமாக] உள்ளது ப்ரக்ருதியாகும்.–

"யாவற்றுக்கும் பூர்வமானது ப்ரக்ருதி'

என்று கூறப்படுகிறது. அந்த ப்ரக்ருதியும் அக்ஷரத்வம்– விபக்ததமஸ்த்வம் – அவிபக்ததமஸ்த்வம் என்ற பலவிதமான சுருங்கின நிலைகளை உடையது. ஸமஷ்டி ஜீவாத்மாவுடன் கூடியிருக்கும் நிலையே அதனுடைய அக்ஷராவஸ்தையாகும். [ஸமஷ்டி ஜீவாத்மா என்பது தனக்கென்று ஒரு உருவத்தையும் [தேவன், மனுஷ்யன், திர்யக்கு, ஸ்தாவரம் என்பவற்றில் ஒரு ஶரீரத்தையும்] அதற்கான பெயரையும் [தேவன், மநுஷ்யன் முதலிய பெயரையும்] அடையாமல் மெழுகில் தங்கத்துகள் ஒட்டிக் கொண்டிருப்பதுபோல் ப்ரக்ருதியில் ஒட்டிக் கொண்டிருக்கும் ஜீவாத்மா ஆகும்.]

[1]पुरुषसमष्टि सहितायाः तस्याः सर्वप्रमाणागोचरत्वेन[2] अवस्थानमेव विभक्ततमोऽवस्था। तथाविधायाः अपि भगवति[3] नामरूपविभागानर्हा– वस्थापत्तिः[4] अविभक्त[5] तमस्त्वम्। एवं विधात् प्रकृतितत्वात्[6] गुणवैषम्येन महदादि विकाराः जायन्ते। गुणाः सत्वरजस्तमांसि। एते प्रकृतेः स्वरूपानुब[7]न्धिनः स्वभावाः। प्रकृत्यवस्थायां [8]अस्पष्टाः विकृत्यवस्थायां च स्पष्टा[8] भवन्ति। तत्रसत्वस्य ज्ञानसुखजनकत्वं तदुभयसङ्गजनकत्वं च लक्षणम्।

"तत्र सत्वं निर्मलत्वात् प्रकाशकमनामयम्।
सुखसङ्गेन बध्नाति ज्ञानसङ्गेन च अनघ[9]॥"

(गीता 14-6)

इति गीतत्वात्। रजसो राग तृष्णा सङ्ग कर्मसङ्ग हेतुत्वं च लक्षणम्। रागो योषित्पुरुषयोः अन्योन्य स्पृहा। तृष्णा शब्दादि सर्वविषय स्पृहा। सङ्गः पुत्रमित्रादिषु[10] सम्बन्धिषु संश्लेष स्पृहा। (कर्मसङ्गो नाम क्रियासु सपृहा।)

---

1. T1 G2 omit पुरुष
2. T1 गोचरत्वेन
3. T1 भगवति
4. T2, G2 omit एव
5. T2 विभक्त
6. G1 प्रकृतेः
7. T2 न्धिस्वभावात्
   G1 G2 न्धिस्वभावाः
8. T2 G1 omit स्पष्टा
9. T2 G1 G2 भारत
10. T1 G2 omit मित्र



புருஷஸமஷ்டியுடன் கூடின அதற்கு [அந்த ப்ரக்ருதிக்கு] எந்த ப்ரமாணத்தாலும் அறியப்பட முடியாமலிருக்கும் நிலையே விபக்ததமோவஸ்தையாகும். பெயர், உருவம் என்ற இரண்டையும் அடையத் தகுதியிற்று பகவானோடு ஒன்றிக் கிடக்கும் நிலையே அவிபக்ததமோவஸ்தையாகும். இப்படிப்பட்ட ப்ரக்ருதிதத்த்வத்திலிருந்து குணவைஷம்யத் தால் மஹதாதி விகாரங்கள் உண்டாகின்றன. குணங்களாவன ஸத்வம், ரஜஸ்ஸு, தமஸ்ஸு என்பவை. இவை ப்ரக்ருதியோடு சேர்ந்துள்ள ஸ்வபாவங்களாகும். ப்ரக்ருத்யவஸ்தையில் [காரணநிலையில்] இந்த குணங்கள் அஸ்பஷ்டங்களாகவுள்ளன; விக்ருத்யவஸ்தையில் [கார்ய நிலையில்] ஸ்பஷ்டங்களாக ஆகின்றன. அவற்றில் ஸத்வத்துக்கு ஜ்ஞாநஸுகஜநகத்வமும் ததுபயஸங்க ஜநகத்வமும் [அவ்விரண்டிலும் ஆசையை உண்டாக்குதலும்] லக்ஷணமாகும்.

'முக்குணங்களில் ஸத்வகுணமானது மறைக்கும் தன்மையற்றபடியால் வஸ்துக்களின் உண்மையைப் புலப்படுத்துகிறது, நோயற்றதன்மைக்கு ஹேதுவாகவுள்ளது. இது ஸுகத்திலும் ஜ்ஞாநத்திலும் ஜீவாத்மாவுக்கு ஆசையை ஏற்படுத்தி அவற்றுக்கான லௌகிக வைதிக ஸாதநங்களை அநுஷ்டிக்கச் செய்து, அவற்றின் பலனை அனுபவிப்பதற்காக பிறவியெடுக்கச் செய்து பந்தப்படுத்துகிறது.' [கீதை 14–6]

என்று கண்ணனால் அருளப்பட்டுள்ளது. ரஜஸ்ஸுக்கு ராக– த்ருஷ்ணா – ஸங்கஹேதுத்வமும் கர்மஸங்கஹேதுத்வமும் லக்ஷணமாகும். [ராகம் முதலியவற்றில் ஆசையை உண்டாக்குதல் ரஜோகுணத்தின் லக்ஷணம் என்று பொருள்.] ராக: என்பது ஸ்த்ரீ புருஷர்களிடையே பரஸ்பரம் ஏற்படும் ஆசை. த்ருஷ்ணா என்பது ஶப்தாதி ஸர்வ விஷயங்களிலும் ஏற்படும் ஆசை. ஸங்க: என்பது பிள்ளை, நண்பர்கள் முதலியவர்களிடத்தில் அவர்களுடன் கலந்து பரிமாறவேணும் என்று ஏற்படும் ஆசை. கர்மஸங்க: என்பது க்ரியைகளில் ஏற்படும் ஆசை.

"रजो रागात्मकं विद्धि तृष्णा सङ्ग समुद्भवम्।
तन्निबध्नाति कौन्तेय कर्मसङ्गेन देहिनम्॥"

(गीता 14.7)

इत्यभिधानात्। तमसः विपरीतज्ञान प्रमादालस्य निद्रा जनकत्वं[1] लक्षणम्। प्रमादः कर्तव्यात् कर्मणः अन्यत्र प्रवृत्तेः हेतुभूतं अनवधानम्। आलस्यं कर्मसु अनारम्भस्वभावः, स्तब्धता इति यावत्। निद्रा पुरुषस्य इन्द्रियप्रवर्तन श्रान्त्या [2]सर्वेन्द्रियप्रवर्तनो[2]परतिः। तत्र बाह्येन्द्रियप्रवर्तनोपरमः[3] स्वप्नः। मनसोऽप्युपरतिः सुषुप्तिः।

"तमस्तु अज्ञानजं विद्धि मोहनं सर्वदेहिनाम्।
प्रमादालस्य निद्राभिः तन्निबध्नाति भारत॥"

(गीता 14-8)

इति गीतत्वात्। एतेषां[4] गुणानां समत्वावस्थायां[5] एतत्[6]विकाराणां समत्वं अस्पष्टता च । तेषां विषमत्वावस्थायां तु विकाराणां विषमत्वं स्पष्टत्वं[7] च ।

विषमविकारेषु प्रथमविकारो महान्। अयं चसात्विको राजसः तामस इति त्रिविधोऽध्यवसाय[8] -जनकश्च।

"सात्विको राजसश्चैव तामसश्च त्रिधा महान्।"

(वि.पु. 1-2-36)

---

1. T2 G1 G2 adds हि
2. T1 adds सर्वेन्द्रियप्रवर्तन
3. T2, G1 रतिः
4. T2, G1 तेषां
5. T1 समत्वावस्थानां
6. T1 एतत्
7. T2 स्पष्टं
8. T1 अध्यास



'ரஜோகுத்தை ராகஹேது என்று அறிவாய்; அது த்ருஷ்ணா, ஸங்கம் ஆகியவற்றை ஏற்படுத்துகிறது; புண்யபாபரூபங்களான க்ரியைகளில் ஸங்கத்தை [ஆசையை] ஏற்படுத்தி அவற்றின் பலாநுபவத்துக்காகப் பிறவிகளைக் கொடுத்து இந்த ஜீவாத்மாவை பந்தப்படுத்துகிறது'

[கீதை 14–7]

என்று பகவானால் அருளப்பட்டுள்ளது. தமஸ்ஸுக்கு விபரீதஜ்ஞாநம், ப்ரமாதம், ஆலஸ்யம், நித்ரை ஆகியவற்றை உண்டாக்குதல் லக்ஷணமாகும். ப்ரமாதம் என்பது செய்யப்பட வேண்டிய செயலை விட்டு வேறு செயலில் ஈடுபடுவதற்குக் காரணமான கவனக்குறைவு. ஆலஸ்யம் என்பது செயல்களைத் தொடங்காமலிருக்கும் ஸ்வபாவம் அல்லது ஸ்தப்ததா [சோம்பல்]. நித்ரை என்பது புருஷனுடைய இந்த்ரிய ப்ரவர்த்தனத்தாலுண்டான ஶ்ரமத்தால் ஸர்வேந்த்ரியங்களின் ஓய்வு. அதில் வெளி இந்திரியங்களின் ப்ரவர்த்தநத்தின் உபரமம் [ஓய்வு] ஸ்வப்நமாகும். மனத்தினுடைய உபரதியானது [ஓய்வானது] ஸுஷுப்தியாகும்.

'தமோ குணமோவென்றால் அஜ்ஞாநத்திலிருந்து உண்டானது என்றறிவாய், ஸர்வதேஹிகளுக்கும் விபரீத ஜ்ஞாநத்தையுண்டாக்கக் கூடியது; ப்ரமாதம், ஆலஸ்யம், நித்ரை என்பவற்றையுண்டாக்கி அவற்றின் மூலம் தேஹியான ஆத்மாவை அது பந்திக்கிறது' – [கீதை 14–8]

என்று பகவானால் அருளப்பட்டுள்ளது.

இந்த குணங்களின் ஸமத்வாவஸ்தையில் அவற்றின் இந்த விகாரங்களுக்கு [கார்யங்களுக்கு] ஸமத்வமும் அஸ்பஷ்டதையுமிருக்கும்; விஷமத்வாவஸ்தையிலோ [ஸமத்வமற்ற நிலையிலோ] என்றால் விகாரங்களுக்கு [கார்யங்களுக்கு] விஷமத்வமும் [ஸமமற்ற தன்மையும் ஸ்பஷ்டத்வமும் இருக்கும்.

விஷமவிகாரங்களில் முதல் விகாரமானது மஹான் ஆகும். இது ஸாத்விகம், ராஜஸம், தாமஸம் என்று மூவகைப்பட்டது, இது அத்யவஸாய ஜநகமாகவுமுள்ளது [உறுதியையுண்டாக்குவதாயுமுள்ளது].

'ஸாத்விகம், ராஜஸம், தாமஸம் என்று மஹான் மூவகைப்படும். [வி.பு. 1–2–36]

इत्युक्ते:[1]। एतस्माच्च

"वैकारिक: तैजसश्च भूतादिश्चैव तामस:
त्रिविधोयमहङ्कारो महत्तत्वादजायत॥"

(वि.पु 1-2-37)

इत्युक्ते:[2] वैकारिक: तैजसो भूतादिश्चेति अभिमान-हेतुत्वलक्षण: त्रिविधोयं[3] अहङ्करो जायते। तत्र[4] वैकारिकापरनाम्न: सात्विकाहङ्कारात् श्रोत्र-त्वक्-चक्षु-र्जिह्वा-घ्राणाख्यानि पञ्चज्ञानेन्द्रियाणि, वाक् पाणि पाद पायूपस्थ नामानि पञ्चकर्मेन्द्रियाणि ज्ञान कर्महेतुभूतं एकं[5] मनश्चेति एकादशेन्द्रियाणि जायन्ते। तेषां एकादशेति[6] सङ्ख्या नियम:[7] इन्द्रिय समष्टिविषय: न तु व्यष्टिविषय:। इन्द्रियव्यक्तीनां आनन्त्यात्। भूताद्यपरसंज्ञकात् तामसाहङ्कारात् शब्दतन्मात्रं एकं जायते। शब्दतन्मात्रात् आकाशं[8] स्पर्शतन्मात्रं च। तस्मात् वायु:[9] रूपतन्मात्रं च। तस्मात् तेजो[10] रसतन्मात्रं च। तस्मादापो[11] गन्धतन्मात्रं च। तस्मात् पृथिवी जायते[12]।

---

1. T2 इत्युक्त:
2. T1 omits उक्ते:
3. T1, G2 omit अयं
4. G2 omits तत्र
5. T2 omits एकं
6. T2, G1, G2 omits इति
7. G1 adds स:
8. T2, G1 आकाशतत्वं G2 आकाश:
9. T2, G1 स्पर्शतन्मात्रात् वायुतत्वं G2 वायु:
10. T2, G1 रूपतन्मात्रात् तेजस्तत्वं G2 तेज:
11. T2, G1 रसतन्मात्रात् अप्तत्वं G2 आप:
12. T2 गन्धतन्मात्रात् पृथिवीतत्वं शब्दतन्मात्रं च। T2 breaks here



என்று விஷ்ணுபுராணத்தில் சொல்லப்பட்டுள்ளது.

'வைகாரிகம், தைஜஸம், தாமஸமுான பூதாதி என்று மூவகைப்பட்டுள்ள அஹங்காரமானது மஹத்தத்த்வத்தில் இருந்து உண்டாயிற்று! [வி.பு. 1–2–37]

என்று வசநமிருப்பதால் வைகாரிகம், தைஜஸம், பூதாதி என்று அபிமாநஹேதுவாயுள்ள மூவகைப்பட்ட அஹங்காரமானது உண்டாகிறது. அதில் வைகாரிகம் என்று இன்னொரு பெயருடைய ஸாத்விகாஹங்காரத்திலிருந்து *ஶ்ரோத்ரம்*, த்வக் [தோல்], சக்ஷுஸ்ஸு [கண்], ஜிஹ்வா [நாக்கு], க்ராணம் [மூக்கு] என்ற ஐந்து ஜ்ஞாநேந்த்ரியங்களும், வாக், பாணி [கை], பாதம் [கால்], பாயு [மலத்தை வெளிப்படுத்தும் இந்த்ரியம்] உபஸ்தம் [முத்ரத்தைத் வெளிப்படுத்தும் இந்த்ரியம்] என்ற ஐந்து கர்மேந்த்ரியங்களும், ஜ்ஞாநகர்ம ஹேதுவாயுள்ள ஒன்றான மனஸ்ஸு என்ற இந்த்ரியமும், ஆகப் பதினோரு இந்த்ரியங்கள் உண்டாகின்றன. அவைகள் பதினொன்று என்ற ஸாங்க்யர்களுடைய கருத்தானது இந்த்ரியஸமஷ்டியை [இந்த்ரியத்வஜாதியை] விஷயமாகக் கொண்டது, வ்யஷ்டியை [வ்யக்தியை] விஷயமாகக் கொண்டதன்று; இந்த்ரியவ்யக்திகள் அநந்தங்களாக [எண்ணிலடங்காதவைகளாக] இருப்பதால். பூதாதி என்ற இன்னொரு பெயருடைய தாமஸ அஹங்காரத்திலிருந்து *ஶப்தந்மாத்ரம்* மட்டும் உண்டாகிறது. *ஶப்த*தந்மாதரத்திலிருந்து ஆகா*ஶ*மும் ஸ்பர்*ஶ*தந்மாத்ரமும் உண்டாகின்றன. ஸ்பர்*ஶ*தந்மாத்ரத்திலிருந்து வாயுவும் ரூபதந்மாத்ரமும் உண்டாகின்றன. ரூபதந்மாத்ரத்திலிருந்து தேஜஸ்ஸும் ரஸதந்மாத்ரமும் உண்டாகின்றன. ரஸதந்மாத்ரத்திலிருந்து ஜலமும் கந்ததந்மாத்ரமும் உண்டாகின்றன. கந்ததந்மாத்ரத்திலிருந்து ப்ருதிவீ உண்டாகிறது.

तन्मात्राणि नाम शान्तत्व-घोरत्व-मूढत्व-लक्षणविशेषरहितानि शब्दादिमात्रगुणकानि भूतसूक्ष्माणि।

"तस्मिन् तस्मिंस्तु तन्मात्रं तेन तन्मात्रता स्मृता"
(वि.पु. 1-2-44)

इति वचनात्। शान्तत्वं नाम अनुकूलवेदनीयत्वम्। घोरत्वं नाम प्रतिकूलवेदनीयत्वम्। मूढत्वं नाम उदासीनवेदनीयत्वम्। स्वत: शान्ते भूमिजले घोरौ तेजोऽनिलौ स्वत:[1] मूढ: आकाश:। मेलनात् सर्वाणि शान्तघोरमूढानि भूतानि[2]। तस्मिन् तस्मिन् आकाशादौ तन्मात्रं विशेषरहित शब्दस्पर्शादि गुणमात्रम्। तेन तस्मिन् तस्मिन् तत्वे [3]तन्मात्रता इति[3]। विशेषाश्च शान्तत्व-घोरत्व-मूढत्व लक्षणा: त्रयो गुणस्वभावा:। ते च तन्मात्रदशायां अनभिव्यक्ता:। भूतावस्थायां तु अभिव्यक्ता:। शब्दतन्मात्रादाकाशम्। तस्मात्[4] स्पर्शतन्मात्रम्। तस्मात्[5] वायु:। तस्मात्[6] रूपतन्मात्रम्। तत:[7] तेज:। तता[8] रसतन्मात्रम्। तत:[9] सलिलम्। ततो[10] गन्ध तन्मात्रम्। तत:[11] पृथिवी जायते इति च केचिदाहु:। तन्मात्राणां शान्तत्वादिविशेषराहित्यात्

---

1. G1 G2 omit स्वत:
2. T1 omits भूतानि
3. T1 तन्मात्रतोऽपि
4. G2 आकाशात्
5. G2 स्पर्शन्मात्रात्
6. G2 वायो:
7. G2 रूपतन्मात्रात्
8. G2 तेजसो:
9. G2 रसतन्मात्रात्
10. G2 सलिलात्
11. G2 गन्धतन्मात्रात्



தந்மாத்ரங்களாவன ஶாந்தத்வ கோரத்வ மூடத்வங்களாகிற விஶேஷகள் அற்றவையாய், ஶப்தம் ஸ்பர்ஶம், ரூபம், ரஸம், கந்தம் என்ற குணங்களை மட்டும் கொண்டவைகளான பூதஸூக்ஷ்மங்கள்.

'அவ்வற்றில் அந்தந்த ஶப்தாதி குணங்கள் மட்டும் உள்ளன. எனவே அந்தந்த குணங்களை மட்டும் கொண்ட தத்த்வங்களுக்குத் தந்மாத்ரதையுள்ளது.' [வி.பு. 1-2-44]

என்று வசநமிருக்கிறது. ஶாந்தத்வம் என்றால் அநுகூலமாக அறியப்படும் தன்மை. கோரத்வம் என்றால் ப்ரதிகூலமாக அறியப்படும் தன்மை மூடத்வம் என்றால் உதாஸீநமாக அறியப்படும் தன்மை. இயற்கையில் ஶாந்தமானவைகள் பூமியும் ஜலமும், இயற்கையில் கோரங்கள் தேஜஸ்ஸும் காற்றும், இயற்கையில் மூடமானது ஆகாஶம். சேர்கையினால் எல்லா பூதங்களும் ஶாந்த கோர மூடங்களாக ஆகின்றன. அந்தந்த ஆகாஶாதியில் [ஆகாஶாதிக்குக் காரணமான] தந்மாத்ரமானது விஶேஷரஹிதமாய் ஶப்த ஸ்பர்ஶாதியான குணமாத்ரத்தை உடையது. எனவே அந்தந்த தத்த்வத்தில் தந்மாத்ரதையுள்ளது. விஶேஷங்களாவன ஶாந்தத்வ–கோரத்வ–மூடத்வ லக்ஷணங்களான [ரூபங்களான] மூன்று குணஸ்வபாவங்கள் [வெளிப்படாதவைகளாய்] உள்ளன. பூதாவஸ்தையிலோ என்றால் அபிவ்யக்தங்களாய் [வெளிப்பட்டவைகளாய்] ஆகின்றன. ஶப்ததந்மாத்ரத்திலிருந்து ஆகாஶம் உண்டாகிறது. ஆகாஶத்திலிருந்து ஸ்பர்ஶதந்மாத்ரம். ஸ்பர்ஶதந்மாத்ரத்தி லிருந்து வாயு. வாயுவிலிருந்து ரூபதந்மாத்ரம். ரூபதந்மாத்ரத்திலிருந்து தேஜஸ்ஸு, தேஜஸ்ஸிலிருந்து ரஸதந்மாத்ரம். ரஸதந்மாத்ரத்திலிருந்து ஜலம், ஜலத்திலிருந்து கந்ததந்மாத்ரம், கந்ததந்மாத்ரத்திலிருந்து ப்ருதிவீ உண்டாகிறது என்றுங்கூடச் சிலர் சொல்லுகிறார்கள். தந்மாத்ரங்களுக்கு ஶாந்தத்வாதி விஶேஷங்களில்லாமையால் 'அவிஶேஷ:' என்று

अविशेष इति पर्याय:। तदुक्तं[1] तन्मात्राण्यधिकुर्वता यादवप्रकाशेन,

"तन्मात्राणि अविशेषा इति अनर्थान्तरम्।
[2]शान्तत्वं घोरत्वं मूढत्वं इति त्रयो विशेषा: त्रैगुण्यात्मान:। तेषां अनुद्भवात् सूक्ष्माकाश विशेषलक्षणं भवति। तेन शब्दतन्मात्रं उच्यते। एवं सूक्ष्मो वायु:, सूक्ष्मं तेज:, सूक्ष्मा आप:, सूक्ष्मा पृथिवी"

इति।[2] राजसाहङ्कारस्तु सात्विक तामसाहङ्कारयो:[3] स्वस्वकार्यजननदशायां प्रवर्तक:।

"रज: प्रवर्तकं तत्र" (?)

इत्युक्ते:। सात्विकाहङ्कारात् क्रमेण शब्दतन्मात्रादि-पञ्चकसहायात् श्रोत्रादिज्ञानेन्द्रियपञ्चकं, तथा[4] वागादि-कर्मेन्द्रिय[5]पञ्चकं[6] च उत्पद्यते[7]। तदसहकृतात् वैकारिकात् मनस: उत्पत्ति: इत्याहु:।

"भौतिकानीन्द्रियाण्याहु:" (?)

इति इन्द्रियाणां भौतिकत्ववचनं तु भूताप्यायननिबन्धनम्।

"आप्यायन्ते च ते नित्यं धातव: तैस्तु पञ्चभि:"

(भारते मोक्षधर्मे 184–54)

---

1. G2 तथोक्तं
2. G1, G2 only read शान्तत्वं.......पृथिवी इति
3. G1 omits अहंकारयो:
4. G1 adds तथा
5. G1 G2 omit कर्मेन्द्रिय
6. G1 पञ्चकानि
7. G1 G2 आपद्यते



அவை கூறப்படுகின்றன. தந்மாத்ரங்களைக் குறித்துப் பேசும் யாதவப்ரகாஶர் கூறுவது:

'தந்மாத்ரங்கள் என்றால் அவிஶேஷங்கள் என்றர்த்தம். ஶாந்தத்வம், கோரத்வம், மூடத்வம் என்ற விஶேஷங்கள் மூன்று குணவடிவங்களாகும். அவை வெளிப் படாமையால் ஸூக்ஷ்மாகாரவிஶேஷத்தை உடையதாக ஆகாஶம் ஆகிறது. எனவே அந்த ஆகாஶம் [ஸூக்ஷ்மாகாஶம்] ஶப்ததந்மாத்ரம் என்று சொல்லப் படுகிறது. அப்படியே ஸூக்ஷ்மமான வாயு ஸ்பர்ஶதந்மாத்ரம், ஸூக்ஷ்மமான தேஜஸ்ஸூ ரூபதந்மாத்ரம், ஸூக்ஷ்மமான ஜலம் ரஸதந்மாத்ரம், ஸூக்ஷ்மமான ப்ருதிவீ கந்ததந்மாத்ரம்.'

என்று. ராஜஸ அஹங்காரமோ என்றால் ஸாத்விக தாமஸ அஹங்காரங்கள் தங்கள் தங்கள் கார்யங்களை உண்டாக்கும் போது ப்ரவர்த்தகமாக [தூண்டுகோலாக] உள்ளது;

'ராஜஸாஹங்காரம் ப்ரவர்த்தகம் அங்கே' [?]

என்று கூறப்பட்டிருப்பதால். ஸாத்விகாஹங்காரத்திலிருந்து க்ரமமாக ஶப்ததந்மாத்ராதி பஞ்சகத்தின் ஸஹாயத்தால் ஶ்ரோத்ராதி ஜ்ஞாநேந்த்ரிய பஞ்சகமும் வாகாதிகர்மேந்த்ரிய பஞ்சகமும் உண்டாகின்றன. தந்மாத்ரங்களின் ஸஹாயமற்ற வைகாரிகத்திலிருந்து [ஸாத்விகாஹங்காரத்திலிருந்து] மனஸ்ஸின் உத்பத்தி ஏற்படுகிறது என்று கூறுகிறார்கள்.

'இந்த்ரியங்கள் பௌதிகங்கள் [பூதங்களிலிருந்து உண்டானவைகள்] என்று கூறுகிறார்கள்' [?]

என்ற இந்த்ரியங்களைப் பற்றின பௌதிகத்வ வசநமோவென்றால் பூதங்களால் அவை வளர்க்கப் படுகின்றன [ஸ்வகார்ய ஸமர்த்தங்களாக்கப்படுகின்றன] என்ற அர்த்தத்தையுடையதாகும்.

'அந்த இந்த்ரியங்கள் நித்யமாகப் பஞ்சபூதங்களா லன்றோ வளர்க்கப்படுகின்றன [தங்கள் கார்யத்தைச் செய்யும் ஶக்தியுக்தங்களாக ஆக்கப் படுகின்றன]'

[பாரதம். மோக்ஷதர்மம் 184 – 54]

इति वचनात्। एवं महदादि[1]पदार्थानां पृथक् पृथक् कार्यविशेषाः कथिताः। अनन्तरं एतत्समुदायकार्यं अभिधीयते। एवमुकतान्[2] महदादिसकलपदार्थान् अन्योन्यमिलितान् कृत्वा ब्रह्माण्डाकारपरिणतान्[3] करोति भगवान्। महदादीनामपि अण्डकारणत्वं अनुसन्धेयम्। महदादिकार्यविशेषाणां [4]ब्रह्माण्डान्तः-स्थितत्वदर्शनात्[4]।

"[5]महदादयो विशेषान्ता[5] ह्यण्डमुत्पादयन्ति ते"
(वि.पु. 1-2-53)

इति स्मरणाच्च। अन्योन्यमिलितमृत्सिकताजलानां[6] घटाद्याकार परिणतिशक्तिवत्[7] तत्र पञ्चीकृतानामेव भूतानां अण्डोत्पादकत्वसामर्थ्यम्।

"नानावीर्याः पृथग्भूताः ततस्ते संहतिं विना।
नाशक्नुवन् प्रजाः स्रष्टुं असमागम्य कृत्स्नशः"
(वि.पु. 1-2-52)

इत्युक्तत्वात्[8]।

अयं च पञ्चीकरणप्रकारो भूतपञ्चकस्य। आकाशं द्विधा कृत्वा[9] एकमर्धं आकाशत्वेन स्थापयित्वा, अन्यदर्धं चतुरंशं कृत्वा वायु-तेजो-

1. G1 adds विशेषाः
2. T1 एवमुक्तं
3. G1 परिण्तिं
4. T1 ब्रह्माणोऽन्तःस्थितत्व अदर्शनात्
5. G1 G2 महदाद्याः विशेषास्तानि
6. G2 सिकतानां
7. G1 परिणतिशक्तित्वात्
8. G1 इति तथोक्तत्वात्
9. G1 कृत्य



என்று வசநமிருக்கிறபடியால். இப்படி மஹதாதி பதார்த்தங்களுக்குத் தனித்தனியாகக் கார்ய விஶேஷங்கள் உரைக்கப்பட்டுள்ளன. பிறகு இவற்றின் ஸமுதாய கார்யம் சொல்லப்படுகிறது. இப்படிக் கீழே சொல்லப்பட்ட மஹதாதி ஸகலபதார்த்தங்களையும் ஒன்றுக்கொன்று சேர்ந்தவைகளாக ஆக்கி ப்ரஹ்மாண்டாகாரமாகப் பரிணாமத்தை அடைந்தவைகளாக ஆக்குகிறான் பகவான். மஹதாதிகளுக்குங்கூட அண்டகாரணத்வமானது கருதப்பட வேணும். மஹதாதி கார்ய விஶேஷங்களுக்கு ப்ரஹ்மாண்டத்துக்குள் இருப்பு காணப்படுவதால்.

'மஹத்து தொடங்கி விஶேஷபர்யந்தமான [பூதங்கள் முடியவுள்ள] அந்த தத்த்வங்களன்றோ அண்டத்தை உண்டாக்குகின்றன.' [வி.பு.1-2-53]

என்று ஸ்ம்ருதியுள்ளது. அந்யோந்யம் சேர்ந்தவைகளான மண், மணல், ஜலம் ஆகியவற்றுக்கே குடம் முதலிய வடிவங்களாக மாறுதல் அடையும் ஶக்தியுள்ளது. அவ்வாறே பஞ்சீகரணம் செய்யப்பட்ட

'வெவ்வேறு வீர்யங்களையுடையவைகளாய்ச் சேர்க்கையின்றிக்கே தனித்தனியேயுள்ளவைகளான பூதங்கள் முழுவதுமாகத் தங்களுக்குள் சேராமல் போனால் ப்ரஜைகளை ஸ்ருஷ்டிப்பதற்கு ஶக்தியுடையவைகளாக ஆக மாட்டா. [வி.பு. 1-2-52]

என்று சொல்லப்பட்டிருக்கிறது.

இந்த பஞ்சீ கரணப்ரகாரமும் பூதபஞ்சகத்துக்கேயுள்ளது. ஆகாஶத்தை இரண்டு பகுதியாக ஆக்கி, ஒரு பகுதியை ஆகாஶமாக வைத்து, இன்னொரு பாதியை நாலு பகுதிகளாக்கி அவற்றை வாயு, தேஜஸ்ஸு, ஜலம், ப்ருதிவீ ஆகியவற்றுடன்

जल-पृथिवीषु तेषां[1] चतुर्णां अंशानां क्रमात् अविभक्तमेलनम्। एवं भूतान्तराणामपि।

[2]"एवं जातेषु भूतानि प्रत्येकं स्युः द्विधा ततः।
[3]चतुर्धा भिन्नमेकैकं अर्धमर्धं तथा स्थितं।
व्योम्नोऽर्धभागाः चत्वारो वायु तेजः पयो भुवाम्।
अर्धानि वायु तेजस्तु व्योमतेजः पयो भुवाम्[3]॥"
(?)

इत्यादिना तथोक्तेः[4]। एवम्भूतेभ्यः समुत्पद्यमानं अण्डं मृत्पिण्डात् उत्पद्यमानं घटादिकमिव भवति। किन्तु[5] युगपदेव न।

"न क्रमेण विवृद्धं तत् जलबुद्बुदवत् समम्[6]"
(वि.पु. 1-2-56)

इति कथितत्वात्। इदं च अण्डं दशगुणोत्तरैः सलिल-अनिल-अनल-वियत्-अहङ्कार-महत्-अव्यक्तैः सप्तभिरावरणैः आवृतम्।

"वारिवह्न्यनिलाकाशैः ततो भूतादिना बहिः।
वृतं दशगुणैरण्डं भूतादिर्महता तथा॥

1. G1 omits तेषां
2. G1, G2 add तथोक्तं
3. G1 alone reads चतुर्धा...पयोभुवाम्
4. G1, G2 omit तथोक्तेः
5. G1 omits किन्तु
6. G1 omits समं



சேர்த்தல். இப்படியே மற்ற பூதங்களுக்கும் செய்தல் வேணும். இப்படிச் செய்தலே பஞ்சீகரணமாகும்.

'இப்படியுண்டான பூதங்கள் ஒவ்வொன்றும் இரண்டிரண்டு பாதிகளாகப் பிரிகின்றன. ஒரு பாதி நான்காகப் பிரிகிறது. இன்னொரு பாதி அப்படியேயுள்ளது. ஆகாஶத்துடன் [பாதியாக்கப்பட்ட ஆகாஶத்துடன்] வாயு, தேஜஸ்ஸு, ஜலம், ப்ருதிவீ என்ற பூதங்களின் பாதிகளும் தங்களைத் தவிர்ந்த மற்ற நாலு பூதங்களின் அரைக்கால் பாகங்களுடன் சேர்கின்றன' [?]

என்று ப்ரமாணம் கூறுகிறது. இப்படியுண்டாகும் அண்டமானது ம்ருத்பிண்டத்திலிருந்து உண்டாகும் குடம் முதலியவை போல் உருவாகிறது. ஆனால் ஒரே ஸமயத்தில் உருவாவதில்லை.

'க்ரமப்படி வளர்ந்த அண்டமானது நீர்க்குமிழியைப் போல் இன்னொரு அண்டத்துடன் ஸமமாக விருக்கிறது'
[வி.பு. 1-2-56]

என்று சொல்லப்பட்டிருக்கிறது. இந்த அண்டமானது பத்து மடங்குகளாகவுள்ள ஜலம் – தேஜஸ்ஸு – காற்று – ஆகாஶம் – அஹங்காரம் – மஹத்து – அவ்யக்தம் என்று ஏழு ஆவரணங்களால் [மூடிகளால்] மூடப்பட்டுள்ளது.

"ஜலம் – தேஜஸ்ஸு – ஆகாஶம் – பூதாதியான அஹங்காரம் என்ற பத்து மடங்குகளையுடைய தத்த்வங்களால் அண்டமானது மூடப்பட்டுள்ளது, பூதாதியான அஹங்காரமானது மஹத்தினால் மூடப்பட்டிருப்பதைப் போல.

अव्यक्तेनावृतो ब्रह्मन् तैस्सर्वैः सहितो[1] महान्।
एभि[2]रावरणैरण्डं सप्तभिः प्राकृतैः वृतम्॥
नारिकेलफलस्यान्तः बीजं बाह्यदलैरिव॥"
(वि.पु. 1-2-59, 60)

इति तदुक्तेः।[3]

[4]"तदनन्तं असङ्ख्यातप्रमाणम्" (वि.पु. 2-7-26)

इति प्रकृतेः एव अनन्तपरिमाणात्वे दशोत्तरत्वं कथितमिति चेत् न, दशोत्तरत्ववचनं तु सहस्रे शतस्येव अधिके न्यूनस्यापि सम्भवात्[4]॥

एतदण्डं चतुर्दशभुवनात्मकम्।

[5]"चतुर्दशभुवनात्मकमण्डं दशगुणितोत्तरं च आवरण सप्तकम्" (वैकुण्ठगद्यम्)

इत्यभिधानात्।[5] एवंविधानि अण्डानि बहूनि।

"अण्डानां तु सहस्राणां सहस्राण्ययुतानि च।
ईदृशानां तथा तत्र कोटिकोटिशतानि च॥"
(वि.पु. 2-7-26)

इति वचनात्। एतस्मिन्नण्डे चतुर्मुखं सृजति भगवान्।

"तत्र ब्रह्मा चतुर्मुखोऽजायत त्र्यक्षः
स पुरुषो लोके ब्रह्मेति कार्त्यते।"[6] (महानारा.3)

"ब्रह्माणं असृजत् प्रभुः" (?)

---

1. T1, आवृतो
2. G2 बहि
3. G1 omits इति तदुक्तेः
4. G1 only reads तदनन्तरं.......सम्भवात्
5. G1 only reads चतुर्दश.....भिधानात्
6. G1 only reads तत्र ....... कीर्त्यते।



அவை யாவற்றுடனும் [ஜலம் – தேஜஸ்ஸு – காற்று – ஆகாஶம் – அஹங்காரம் ஆகிய யாவற்றுடனும்] கூடியுள்ள மஹானானது அவ்யக்தத்தால் [ப்ரக்ருதியால்] மூடப்பட்டு உள்ளது ப்ராஹ்மணரே! ப்ராக்ருதங்களான இந்த ஏழு ஆவரணங்களால் அண்டமானது மூடப்பட்டுள்ளது தேங்காயின் உள்ளிருக்கும் விதையானது பாஹ்ய தளங்களால் [கொட்டாங்கச்சியாலும் மட்டையாலும்] மூடப்பட்டு இருப்பதைப்போல." [வி.பு. 1–2–59,60]

என்று கூறப்பட்டுள்ளது.

'அந்த ப்ரக்ருதியானது அநந்தமானது, எண்ணிலடங்காத அளவுடையது' [வி.பு. 2–7–26]

என்று ப்ரக்ருதி ஸாமாந்யத்துக்கு அநந்த பரிமாணம் [எண்ணிலடங்காத அளவு] இருப்பதால் பத்து மடங்குகள் என்பது குறிப்பிட்ட அளவைக் குறிக்கவில்லை. பத்து மடங்கு என்ற வசநமானது ஆயிரத்தில் நூறு அடங்கி யிருப்பதைப் போல் அதிகத்தில் ந்யூநம் [குறைவு] ஏற்படும் என்பதைக் குறிக்கிறது. [ஜலாவரணத்தைப் போல் பலநூறு மடங்கு தேஜஸ் ஆவரணம் இருந்தாலுங் கூட பத்து மடங்கு என்று கொள்ளலாம், நூறில் பத்து அடங்கினதாகையால். இவ்வாறே அடுத்தடுத்த ஆவரணங்களும் பல நூறு மடங்குகளாக விருந்தாலுங் கூடப் பத்து மடங்கு என்று கொள்ளலாம். ]

இந்த அண்டமானது பதினாலு புவநங்களை [லோகங்களை]க் கொண்டது.

'பதினாலு உலகங்களைக் கொண்டது அண்டம் பத்து மடங்குகள் உடையவை ஏழு ஆவரணங்கள்'
[ஸ்ரீவைகுண்டகத்யம்]

என்று கூறப் பட்டிருக்கிறது. இப்படிப்பட்ட அண்டங்கள் பலவாகும்.

'ஆயிரத்தை ஆயிரத்தால் பெருக்கிப் பத்தாயிரத்தால் பெருக்க வேணும். வந்த தொகையை நூறுகோடிக் கோடியால் பெருக்க வேணும். அண்டங்களின் எண்ணிக்கை இவ்வளவாகும்.' [வி.பு. 2–7–26]

என்று கூறப்பட்டுள்ளது. இந்த அண்டத்துக்குள் நான்முகனைப் படைக்கிறான் பகவான்.

'அந்த அண்டத்தில் முக்கண்ணனான சதுர்முகன் பிறக்கிறான். அந்தப் புருஷன் ஶாஸ்த்ரத்தில் ப்ரஹ்மா என்று கூறப்படுகிறான்' [?]

'ப்ரஹ்மாவை பகவான் ஸ்ருஷ்டித்தான்.' [?]

इति वचनात्[1]। अण्डानि[2] अण्डकारणानि च स्वयमेव सृजति भगवान्[3]।

[4]"सोऽभिध्याय शरीरात्स्वात् सिसृक्षुः विविधाः प्रजाः।
अप एव ससर्जादौ तासु वीर्यं अपासृजत्।
तदण्डं अभवत् हैमं सहस्रांशुसमप्रभम्॥"

(मनु. 1-8, 9)

"मम योनिर्महद् ब्रह्म तस्मिन् गर्भं दधाम्यहम्।
सम्भवः सर्वभूतानां ततो भवति भारत॥"

(गीता 14-3)

इति वचनात्।[4] अण्डान्तर्वर्तिनः पदार्थांस्तु ब्रह्मादिचेतनान्तर्यामित्वेन सृजति।

[5]"यत् किञ्चित्सृज्यते येन सत्वजातेन वै द्विज।
तस्य संसृज्यमानस्य तत्सर्वं वै हरेस्तनुः।
सर्गस्थितिविनाशांश्च भगवान् मधुसूदनः।
तैस्तैः रूपैः अमेयात्मा करोति अव्याहतान् प्रभुः॥"

(वि.पु. 22.38)

इति वचनात्॥[5]

गगन–पवन–ज्वलन–सलिल–अवनीनां[6] क्रमेण अवकाश–वहन–पचन–सेचन–धारणादिहेतुत्वं अनुसन्धेयम्। श्रोत्रादिज्ञानेन्द्रियाणां क्रमेण शब्दादिग्रहणं[7] व्यापारः। वागादीनां क्रमेण वचन–अदन–गमन– उत्सर्जनहेतुत्वं

---

1. G2 अभिधानात्
2. G1 अण्डं
3. G1 G2 add पुरुषोत्तमः
4. G1 only reads सोभिधाय....वचनात्
5. G1 only reads यत्किञ्चित्.....वचनात्
6. G1 सलिल वसुमतीनां
7. T1 ग्रहण



என்று இப்படி வசநங்களுள்ளன. அண்டங்களையும் அண்டகாரணங்களையும் தானே ஸ்ருஷ்டிக்கிறான் பகவான்.

'அந்த பகவான் ஸங்கல்பித்துத் தன்னுடைய ஶரீரத்திலிருந்து பலவிதங்களான ப்ரஜைகளை ஸ்ருஷ்டிக்க விரும்பியவனாய் முதலில் ஜலத்தையே ஸ்ருஷ்டித்தான். பிறகு அதில் அண்டம் உண்டாவதற்கான வீர்யத்தை [ஶக்தியை] உண்டாக்கினான். அதில் அண்டம் உண்டாயிற்று. அந்த அண்டமானது தங்கத்தைப் போல் ஜ்வலிப்பதாய் ஆயிரம் ஸூர்யகிரணங்களுக்கு ஒப்பான ஒளியுடையதாகவிருந்தது.' [மனுஸ்ம்ருதி 1–8,9]

"என்னுடையதாய் எல்லா ஜகத்துக்கும் காரணமாய் உள்ளதாய் மஹதஹங்காராதி விகாரங்களுக்குக் காரணமானபடியால் பெரிதாயுள்ளது ப்ரக்ருதி. அந்த ப்ரக்ருதியில் ஜீவஸமுஹமாகிற கர்பத்தை நான் ஸ்தாபிக்கிறேன். என் ஸங்கல்பத்தாலுண்டான ப்ரக்ருதி ஜீவர்களின் அந்த ஸம்யோகத்தால் ப்ரஹ்மா தொடங்கிப் புல் ஈறாகவுள்ள எல்லா ப்ராணிகளின் பிறப்பும் ஏற்படுகிறது பாரதனே!" [கீதை 14–2]

என்று வசநங்கள் உரைக்கின்றன. அண்டத்துக்குட்பட்ட பதார்த்தங்களை ப்ரஹ்மாதிசேதநர்களுக்கு அந்தர்யாமியாக இருந்து கொண்டு பகவான் ஸ்ருஷ்டிக்கிறான்.

"அந்தணனே! எதுவொன்று எந்த பிராணி ஸமூஹத்தால் ஸ்ருஷ்டிக்கப்படுகிறதோ அந்த ஸ்ருஷ்டிக்கப்படும் ப்ராணியினுடைய காரணத்தத்வங்கள் யாவும் ஹரியின் ஶரீரங்களாகும்.

தடைப்படாதவைகளான உத்பத்தி ஸ்திதிலயங்களை அளவிட்டறிய முடியாத ஆத்மாவான பகவான் மதுஸூதநனாகிற ப்ரபு அந்தந்த ரூபங்களால் செய்கிறான்."

[வி.பு. 22–38]

என்று வசநங்கள் கூறுகின்றன.

ஆகாஶம், காற்று, நெருப்பு, தண்ணீர், பூமி ஆகியவை முறையே இடமளிப்பது, எடுத்துச் செல்வது, சமைப்பது, நனைப்பது, தாங்கி நிற்பது ஆகியவற்றுக்குக் காரணங்கள் ஆகின்றன. காது, வாய், கண், மூக்கு, தோல் ஆகிய ஞ்ஞாநேந்திரியங்களுக்கு, முறையே கேட்டல், சுவைத்தல், பார்த்தல், முகர்தல், உணர்தல் ஆகியவை செயல்களாகும். வாக்கு, பாணி, பாதம், பாயு, உபஸ்தம் ஆகிய கர்மேந்த்ரியங் களுக்கு முறையே பேசுதல், எடுத்து உண்ணுதல், நடத்தல்,

अनुसन्धेयम्[1]। मनस्तु उभयप्रवृत्ति[2]हेतु भूतम्। आकाशादि भूतानां क्रमेण शब्द–स्पर्श–रूप–रस–गन्धाः असाधारणगुणाः। गुणविनिमयस्तु पञ्चीकरण निबन्धनः। पूर्वपूर्वतन्मात्रसाहचर्येण उत्तरोत्तरतन्मात्राणां स्वस्वविशेषजनकत्वात् उत्तरोत्तरभूतानां गुणाधिक्यम् इति च आहुः।।

भौमादिभेदेन तेजो बहुविधम्। तत्र आदित्यादि–तेजांसि चिरकालवर्तित्वेन स्थिराणि। दीपादितेजांसि क्षिप्रणाशित्वात् अस्थिराणि। लौहित्यं तेजसो वर्णः, औष्ण्यं स्पर्शः। शौक्ल्यं अपां वर्णः, शैत्यं स्पर्शः, माधुर्यं रसः। भूमेः वर्णो, रसश्च बहुविधः। अस्याः वायोश्च अनुष्णाशीतः स्पर्शः। एवमुक्तलक्षणं मिश्रसत्त्वं शुद्धसत्त्वं च ईश्वरस्य आत्मनां च भोग्यभोगोपकरणभोगस्थानरूपेण तिष्ठति। तत्र भोग्याः शब्दादयः। भोगोपकरणानि इन्द्रियाणि। भोगस्थानानि लोकाः देहाश्च।

सत्त्वशून्यं तु कालः। अस्य गुणत्रयविधुरत्वात्[3] सत्त्वशून्यं इति संज्ञा। सत्त्वशब्दो रजस्तमसोरपि उपलक्षकः। अयं प्रकृतिप्राकृतानां परिणामहेतुः। कलाकाष्ठादिद्विपरार्धपर्यन्तकल्पितविकारयुक्तो नित्यो भगवतः क्रीडापरिकरः शरीरभूतश्च। अत्र प्रमाणानि

1. G1 अवगन्तव्यं 2. T1 G2 उभयवृत्ति 3. G1 विहीनत्वात्



[மல–மூத்ரங்களை] வெளியே தள்ளுதல் ஆகியவை செயல்களாகும். மனஸ்ஸோவென்றால் கர்மேந்த்ரியம் ஜ்ஞானேந்த்ரியம் ஆகிய இரண்டு விதமான இந்த்ரியங்களின் செயல்களுக்கும் காரணமாகவுள்ளது. ஆகாஶாதிகளான பூதங்களுக்கு முறையே ஶப்தம், ஸ்பர்ஶம், ரூபம், ரஸம், கந்தம் என்பவை தனிப்பட்ட குணங்களாகும். குணங்களின் மாறாட்டமோவென்றால் பஞ்சீகரணத்தால் வருகிறது. ஒன்றின் தந்மாத்ரங்கள் மற்றொன்றின் தந்மாத்ரங்களுக்குக் காரணமாக அமைவதால், அந்தந்த குணங்கள் மேல் மேல் தந்மாத்ரங்களிலும் அமைந்திருக்கும்.

பௌமாதி பேதத்தால் தேஜஸ்ஸு பஹுவிதமாக உள்ளது. அவற்றில் சூரியன் முதலிய தேஜஸ்ஸுக்குள் நீண்டகாலம் உள்ளவைகளாகையால் ஸ்திரங்கள். தீபம் முதலிய தேஜஸ்ஸுக்கள் விரைவில் அழிவதால் அஸ்திரங்கள். சிவப்பு தேஜஸ்ஸின் நிறமாகும், ஔஷ்ண்யம் [வெப்பம்] ஸ்பர்ஶமாகும். வெண்மை ஜலத்தின் நிறமாகும், குளிர்ச்சி ஸ்பர்ஶமாகும், இனிமை ரஸமாகும். பூமிக்கு நிறமும், ரஸமும் – பலவிதமாகும். பூமிக்கும் வாயுவுக்கும் அனுஷ்ணாஶீதம் [வெப்பமும் குளிர்ச்சியும் அற்றிருக்கை] ஸ்பர்ஶமாகும். ஆகச் சொல்லப்பட்ட வடிவிலுள்ள மிஶ்ர ஸத்வமும் [ப்ரக்ருதி மண்டலமும்] ஶுத்தஸத்வமும் [நித்ய மண்டலமும்] ஈஶ்வரனுக்கும் ஆத்மாக்களுக்கும் போக்யங் களாயும் போகோபகரணங்களாயும் போகஸ்தானங்களாயும் உள்ளன. அவற்றில் போக்யங்களாவன – ஶப்த, ஸ்பர்ஶ, ரூப, ரஸ, கந்தங்கள்; போகோபகரணங்களாவன – இந்த்ரியங்கள்; போகஸ்தாநங்களாவன – லோகங்களும் தேஹங்களும்.

ஸத்வஶூந்யம் என்பதோ காலமாகும். இதற்கு ஸத்வம், ரஜஸ், தமஸ் என்ற முக்குணங்களில் ஒன்று கூட இல்லாதபடியால் ஸத்வஶூந்யம் என்று பெயர் வந்துள்ளது. ஸத்வ ஶப்தமானது ரஜஸ்ஸு, தமஸ்ஸு என்ற குணங்களையும் காட்டுகிறது. காலமாகிறவிது ப்ரக்ருதியினுடையவும் ப்ரக்ருதிவிகாரங்களாய் ப்ராக்ருதங்களாயுள்ள பதார்த்தங் களினுடைய பரிணாமத்துக்கு [மாறுதலுக்கு] ஹேதுவாகிறது. கலை, காஷ்டை தொடங்கி த்விபரார்தம் முடியக் கல்பிக்கப்பட்ட விகாரங்களுடன் [அளவுகளுடன்] கூடியவிது நித்யமானது, பகவானுடைய விளையாட்டுக் கருவியாயும் ஶரீரமாயுமுள்ளது. இவ்வர்த்தங்களைக் காட்டும் ப்ரமாணங்கள்:

"प्रधान पुरुषव्यक्तकालास्तु प्रविभागशः।
रूपाणि स्थितिसर्गान्तव्यक्तिसद्भावहेतवः॥",

(वि.पु. 1-2-17)

"अनादिर्भगवान् कालः [1]नान्तोस्य द्विज विद्यते[1]",

(वि.पु.)

"रूपान्तरं तद् द्विज कालसंज्ञम्",(वि.पु. ????)

"ब्रह्मा दक्षादयः कालः तथैव अखिलजन्तवः।
विभूतयो हरेरेताः जगतः सृष्टिहेतवः॥"

(वि.पु. 1-22-31)

इत्यादीनि[2]।

तत्र[3] प्रथमस्य अचितः ऊर्ध्वभागस्य परितो विस्तारस्य च अपरिच्छिन्नत्वम्। द्वितीयस्य पुनः अधोभागस्य परितो विस्तारस्य च परिच्छेदराहित्यम्। तृतीयस्य तु सर्वतः [4]परिच्छेदो न सम्भवति[4]।

संहारस्तु महदादि सृष्ट्युपदेश[5]क्रमेणैव जायते[6]। तथापि[7] सङ्ग्रहेण अभिधीयते। स च नैमित्तिकः प्राकृतिकः तथैव आत्यन्तिकलयः इति त्रिविधः। तेषां नैमित्तिकः ब्रह्मणो रात्रिषु[8] सम्प्राप्तः त्रैलोक्यविनाशः।

"ब्राह्मो नैमित्तिकः तेषां कल्पान्ते प्रतिसञ्चरः"

(?)

---

1. G1, G2 only read नान्तो.....विद्यते
2. G1 इति
3. G1 omits तत्र
4. T1 परितश्च अधो न भवति
5. G1 omits उपदेश
6. T1 ज्ञायते
7. G1 तथाहि
8. G1 ब्रह्मरात्रिषु



'ப்ரதாநம் என்கிற ப்ரக்ருதி, புருஷன், காலம் என்பவை தனித்தனியே பகவானுடைய ஶரீரங்களாம்; ஸ்திதி, உத்பத்தி, லயம் என்ற வ்யக்திகளின் ஸத்பாவத்துக்கு ஹேதுக்களாகவும் உள்ளன.' [வி.பு.1–2–17]

'அநாதியான காலமானது பகவானுடைய ஶரீரமாகும் த்விஜனே! இந்தக் காலத்துக்கு அந்தமில்லை'

[வி.பு. 1–2–24]

'பகவானுடைய இன்னொரு ரூபமானது காலம் என்ற பெயருடையது' [?]

'ப்ரஹ்மா, தக்ஷாதிப்ரஜாபதிகள், காலம், அவ்வாறே ஸர்வ ஜந்துக்களாகிற இவையாவும் ஹரியின் விபூதிகள் [சொத்துக்கள்], ஜகத்தின் ஸ்ருஷ்டிக்கு ஹேதுக்கள்'

[வி.பு. 1–2–31]

இவற்றில் முதல் அசித்தாகிற ஶுத்தஸத்வத்துக்கு மேல் பாகம், பக்கங்களின் விஸ்தாரம் ஆகியவை அளவற்றவை. இரண்டாவது அசித்தான மிஶ்ரஸத்வத்துக்கு கீழ்பாகம், பக்கங்களின் விஸ்தாரம் ஆகியவை அளவற்றவை. மூன்றாவது அசித்தான காலமானது எல்லாப் பக்கத்திலும் அளவற்றது.

ஸம்ஹாரமோவென்றால் மஹதாதி ஸ்ருஷ்டி க்ரமத்திலேயே உண்டாகிறது. [அதாவது உத்தரோத்தரம் உண்டான தத்த்வங்கள் பூர்வம் பூர்வம் அழிந்து முதன் முதலில் உண்டான மஹத்தத்த்வம் கடைசியில் அழிகிறது.] ஆயினும் சுருக்கமாக ஸம்ஹாரத்தைப் பற்றிக் கூறுகிறோம். அந்த ஸம்ஹாரம் நைமித்திகலயம், ப்ராக்ருதிகலயம், ஆதித்யந்திகலயம் என்று மூன்று வகைப்படும். அவற்றில் நைமித்திகலயம் என்பது சதுர்முகப்ரஹ்மாவின் ராத்ரிகளில் ஏற்படும் [பூ:, புவ:, ஸுவ: என்ற] மூன்று லோகங்களின் அழிவாகும்.

"கல்பத்தின் அந்தமான [முடிவான] ப்ரஹ்மாவி னுடைய ராத்ரியில் அந்த மூன்று லோகங்களுக்கும் நைமித்திகலயம் என்ற விநாஶம் ஏற்படுகிறது [?]

इत्युक्तेः। प्राकृतस्तु ब्रह्मायुरवसाने प्रकृतिपर्यन्तो विनाशः। आत्यन्तिकस्तु उत्पत्तिहेतुभूत-अविद्या कर्मवासनादिभिः सह पुनरुद्भवनिवृत्तिहेतुभूतः प्रकृतिसम्बन्धविनाशः।

"आत्यन्तिकस्तु मोक्षाख्य प्राकृतो द्विपरार्धगः"

(???)

इति वचनात्।[8]तत्र प्रकृतिविनाशपर्यन्तं संहारस्तूपदिश्यते। ब्रह्मायुरवसानकालेन समस्तेषु पातालादि सत्यलोकपर्यन्तेषु अनावृष्टि-अग्नि-संवर्तैः परिक्षीणपदार्थेषु भूमेः भूमित्वव्यवस्थापक गन्धात्मकं (गुणं) अपो ग्रसन्ति। ततो भूमिः जलात्मिका भवति इति। तथोक्तम् –

"अनावृष्टि-अग्नि-सम्पर्कैः कृते संक्षालने मुने।
समस्तेष्वेव लोकेषु पातालेष्वखिलेषु च।
आपो ग्रसन्ति वै पूर्वं भूमेः गन्धात्मकं गुणम्॥
नष्टे च गन्धतन्मात्रे भवत्युर्वी जलात्मिका"

(वि.पु. 6-4-12, 14)

इति। एवं सप्तापि प्रकृतयः स्वस्वकारणनि विशन्ति। तथा

"एवं सप्त महाबुद्धे क्रमात् प्रकृतयः स्मृताः।
प्रत्याहारे तु ताः सर्वाः प्रविशन्ति परस्परम्॥

(वि.पु. 6-4-30)

8. G1 only reads तत्र प्रकृतिविनाश..........परमात्मनि॥ on the next page.



என்று கூறப்பட்டிருக்கிறது. ப்ராக்ருதப்ரளயம் என்பது ப்ரஹ்மாவினுடைய ஆயுஸ்ஸின் முடிவில் ப்ரக்ருதி பர்யந்தம் ஏற்படும் அழிவாகும். ஆத்யந்திகலயம் என்பதோவென்றால் உத்பத்திக்கு ஹேதுவாயுள்ள அவித்யாகர்மவாஸநாதிகளுடன் கூடப் புனருத்பத்திக்கு ஹேதுவாயுள்ள ப்ரக்ருதி ஸம்பந்தத்தின் அழிவாகும்.

'ஆத்யந்திகலயமாவது மோக்ஷமாகும், ப்ராக்ருத லயமாவது ப்ரஹ்மாவின் ஆயுஸ்ஸு முடியும் காலமான த்விபரார்த்தின் முடிவில் ஏற்படும் விநாஶமாகும்' [?]

என்ற வசநம் இவ்வர்த்தத்தைக் காட்டுகிறது. இவற்றில் ப்ரக்ருதி விநாஶபர்யந்தமான ஸம்ஹாரமானது இனி உபதேஶிக்கப்படும். ப்ரஹ்மாவின் ஆயுஸ்ஸின் முடிவுக் காலத்தில் கீழே பாதாளந் தொடங்கி, மேலே ஸத்யலோகம் முடியவுள்ள ஸமஸ்தலோகங்களும் மழையின்மை, அக்நி, அதிகமழை என்பவற்றால் அழிக்கப்பட்ட பதார்த்தங்களாக ஆகின்றன. எங்கும் ஜலம் நிறைந்து, பூமியின் பூமித்வத்தை நிலைநிறுத்தும் கந்தம் என்கிற குணத்தை ஜலம் விழுங்கிவிடும். இதனால் ஜலமாகவே பூமி மாறிவிடுகிறது. இவ்வர்த்தத்தைக் காட்டும் பிரமாணம் வருமாறு:

'மழையின்மை, அக்நி, அதிக மழை என்பவற்றால் பாதாளந் தொடங்கி ஸத்யலோகம் முடியவுள்ள எல்லாவுலகங்களும் நீராக்கப் பட்டவுடன் ஜலமானது பூமியின் கந்தமாகிற குணத்தை விழுங்கிவிடுகிறது. கந்தமாகிற அஸாதாரணகுணம் நாஶமடைந்தவாறே பூமியானது ஜலமாக மாறி விடுகிறது. [வி.பு. 6-4-12,14]

இப்படி ப்ருதிவி, ஜலம், தேஜஸ், வாயு, ஆகாஶம், அஹங்காரம், மஹான் என்ற ஏழு ப்ரக்ருதிகளும் [அண்டகாரண வஸ்துக்களும்] தங்கள் தங்கள் காரணங்களை ப்ரவேஶிக்கின்றன [காரணவஸ்துக்களாகவே மாறி விடுகின்றன].

'மஹாபுத்திமானே! க்ரமப்படி இப்படி ஏழு ப்ரக்ருதிகளும் ஸ்மரிக்கப்படுகின்றன. அவையாவும் ப்ரத்யாஹாரத்தால் [கவரப்படுதலால்] ஒன்றுள் ஒன்று ப்ரவேஶிக்கின்றன.'

[வி.பு. 6-4-30]

"महान्तं एभिः सहितं प्रकृतिर्ग्रसते द्विज"
(वि.पु. 6-4-33)

इति वचनात्।

"पुरुषः समष्टौ प्रलीयते अव्यक्तं पुरुषे
ब्रह्मनिष्कले संप्रलीयत" (?)

इति वचनात्, अव्यक्तस्य सूक्ष्मरूपेण अवस्थानमेव लयः, पुरुषलयकारणत्वात्। परमपुरुषस्य अत एव उभयोः अविशेषेण प्रलयकारणत्वं अभिधीयते।

"प्रकृतिः या मया प्रोक्ता व्यक्ताव्यक्तस्वरूपिणी।
पुरुषश्चाप्युभावेतौ लीयते परमात्मनि॥"[1]
(वि.पु. 6-4-39)

इति॥

एवं उक्तलक्षणस्य त्रिविधस्य अचितः शेषत्वयुक्तं ज्ञेयतैकस्वभावत्वं लक्षणम्। एवं त्रिविधमचित्तत्त्वं इति सिद्धम्॥

ज्ञानशून्यं अचित्तत्त्वं विकारास्पदमुच्यते।
शुद्धसत्त्वं मिश्रसत्त्वं सत्त्वशून्यमिति त्रिधा॥
आद्यं रजस्तमश्शून्यं एकसत्त्वं सनातनम्।
ज्ञानानन्दोत्पादकं च कर्मापेक्षानिवृत्तया॥
ईशेच्छया विमानादिरूपेण परिणामवत्।
[2]निस्सीमतेजोरूपं तदपरिच्छिन्नमद्भुतम्[2]॥

1. G1 only reads upto this portion.
2. T1 निस्सीमानि ततो रूपं परिच्छिन्नं तदद्भुतम्



'இந்த ப்ரக்ருதிகளுடன் கூடியுள்ள மஹான் என்ற தத்த்வத்தை மூலப்ரக்ருதியானது விழுங்கி விடுகிறது த்விஜனே!' [வி.பு. 6-4-33].

இப்படி வசநங்கள் கூறுகின்றன.

'புருஷன் ஸமஷ்டியில் [அவ்யக்தத்தில்] லயம் அடைகிறான். அவ்யக்தமானது அவயவங்களற்ற ப்ரஹ்ம மாகிற பரமபுருஷனிடத்தில் நன்கு லயிக்கிறது' [?]

என்று வசநமிருக்கிறது. அவ்யக்தத்துக்கு ஸூக்ஷ்மரூபமாக நிலை நிற்றலே லயமாகும், புருஷனுடைய [ஜீவனுடைய] லயத்துக்குக் காரணமாக விருப்பதாக இந்த வசநம் தெரிவிப்பதால். இப்படி அவ்யக்தமும் ஜீவாத்மாவும் நித்யமாக இருப்பதால்தான் பரமபுருஷனுக்கு இருவரையும் குறித்து வேறுபாடின்றிக்கே ப்ரளயகாரணத்வம் கூறப்படுகிறது.

'என்னால் சொல்லப்பட்டதாய் அவ்யக்த ரூபத்திலுள்ள ப்ரக்ருதியும் ஜீவாத்மாவாகிற புருஷனும் பரமாத்மாவில் லயமடைகிறார்கள்' [வி.பு. 6-4-39]

என்று கூறப்பட்டுள்ளது.

இப்படிச் சொல்லப்பட்ட வடிவிலுள்ள மூன்று விதமான அசித்துக்கும் ஶேஷத்வத்துடன் கூடின அறியப்படும் தன்மையை மட்டுமே கொண்டிருத்தல் என்பது லக்ஷணமாகும். [ஜ்ஞேயதைகஸ்வபாவத்வம் = அறியப்படும் தன்மையை மட்டுமே கொண்டிருத்தல் என்றால் ஜ்ஞாதாவாக [அறியும் தன்மையுடையதாக = அறிவுள்ள வஸ்துவாக] இல்லாதிருத்தல் என்று பொருள்] இப்படி மூன்று விதமாயுள்ள அசித்தத்த்வமானது ஸித்திக்கிறது [நிலைநிற்கிறது].

ஜ்ஞாந ஶூந்யமாய் விகாரங்களுக்கு [மாறுதல்களுக்கு] இருப்பிடமாயுள்ள வஸ்துவானது அசித் தத்த்வம் என்று சொல்லப்படுகிறது. அது ஶுத்த ஸத்வம், மிஸ்ரஸத்வம், ஸத்வஶூந்யம் என்று மூன்று விதமாகவுள்ளது.

முதலாவதான ஶுத்தஸத்வமானது ரஜஸ்தமோ குணங்களற்றது, ஸத்வகுணத்தை மட்டும் கொண்டது, அநாதியானது, ஜ்ஞாநாநந்தங்களை உண்டாக்குமது, கர்மத்தை அபேக்ஷியாமல் [எதிர்பாராமல்],

ஈஶனான பகவானுடைய இச்சையினால் விமாநாதி ரூபமாகப் பரிணாமத்தை [மாறுதலை]யடைந்துள்ளது, எல்லையற்ற தேஜோரூபமானது, அளவற்றதாயும் அத்புதமாயும் இருக்குமது.

मिश्रसत्वं तु सत्त्वादिगुणत्रयसमन्वितम्।
बद्धचेतनवर्गस्य ज्ञानानन्दविनाशकम्[1]॥
विपरीतज्ञानहेतुः नित्यश्च निखिलेशितुः॥

क्रीडोपकरणं नानाविधचित्रविकारवत्।
प्रकृत्यविद्यामायादिशब्दवाच्यमितीरितम्॥

सत्वशून्यं तु कालः स्यात् त्रिगुणापेतमुच्यते।
प्रकृतेः प्राकृतानां च परिणामस्य कारणम्॥
कलाकाष्ठानिमेषा[2]दिकल्पितानेकविक्रियम्।
नित्यमीशक्रीडनोपकरणं तद्वपुर्मतम्॥
अचितो लक्षणमिदं सङ्ग्रहेण समीरितम्॥

[3]इति श्रीमल्लोकाचार्यविरचिते तत्त्वविवेके
अचिन्निरूपणाधिकारो द्वितीयः॥[3]

---

1. G1 G2 विधायकम्
2. G1 G2 मुहूर्ता
3. G1 इति स्वरूपदर्पणे अचित्स्वरूपनिरूपणाधिकारः॥
G2 इति तत्त्वविवेके अचित्स्वरूपनिरूपणं नाम द्वितीयः अधिकारः॥ हरिः ओम्॥



மிஶ்ரஸத்வமோவென்றால் ஸத்வம், ரஜஸ், தமஸ் என்ற முக்குணங்களையுமுடையது. பத்தசேதநவர்க்கத்துக்கு ஜ்ஞாநாநந்தங்களையழிக்கக் கூடியது, விபரீத ஜ்ஞாநத்துக்கு ஹேதுவாயிருக்குமது, நித்யமானது, யாவருக்கும் நியந்தாவான பகவானுக்கு,

விளையாட்டுக் கருவியாயிருக்குமது, நாநாவிதமான விசித்ரவிகாரங்களை [ஆஶ்சர்யமான மாறுதல்களை] உடையது, ப்ரக்ருதி, அவித்யா, மாயா முதலிய பல பெயர்களையுடையதாகக் கூறப்பட்டிருக்குமது.

ஸத்வஶூந்யம் என்ற அசித்தோவெனில் காலமாகும். அது முக்குணங்களுமற்றது என்று சொல்லப்படுகிறது. ப்ருக்ருதியினுடையவும் ப்ரக்ருதிவிகாரங்களான ப்ராக்ருதங்களினுடையவும் பரிணாமத்துக்கு [மாறுதலுக்கு]க் காரணமாகவுள்ளது.

கலை, காஷ்டை, நிமேஷம் முதலிய கல்பிக்கப்பட்ட [உருவாக்கப்பட்ட] அநேக [அளவுகளை]யுடையது, நித்யவஸ்து, விளையாட்டுக்கருவி, அவனுடைய ஶரீரமாயுள்ளது. அசித்தினுடைய இந்த ப்ரகாரமானது சுருக்கமாக நன்கு உரைக்கப்பட்டது.

**ஸ்ரீமல்லோகாசார்யர் அருளிச் செய்த**
**தத்த்வவிவேகத்தில் அசித்ஸ்வரூபஶோதநாதிகாரம் என்ற**
**இரண்டாம் அதிகாரம் [முற்றியது]**

# ईश्वरस्वरूपशोधनाधिकार:

## तृतीय:

ईश्वरस्तु सकलचेतनाचेतननियन्तृत्वात् परमात्मा श्रिय:पति: अभिधीयते।

"ईश्वरो भगवान्विष्णु: परमात्मा ममार्जुन[1]।
शास्ता चराचरस्येशो[2] यतीनां परमा गति:॥"

(?)

"राजाधिराजस्सर्वेषां विष्णु: ब्रह्ममयो महान्।
ईश्वरं तं विजानीम: स विभु: स प्रजापति:॥"[3]

(भारत.आश्वमेधिक.)

इत्यभिधानात्[4]।

[5]"सर्वं तदिन्द्र ते वशे[5] विश्वस्मात् इन्द्र: उत्तर:"

(?)

इत्यादिषु इन्द्रादीनामपि ईश्वरत्वे कथिते सति[6] कथं श्रिय:पतेरेव ईश्वरत्वं इति शङ्कायां,

"[7]भीषाऽस्माद्वात: पवते। भीषोदेति सूर्य:[7]
भीषाऽस्मादग्निश्चेन्द्रश्च मृत्युर्धावति पञ्चम:"

(तै.आन.-8)

---

1. G2 महज्जन:
2. G1, G2 चराचरस्य एक:
3. G1 adds क्षरात्मानौ ईशते दव एक: इति श्रुते:
4. G2 इत्यादि वचनात्
5. T1 G2 omit सर्वं.........वशे
6. G2 omits सति
7. T1 G1 omit भीषास्मात्.......सूर्य:

# ஈப்வரஸ்வருபஶோதநாதிகாரம்

## [மூன்றாம் அதிகாரம்]

ஈப்வரனோவென்றால் ஸகலசேதநாசேதந நியந்தா வாக இருப்பதால் பரமாத்மாவான ப்ரிய:பதியாவான் என்று சொல்லப்படுகிறான்.

"ஈப்வரனானாவான் பகவான் விஷ்ணு, பரமாத்மா, அர்ஜுனனே! அவன் எனக்கு நியந்தா, சரம் [அசையும் பொருள்] அசரம் [அசையாத பொருள்] என்பவற்றை ஆள்பவன், யதிகளுக்கு [மனத்தையடக்கியவர்களுக்கு] மேலான உபாயம்" [?]

'ராஜாக்களுக்கெல்லாம் மேலான ராஜா ப்ரஹ்ம ஸ்வரூபியான பெரியவனான விஷ்ணு. ஈப்வரன் என்று அவனை நாம் அறிகிறோம். அவன் விபு [எங்கும் வ்யாபித்துள்ளவன்] ப்ரஜைகளுக்கெல்லாம் பேஷியா இருப்பவன். [பாரதம் ஆஸ்வமேதிக.]

என்று ப்ரமாணங்கள் கூறுகின்றன.

'அவையாவும் இந்த்ரனே! உன் வபத்திலிருக்கின்றன. எனவே இந்த்ரன் யாவற்றையும் விடப் பெரியவன்' [?]

இப்படிப்பட்ட ப்ரமாணங்களில் இந்த்ராதிகளுக்குங்கூட ஈப்வரத்வம் கூறப்பட்டிருப்பதால் ப்ரிய:பதிக்கே ஈப்வரத்வம் உள்ளது என்பது எப்படிப் பொருந்தும் என்ற ஸந்தேஹத்துக்கு விடை வருமாறு—

'அந்த பகவான் விஷ்ணுவிடமுள்ள பயத்தால் காற்று வீசுகிறது, அவனிடமுள்ள பயத்தால் ஸூர்யன் உதிக்கிறான், அவனிடமுள்ள பயத்தால் அக்நி கொளுத்துகிறான், இந்த்ரன் மழை பொழிவிக்கிறான், ஐந்தாமவனான ம்ருத்யுதேவன் ப்ராணன்களை எடுக்க ஓடுகிறான்.'

इति श्रुत्यैव आनन्दमयाज्ञानुवर्तनदर्शनात् इन्द्रादीनां तत्र तत्र ईश्वरत्व[1]व्यवहारस्य स्तुतिपरत्वात् न तेषां ईश्वरत्वम्। [2]ब्रह्मादीनामपि ईश्वरपराधीनत्वस्य प्रदर्शनार्थं इदम्। तेष्वपि अनीश्वरधर्माणां विनाशोत्पत्त्यादीनां दर्शनात्। तथा संहृतिसमये

"न ब्रह्मा नेशानो नेमे द्यावा पृथिवी
न नक्षत्राणि न सोमो न सूर्यः॥" (महानारा. 5-1)

"पुराथ प्रलये प्राप्ते नष्टे स्थावरजङ्गमे
ब्रह्मादिषु प्रलीनेषु नष्टे लोके चराचरे
भूतसंप्लवे संप्राप्ते प्रलीने प्रकृतारिवलम्
एकः तिष्ठति विश्वात्मा, स तु नारायणः प्रभुः"
(?)

इति।, ब्रह्मादीनां विनाशस्य भगवतः स्थितेश्च श्रुतिस्मृत्युदितत्त्वात्। तथैव अस्य उत्पादकत्वं अन्येषां उत्पाद्यत्वं च,

"अथ पुनरेव नारायणः सः अन्यं कामं मनसा ध्यायीत। तस्य ध्यानान्तःस्थितस्य ललाटात् स्वेदः उदपतत्। ताः इमाः आपः तासु तेजामयं हिरणमयं अण्डं अभवत्। तत्र ब्रह्मा चतुर्मुखो अजायत। अथ पुनरेव नारायणः, सः अन्यं कामं मनसा ध्यायीत। तस्य

1. T1 G2 omit ईश्वरत्व
2. T1 G2 omit ब्रह्मादीनामपि.........अवगन्तव्यं। on the next page.



என்ற ஶ்ருதியினாலேயே ஆநந்தமயனான எம்பெருமானுடைய ஆஜ்ஞையை [கட்டளையை] இந்த்ராதிதேவர்கள் பின்பற்றுகிறார்கள் என்று அறியப்படுவதால் இந்த்ராதிகளைக் குறித்து அங்கங்கேயுள்ள ஈஶ்வரத்வ வ்யவஹாரமானது [ஈஶ்வரன் என்ற வழக்கானது] புகழ்வதற்காக ஏற்பட்டது. எனவே அவர்களுக்கு ஈஶ்வரத்வமில்லை. ப்ரஹ்மாதிகளுக்குங் கூட ஈஶ்வரனுக்குக் கீழ்ப்பட்ட தன்மை உள்ளது என்று காட்டுவதாக இந்த ஶ்ருதி உள்ளது. அவர்களிடமுங் கூட அநீஶ்வர தர்மங்களான அழிவு பிறப்பு முதலியவை காணப்படுவதால். அப்படியே ஸம்ஹ்ருதி ஸமயத்தில் [அழிவுக்காலத்தில்] பகவானைத் தவிர ஒருவரும் மிஞ்சவில்லை என்று ப்ரமாணங்கள் கூறுகின்றன. அவை வருமாறு —

"ப்ரளய காலத்தில் ப்ரஹ்மா இலன், ஈஶானன் என்ற பெயருடைய ருத்ரன் இலன், ஸ்வர்லோகமும் ப்ருதிவியும் இல்லாமற் போகின்றன, நக்ஷத்ரங்கள் இருக்கவில்லை, சந்த்ரன் இலன், ஸூர்யன் இலன்" [மஹா நாராயண.]

"முன்பு ப்ரளயம் ப்ராப்தமானபோது ஸ்தாவர ஜங்கமங்கள் நஷ்டமாயின. ப்ரஹ்மாதிகள் அழிந்தார்கள். சராசரமான உலகம் நாஶமாயிற்று. உண்டான பொருட்கள் யாவும் அழியும்படி மஹாபூதங்களுக்குங்கூட அழிவு ஏற்பட்ட காலத்தில் விஶ்வாத்மாவான ஒருவன் மட்டும் அழியாமல் நிற்கிறான், அவனோவென்றால் நாராயணனான ப்ரபு" [?]

இப்படி ப்ரஹ்மாதிகளின் அழிவையும் பகவானுடைய ஸ்தியையும் [ஸத்பாவத்தையும்] ஶ்ருதிஸ்ம்ருதிகள் கூறுகின்றன. அவ்வாறே பகவானுக்கு படைக்கும் தன்மையும் மற்ற தேவர்களுக்கு உண்டாக்கப்படும் தன்மையும் உள்ளன என்பதையும் ப்ரமாணங்கள் கூறுகின்றன. அவை வருமாறு —

"பிறகு மீண்டும் அந்த நாராயணன் இன்னொரு விருப்பத்தை மனத்தால் ஸங்கல்பித்தான். ஸங்கல்பத்தின் முடிவில் அவனுடைய நெற்றியிலிருந்து வியர்வை வழிந்தது. அதுவே இந்த ஜலதத்த்வமாயிற்று. அந்த ஜலத்தில் ஒளியையுடைய தங்கமயமான அண்டம் உண்டாயிற்று. அதில் சதுர்முகனான ப்ரஹ்மா உண்டானான். பிறகு மீண்டும் நாராயணனான பகவான் இன்னொரு விருப்பத்தை மனத்தால் கருதினான். அந்த ஸங்கல்பத்தின் முடிவில்

ध्यानान्तः स्थितस्य तस्य ललाटात् त्र्यक्षः शूलपाणिः पुरुषः अजायत। विसत्(?) श्रियं ब्रह्मचर्यं तपांसि वैराग्यं चेति। रात्रिक्षये पुनः प्राप्ते तस्य हि अमिततेजसः प्रसादात् प्रादुरभवत् पद्मं, पद्मनिभेक्षणः तत्र ब्रह्मा समभवत्। तत्र एवं संप्रसादजः रात्रिक्षये ललाटात् ततो देवस्य वै द्विज क्रोधाविष्टस्य संजज्ञे रुद्रः संहारकारकः॥" (महानारा. 3)

इत्यादिभिः अवगन्तव्यम्।[2] तस्मात् श्रियःपतिरेव ईश्वरः इति अवगम्यते।तस्य निखिलहेयप्रत्यनीकत्वं, अनन्तत्वं, ज्ञानानन्दैकस्वरूपत्वं, ज्ञानशक्त्यादिकल्याण-गुणगणभूषितत्वं निखिलजगत्सृष्टिस्थितिसंहृतिकर्तृत्वं, सकलाधिकारिसमाश्रयणीयत्वं, समस्तपुरुषार्थप्रदत्वं श्रीभूमिनीलानायकत्वं च अनुसन्धातव्यम्।

अखिलहेयप्रत्यनीकत्वं नाम तिमिरपटलस्य तरणिकिरणसन्दोहवत् आशीविषनिकरस्य वैनतेयवत् सकलचेतनाचेतनगत अविद्यादुःखविकार-पारतन्त्र्यादि दोषाणां प्रातिभट्येन अवस्थानम्।

[3]"अपहतपाप्मा दिव्यो देव एको नारायणः"[3] (सुबालोप. 7)

---

2. T1 G2 omit upto this portion.
3. T1 G2 omit अपहत......नारायणः



அவனுடைய நெற்றியிலிருந்து முக்கண்ணனாய் ஶூலபாணியாயுள்ள புருஷனான ருத்ரன் உண்டானான். அவன் செல்வம், ப்ரஹ்மசர்யம், தபஸ்ஸுக்கள், வைராக்யம் என்பவற்றையடைந்தான். ப்ரளயமாகிற ராத்ரி கழிந்து மீண்டும் பகல் வந்தபோது அந்த எல்லையற்ற தேஜஸ்ஸையுடைய பகவானுடைய அருளால் தாமரை உண்டாயிற்று. அதில் தாமரை போன்ற கண்ணை உடையவனான ப்ரஹ்மா உண்டானான். பிறகு கோபத்தை அடைந்தவனான பகவானின் நெற்றியிலிருந்து ஸம்ஹார காரகனான ருத்ரன் உண்டானான்." [மஹாநாரா.]

இப்படி [ஶ்ரிய:பதியின் காரணபாவத்தால் வந்த உயர்த்தியையும் மற்ற தேவர்களின் கார்யபாவத்தால் வந்த தாழ்ச்சியையும்] ப்ரமாணங்கள் கூறுகின்றன. எனவே ஶ்ரிய:பதிதான் ஈஶ்வரன் என்று அறியப்படுகிறான். அவனுக்கு நிகிலஹேயப்ரத்யநீகத்வம் [எல்லாத் தாழ்ச்சிகளுக்கும் எதிர்த்தட்டாயிருக்கும் தன்மை], அநந்தத்வம் [அளவிடமுடியாத தன்மை], ஜ்ஞாநாநந்தைக ஸ்வரூபத்வம், [ஞானம் ஆனந்தம் இவையே வடிவெடுத்த தன்மை] ஜ்ஞாநஶக்த்யாதி கல்யாண குணகணபூஷிதத்வம் [ஞானம், ஶக்தி முதலிய கல்யாணகுணக் கூட்டங்களால் அலங்கரிக்கப்பட்டுள்ள தன்மை], நிகிலஜகத்ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹ்ருதி கர்த்ருத்வம் [அனைத்துலகங்களையும் படைத்துக் காத்து அழிக்கும் தன்மை], ஸகலாதிகாரி ஸமாஶ்ரயணீயத்வம் [எல்லோராலும் நன்கு கிட்டப்படும் தன்மை] ஸமஸ்தபுருஷார்த்தப்ரதத்வம் [எல்லாப் பலன்களையும் கொடுக்கும் தன்மை], ஸ்ரீ – பூமி – நீளா நாயகத்வம் [ஸ்ரீதேவி, பூதேவி, நீளாதேவி ஆகியோருக்கு நாயகனாக இருக்கும் தன்மை] என்கிற குணங்கள் யாவும் இருக்கின்றன என்று நம்மால் அனுஸந்திக்கப்பட வேணும்.

அகிலஹேயப்ரத்யநீகத்வம் என்றால் – இருளின் கூட்டத்தை ஸூர்யகிரணங்களின் குவியலானது நீக்குவது போலவும், பற்களில் விஷமுடைய பாம்புகளின் கூட்டத்தை கருடன் விரட்டியடிப்பது போலவும் ஸகல சேதநாசேதநங்களிடமுள்ள அவித்யை – துக்கம் – விகாரம் – பாரதந்த்ர்யம் என்ற தோஷங்களைப் போக்கடிப்பவனாக விருத்தலாகும்.

'பாபஸம்பந்தம் அற்றவன் அப்ராக்ருதனான தேவன் ஒப்பற்றவனான நாராயணன்' [ஸுபாலோப.7]

"सकला न यत्र क्लेशादयः सन्ति परावरेशे",

(वि.पु. 1-12)

[1]"क्लेशकर्मविपाकाद्यैः वासनाभिः तथैव च।
अपरामृष्ट एवेह ईश्वरः परमः स्मृतः।" (?)
एवम्प्रकारममलं नित्यं व्यापकमक्षयम्।
समस्तहेयरहितं विष्णवाख्यं परमं पदम्"[1]

(वि.पु. 1-22-53)

"अपहतपाप्मा" (छान्दो. 8-1-5)

इत्यादिभिः तथात्वावगमात्। अनन्तत्वं तु देशकालवस्तु-परिच्छेदराहित्यम्। विभुत्वात् देशपरिच्छेदराहित्यम्। नित्यत्वात् कालपरिच्छेदराहित्यम्[2]। समस्तवस्तु सामानाधिकरण्यार्हत्वात्[3] वस्तुपरिच्छेदराहित्यम्[4]।

"नित्यं विभुं सर्वगतं सुसूक्ष्मं [5]तदव्ययं यत् भूतयोनिं परिपश्यन्ति धीराः[5]", (मुण्डकोप. 1-1-6)

"अन्तर्बहिश्च [6]तत्सर्वं" (तै.नारा. - 11)

"पूः प्राणिनः सर्वगुहाशयस्य"[6],

(आपस्तम्बधर्मसूत्रे 1-22-3)

"तानि सर्वाणि तद्वपुः" (वि.पु. 1-22-86)

इत्यादिभिः अवगतम्[7]। [8]तस्मात्,

---

1. T1 G2 omit क्लेश.....परमं पदम्
2. T1 अभावः
3. G1 समानाधिकरण्यत्वात्
4. T1 विधुरम्
5. T1 G2 omit तदव्ययं.....धीराः
6. T1 G2 omit तत्सर्वं....शयस्य
7. G1 अवगन्तव्यं
8. T1 omits तस्मात्.....आत्मैवेदं सर्वं



'உயர்ந்தவர்களுக்கும் தாழ்ந்தவர்களுக்கும் ஈஶனான எந்த பகவானிடம் துன்பம் முதலியவை ஒன்றும் இல்லையோ' [வி.பு. 1–12]

'க்லேஶம், கர்மம், விபாகம், [ஸுகதுக்கபோகம்] முதலியவற்றாலும் வாஸனைகளாலும் தொடப்படாதவனே இங்கே பரமனான ஈஶ்வரன் என்று கருதப்படுகிறான்' [?]

'இந்த ப்ரகாரத்திலுள்ளது குற்றமற்றது, நித்யமானது, வ்யாபகமானது, விகாரமற்றது, எந்தத் தாழ்ச்சியுமற்றது, விஷ்ணு என்ற பெயருடைய மேலான ப்ராப்யஸ்தானம்'

[வி.பு. 1–22–53]

'பாப ஸம்பந்தமற்றவன்' [சாந்தோ. 8–1–5]

என்று பாபஸம்பந்தம் அற்றவனாகப் ப்ரமாணங்கள் கூறுகின்றன. அநந்தத்வமோவென்றால் தேஶம், காலம், வஸ்து என்பவற்றால் அளவிடப்பட முடியாத தன்மை. விபுவாக [எங்கும் பரந்துள்ளவனாக] இருப்பதால் தேஶத்தால் அளவிடமுடியாமை அவனுக்குள்ளது. [அதாவது ஒரு தேஶத்தில் இருக்கிறான் இன்னொரு தேஶத்தில் இலன் என்கிற அளவுடைமை அவனுக்கில்லை, எல்லா தேஶங்களிலும் நிறைந்திருக்கிறான்.] நித்யனாக இருக்கிறபடியால் ஒரு காலத்தில் இருக்கிறான் இன்னொரு காலத்தில் இல்லை என்ற நிலை அவனுக்கில்லை, எல்லாக் காலத்திலும் இருக்கிறான். எல்லா வஸ்துக்களுடனும் ஒரு பொருளாக [எல்லாப் பொருள்களுக்கும் அந்தர்யாமியாக] அவன் இருப்பதால் அவன் இந்தப்பொருளாக இருக்கிறான், இந்தப்பொருளாக இல்லை என்ற தன்மை அவனுக்கு இல்லை, எல்லா வஸ்துவாகவும் இருக்கிறான். அதாவது ஈஸ்வரனாகவும் இருக்கிறான், சித்தாகவும் இருக்கிறான் அசித்தாகவும் இருக்கிறான்.

'நித்யனாய் விபுவாய் எங்கும் புகுகிறவனாய் அதற்கீடாக மிகவும் ஸூக்ஷ்மமானவனாய், தான் வியாபித்திருக்கிற பொருள்களின் தோஷம் தன்னிடம் தட்டாதபடி விகாரமற்றவனாய், பூதங்களுக்குக் காரணனாயுள்ளவனை ஸாக்ஷாத்கரிக்கிறார்கள் ஜ்ஞாநிகள்' [முண்டக. 1–1–6]

'அவை யாவற்றையும் உள்ளும் புறமும் வ்யாபிக்கிறான் நாராயணன்' [தை.நா. 11]

'ஸர்வருடைய ஹ்ருதயகுஹையிலும் வஸிப்பவனான பகவானுக்கு ப்ராணிகள் யாவும் பட்டணங்கள் [= ஶரீரங்கள்]' [ஆபஸ்தம்பதர்மஸூத்ரம் 1–22–3]

'அவை யாவும் அவனுடைய ஶரீரம்' [வி.பு. 1–22–86]

இப்படி ப்ரமாணங்கள் கூறுகின்றன. எனவே,

"सर्वं खल्विदं ब्रह्म", (छा. 3-14-1)

"ब्रह्मैवेदं सर्वं", (बृहदारण्यक. 4-5-1)

"आत्मैवेदं सर्वं" (छा. 7-25-2)

"पुरुष एवेदं सर्वम्" (पुरुषसूक्तम् - 2)

इत्यादिषु प्रपञ्चतादात्म्योपदेशः सर्वशरीरत्वनिबन्धनः। तथा व्यपदेशो 'देवोऽयं, मनुष्योऽयं' इति लोकेऽपि दृश्यते[1]। अन्तर्यामित्वेऽपि, जीवात्मनः शरीरगतबाल्यादि-विकारास्पर्शवत्, परमात्मनः सर्वचेतनाचेतनगत[2]-दोषास्पर्शोऽपि उपपन्नः।

[3]अथ ज्ञानानन्दस्वरूपत्वं नाम आनन्दरूपज्ञानत्वम्। अनन्याधीनप्रकाशत्वात् आह्लादकत्वमेव यस्य स्वरूपं सः[3] ज्ञानानन्दैकस्वरूपः।

"विज्ञानं ब्रह्म", (तै.आन. - 5)

[4]"सर्वकाम सर्वज्ञत्व समन्वितं स्वतन्त्रं चैतन्यं। स्वेमहिम्नि प्रतिष्ठमानं पश्येत्", (?)

"रसो वै सः"[4], (तै.आन. 7-1)

"आनन्दो ब्रह्म", (तै.आन. 6-1)

"आनन्दमयः" (तै.आन. 2 - 5.1)

---

1. T1 लोके सन्दृश्यते
   G2 लोके च दृश्यते
2. G2 omits गत
3. G1, G2 omit अथ...... स्वरूपं सः
4. T1 G2 omit सर्वकाम......वै सः



'இவையாவும் ப்ரம்மமன்றோ' [சாந். 3–14–1]

'இவையாவும் ப்ரஹ்மமே' [ப்ருஹ. 4–5–1]

'இவை யாவும் ஆத்மாவே' [சாந். 7–25 –2]

'இவை யாவும் புருஷனே' [புருஷ ஸூக்தம் –2]

முதலிய வாக்யங்களில் உலகையே ப்ரஹ்மமாகச் சொல்லியிருப்பதற்கு, எல்லாவற்றையும் ப்ரஹ்மம் தனக்குச் சரீரமாகக் கொண்டிருப்பதே காரணமாகும். அப்படிப்பட்ட வழக்கு உலகத்திலும் காணப்படுகிறது. 'இவன் தேவன்', மநுஷ்யன்' என்று வழக்கு உள்ளது. உள்ளது. [தேவன், மநுஷ்யன் என்பவை உடல்கள். 'இவன்' என்பவன் ஆத்மா. உடலுக்கும் ஆத்மாவுக்கும் வேறுபாடு இருந்தாலும் கூட விட்டுப் பிரியாமல் அவை சேர்ந்திருப்பதால் தேவ உடலைக் கொண்டவனையே தேவன் என்று கூறும் வழக்கு உலகில் காணப்படுகிறது.அவ்வாறே பரமாத்மா ப்ரபஞ்சத்துக்கு ஆத்மாவாக விருப்பதால் வேதத்தில் 'ப்ரபஞ்சமே பரமாத்மா' என்ற ஐக்யோபதேஶம் வருகிறது.] ஜீவாத்மாவானவன் ஶரீரத்துக்கு அந்தர்யாமியாக விருந்தாலுங்கூட உடலில் ஏற்படும் குழந்தைப் பருவம், யௌவனப் பருவம் முதலிய விகாரங்கள் ஆத்மாவிற்கு வருவதில்லை. அவ்வாறே பரமாத்மாவானவன் ஸர்வசேதநாசேதநங்களுக்கும் அந்தர்யாமியாக விருந்தாலுங்கூட அவர்களிடமும் அவைகளிடமும் உள்ள தோஷம் தன்னிடம் தட்டாதவனாக இருக்கிறான் என்ற இவ்வர்த்தம் பொருந்துகிறது.

இனி, ஜ்ஞாநாநந்த ஸ்வரூபத்வமாவது ஆநந்தரூப ஜ்ஞாநத்வமாகும். இன்னொரு ஜ்ஞாநத்தின் உதவியின்றித் தானே ப்ரகாஶிக்கும் தன்மையுடையதாக இருப்பதால் அநுகூலமாயிருக்கும் தன்மையே எதற்கு ஸ்வரூபமோ அது ஜ்ஞாநாநந்தைக ஸ்வரூபமாகும்.

'விஜ்ஞாநம் ப்ரஹ்மமாகும்' [தை. ஆந. 5]

'எல்லா போகங்களையும் உடையதாய் ஸர்வஜ்ஞத்வத் துடன் கூடியதாய் ஸ்வதந்த்ரமானதாய் தன் மஹிமையில் நிலைநிற்பதாயுள்ளதை [ப்ரஹ்மத்தை]ப் பார்'[?]

'ஆநந்தமே வடிவெடுத்தவன் அவன்' [தை. ஆந. 7–1]

'ஆநந்தரூபமானது ப்ரஹ்மம்' [தை. ஆந. 6–1]

'ஆநந்தமயன்' [தை. ஆந. 2–5–1]

इति श्रवणात्। अस्य ज्ञानशक्त्यादयो गुणाः नित्याः निरुपाधिकाश्च।

"त इमे सत्याः कामाः", (छा. 8-3-1)

"स्वाभाविकी ज्ञानबलक्रिया च", (श्वेता. 6-8)

इति वचनात्। निस्सीमाश्च।

"यतो वाचो निवर्तन्ते अप्राप्य मनसा सह" (तै.आन. 9-1)

इति आनन्दगुणस्य अपरिच्छेददर्शनात् अन्येषामपि तथात्वं उपपन्नम्। निस्सङ्ख्याश्च।

"यथा रत्नानि जलधेः असङ्ख्येयानि पुत्रक।
तथा गुणा ह्यनन्तस्याप्यसङ्ख्येया महात्मनः॥", (वामनपु. 71-40)

"चतुर्मुखायुर्यदि कोटिवक्त्रो
भवेन्नरः क्वापि विशुद्धचेताः।
स ते गुणानां अयुतैकमंशं
वदेन्न वा देववर प्रसीद॥", (वराहपु. 73.35)

"न हि तस्य गुणास्सर्वे सर्वैर्मुनिगणैरपि।
वक्तुं शक्या वियुक्तस्य सत्वाद्यैरखिलैर्गुणैः॥" (विष्णुधर्म 66.16)

इत्याद्यभिधानात्।



என்று ஓதப்பட்டுள்ளது. பகவானுடைய ஜ்ஞாநஶக்த்யாதி களான குணங்கள் நித்யங்களாயும் நிருபாதிகங்களாயும் [இயற்கையானவைகளாயும்] உள்ளன.

'அந்த இவை உண்மையான குணங்கள்' [சா. 8–3–1]

'ஜ்ஞாநபலங்களுடன் கூடின க்ரியை இயற்கையான தாகும் [ஸ்வே. 6–8]

என்று வசனங்கள் உள்ளன. இந்த குணங்கள் அளவற்றவை களாயுமுள்ளன.

'எந்த குணத்தை அளக்கப் புக்கு மனத்துடன் சேர்ந்து வாக்குகள் திரும்புகின்றனவோ' [தை. ஆ. 9–1]

என்று ஆநந்தகுணத்துக்கு அளவின்மை காணப்படுவதால் மற்றவைகளுக்கும் அந்த அளவின்மை பொருந்தும். பகவானுடைய குணங்கள் எண்ணிலடங்காதவைகளாயும் உள்ளன.

'கடலிலுள்ள ரத்நங்கள் எப்படி எண்ணிலடங்காதவை களாகவுள்ளனவோ குமாரனே! அப்படியே அநந்தனான மஹாத்மாவினுடைய குணங்கள் எண்ணிலடங்காதவை களாகவுள்ளன' [வாமநபுராணம் 71–40]

'நான்முகனுடைய ஆயுளும், கோடி வாய்களும் விஶுத்தமான மனஸ்ஸும் உடைய நரன் எவனாகிலும் ஒருவனிருந்தால் அவன் உன்னுடைய குணங்களின் பத்தாயிரத்தில் ஓரம்ஶத்தைச் சொல்லுவானோ மாட்டானோ? தேவஶ்ரேஷ்டனே அருள வேணும்.

[வராஹ புராணம் 73–35]

'ஸத்வாதிகுணங்களற்றவனான அவனுடைய குணங்கள் யாவும் முனிகணங்கள் எல்லாவற்றாலுங்கூடச் சொல்லப்பட முடியாதவை?'

இத்யாதிகளான ப்ரமாணங்கள் இக் கருத்தைத் தெரிவிக்கின்றன.

निर्दोषाश्च।

"सत्वादयो न सन्तीशे यत्र च प्राकृता गुणाः",
(वि.पु. 1-9-44)

"विना हेयैः गुणादिभिः" (वि.पु. 6-5-79)

[1]सकला न यत्र क्लेशादयः सन्ति परावरेशे[1]"
(वि.पु. 6-5-85)

इत्युक्तेः[2]। तस्मात् निर्गुणश्रुतीनामपि हेयगुणनिषेध-परत्वमेव अर्थः।

"न तत्समश्चाभ्यधिकश्च दृश्यते" (श्वेता. 6-8)

इत्युक्तसमानाधिकरहितसर्वेश्वराश्रयत्वात् तेषामपि समाधिकराहित्यमुक्तम्। एवमुक्तमभियुक्तैः –

"दोषोपधावधिसमातिशयानसङ्ख्या
निर्लेपमङ्गलगुणौघदुघाः षडेताः।
ज्ञानैश्वरी शकन[3]वीर्यबलार्चिषः त्वां
रङ्गेश भास इव रत्नमनर्घयन्ति॥" इति।
(श्रीरङ्ग. उत्तर. 27)

एतेषु गुणेषु वात्सल्यादीनां विषयाः आश्रिताः[4]। शौर्यादीनां तु[5] आश्रितविरोधिनः। एतत्कारणभूत ज्ञानशक्त्यादि षाड्गुण्यस्य विषयाः सर्वे।

1. T1 G2 omit सकला... परावरेशे
2. G1 इत्युक्तं
3. T1 शक्त
4. T1 समाश्रिताः
5. G2 च



பகவானுடைய குணங்கள் தோஷங்கள் அற்றவை.

'ஸத்வாதிகளான ப்ராக்ருத குணங்கள் ஈஶனிடத்தில் இல்லை.' [வி.பு.1–9–44]

'தாழ்ச்சிகளற்ற குணங்களுடன் கூடியது பகவத் தத்த்வம்' [வி.பு.6–5–79]

'துன்பம் முதலிவைகளான யாவும் பராவரேஶனிடத்தில் [பரர்களையும் அவரர்களாக்கும் ஈஶனிடத்தில்] இல்லை' [வி.பு. 6–5–85]

என்று சொல்லப்பட்டிருக்கிறது. எனவே பகவானுக்கு குணங்கள் இல்லை என்று கூறும் நிர்குணஶ்ருதிகளுக்கும் கூட தாழ்ந்த குணங்கள் இல்லை என்று கூறுவதே கருத்தாகும்.

'அவனுக்கு இணையானவனாகவோ மேம்பட்டவனாகவோ யாரும் காணப்படவில்லை' [ஶ்வேதா. 6–8]

என்று சொல்லப்பட்ட ஒப்பார் மிக்கார் இல்லாத ஸர்வேஶ்வரனைப் பற்றிக் கிடப்பதால் அந்த குணங்களுக்கும் இணையும் மேன்மையும் இல்லாமை சொல்லப்பட்டுள்ளது. அபியுக்தரால் [= ஜ்ஞாநியால்; பராஶரபட்டரால்] கூறப்பட்டுள்ள அர்த்தம் வருமாறு:

'ஸ்ரீரங்கநாதரே! குற்றம், உபாதி [காரணம்], எல்லை, ஸமமான வஸ்து, மேற்பட்ட வஸ்து, எண்ணிக்கை ஆகிய இவற்றின் ஸம்பந்தமில்லாத கல்யாணகுணங்களின் கூட்டத்தைச் சுரக்கின்ற இந்த ஜ்ஞாநம், ஐஶ்வர்யம், ஶக்தி, வீர்யம், பலம், ஆகியவை ரத்தினத்தை ஒளிகள் பெருமைப் படுத்துவது போல தேவரீரைப் பெருமைப் படுத்துகின்றன.' [ஸ்ரீரங்கராஜஸ்தவம் உத்தர. 27]

இந்த குணங்களில் வாத்ஸல்யாதிகளுக்கு விஷயம் அடியவர்கள்; ஶௌர்யாதிகளுக்கோ என்றால் அடியவர்களின் விரோதிகள். இவற்றுக்குக் காரணபூதங்களான ஜ்ஞாநம், ஶக்தி, பலம், ஐஶ்வர்யம், வீர்யம் தேஜஸ் ஆகிய ஆறு குணங்களுக்கு யாவரும் இலக்குகள்.

तत्र ज्ञानं नाम,

[1]"अजडं स्वात्मसम्बोधि नित्यं सर्वावगाहनम्।
ज्ञानं नाम गुणं प्राहुः प्रथमं गुणचिन्तकाः॥"

(अहिबुध्न्यसंहिता)

इति[1] सर्वदा सर्वविषय प्रकाशकः स्वप्रकाशकश्च गुणविशेषः। शक्तिर्नाम,

[2]"जगत्प्रकृतिभावो यः सा शक्तिः परिकीर्तिता"

(अहिबुध्न्यसंहिता)

इति[2] जगदुपादानभावो वा अघटितघटनासामर्थ्यं वा। बलं नाम,

[3]"श्रमहानिस्तु या तस्य सततं कुर्वतो जगत्।
बलं नाम गुणस्तस्य कथितः गुणवेदिभिः"

(अहिबुध्न्यसंहिता)

इति[3] जगत्कारणत्वप्रयुक्तश्रमराहित्यं वा बलं धारणादिसामर्थ्यमिति समस्तवस्तु धारणसामर्थ्यं वा। ऐश्वर्यं नाम,

[4]"कर्तृत्वं नाम यत् तस्य स्वातन्त्र्यपरिबृंहितम् ।
ऐश्वर्यं नाम तत्प्रोक्तं गुणः तत्त्वार्थचिन्तकैः॥"

(अहिबुध्न्यसंहिता)

इति[4] कर्तृत्वलक्षणं स्वातन्त्र्यं वा,

---

1. T1 G2 omit
   अजडं.....चिन्तकाः इति
2. T1 G2 omit
   जगत्प्रकृति..... परिकीर्तिता इति
3. G1 only reads
   श्रमहानिस्तु.........गुणवेदिभिः इति
4. T1 G2 omit
   धर्मस्य.......तत्वार्थचिन्तकैः



பகவானுடைய குணங்களில் ஜ்ஞாநமாவது,

'தானே ப்ரகாஶிப்பதாய், தன்னுடைய ஆஶ்ரயத்துக்கு ப்ரகாஶிப்பதாய், நித்யமானதாய், எல்லாவற்றையும் க்ரஹிப்பதாய் உள்ள குணம் ஜ்ஞாநம், அது முதலாவதான குணம் என்று குணசிந்தகர்கள் கூறுகிறார்கள்'

[அஹிர்புத்ந்யஸம்ஹிதா]

என்று சொல்லப்பட்டபடி எப்பொழுதும் ஸர்வவிஷய ப்ரகாஶகமாய், ஸ்வப்ரகாஶகமாய் [தன்னைத் தானே ப்ரகாஶப்படுத்துமதாய்] உள்ள குணவிஶேஷமாகும். ஶக்தி என்பது,

"ஜகத்துக்குக் காரணமாயிருக்கும் தன்மையே ஶக்தி என்று சொல்லப்படுகிறது" [அஹிர்புத்ந்யஸம்ஹிதா]

என்று சொல்லப்பட்டபடி உலகிற்குக் காரணமாக இருக்கும் தன்மை அல்லது செயற்கரியசெய்தல் ஶக்தி எனப்படும். பலம் என்பது,

'எப்பொழுதும் உலகை உண்டாக்குபவனுடைய ஶ்ரமமின்மையானது பலம் என்கிற குணம் என்று குணங்களை அறிந்தவர்களால் கூறப்பட்டுள்ளது.'

என்கிற வசனத்தின்படி உலகை உண்டாக்கும்போது அதனால் சிரமம் சிறிதும் ஏற்படாத தன்மையோ அல்லது எல்லா வஸ்துக்களையும் தரிக்கும் ஸாமர்த்தியமோ பலம் ஆகும். ஐஶ்வர்யமாவது,

'ஸ்வாதந்த்ர்யத்துடன் கூடிய கர்த்ருத்வமே ஐஶ்வர்யம் ஆகும் என்று தத்வார்த்தத்தைச் சிந்திப்பவர்களால் கூறப்பட்டுள்ளது' [அஹிர்புத்ந்ய ஸம்ஹிதை]

என்று கூறப்பட்டுள்ளபடி அவனுடைய செயல்களைச் செய்வதில் அவனுக்கு உள்ள சுதந்திரத் தன்மையோ அல்லது

[1]समस्त वस्तु नियमन सामर्थ्यं वा[1]। वीर्यं नाम –

[2]"तस्योपादानभावेपि विकारविरहो हि यः।
वीर्यं नाम गुणः सोऽयं अच्युतत्वापराह्वयः"
(अहिर्बुध्न्यसंहिता)

इति[2] जगदुपादानत्वे सति (अपि) [3]स्वरूपविकारराहित्यम्[3]। तेजो नाम –

"सहकार्यनपेक्षा या तत्तेजः समुदाहृतम्"
(अहिर्बुध्न्यसंहिता)

इति सहकारिनैरपेक्ष्यं वा, पराभिभवनसामर्थ्यं वा इति तत्त्ववेदिनो निरणैषुः।

हिताहितविवेकविधुराणां अज्ञानां कृते, तस्य ज्ञानं; स्वोचितपुरुषार्थप्राप्त्यशक्तानां तत्पुरुषार्थप्रापणाय [4]अस्य शक्तिः[4]। क्षमा तु अनादिकालेन निरन्तरविविध विततापराध दूषितानामपि आभिमुख्यसङ्कल्पमात्रेण अपराधक्षान्तये। कृपा स्वार्थनिरपेक्षा परदुःख-निराचिकीर्षा। वात्सल्यं तु समाश्रितदोषान् भोग्यतया स्वीकृत्य स्वगुणैः तदुज्जीवनपरत्वम्। [5]शीलं नाम महतो मन्दैस्सह नीरन्ध्रेण संश्लेष स्वभावत्वम्।[5] सौशील्यं तु [6]उत्कृष्टस्य, अपकृष्टैः[6] नियोज्यत्वम्। आर्जवं तु[7]

1. T1 omits समस्त.......वा
2. T1 G2 omit तस्य.........अपराह्वयः इति
3. T1 राहित्यरूपं अविकारत्वं
4. G1, G2 शक्तिः अस्य
5. G1 omits शीलं....स्वभावत्वम्
6. T1 उत्कृष्ट
7. T1 G2 omit तु



எல்லா வஸ்துக்களையும் நியமிக்கும் ஸாமர்த்யமோ ஐஶ்வர்யம் ஆகும். வீர்யமாவது,

'அந்த ப்ரஹ்மத்துக்கு உபாதாநபாவம் இருந்தாலும்கூட விகாரமின்மை உள்ளது. அதுவே வீர்யம் என்கிற குணமாகும். அச்யுதத்வம் என்ற இன்னொரு பெயருடையது அது.' [அஹிர்ப்புத்ந்ய ஸம்ஹிதை]

என்று கூறப்பட்டுள்ளபடி உலகத்துக்கு உபாதாநகாரணமாக உள்ளதன்மையோடு, ஸ்வரூபவிகாரமின்மை வீர்யம் எனப்படும். தேஜஸ்ஸாவது –

'ஸஹகார்யநபேக்ஷத்வம் தேஜஸ் என்று உதாஹரிக்கப் பட்டுள்ளது' [அஹிர்புத்ந்யஸம்ஹிதை]

என்று கூறப்பட்டுள்ளபடி, ஸஹகாரிகளை எதிர்பாராதிருத்தலோ, அல்லது பராபிபவந ஸாமர்த்யமோ [எதிரிகளையடக்கும் ஸாமர்த்யமோ] என்று தத்த்வத்தை அறிந்தவர்கள் நிர்ணயித்தார்கள்.

நன்மை தீமை இவைகளைக் குறித்த விவேகமற்றவர்களான அறிவிலிகளைக் குறித்து அவனுடைய ஜ்ஞாநம் பயன்படுகிறது. தங்களுக்கு உசிதமான புருஷார்த்தத்தையடைவதற்கு ஶக்தியற்றவர்களை அந்தப் புருஷார்த்தத்தையடைவிப்பதற்கு அவனுடைய ஶக்தி உபயோகப்படுகிறது. க்ஷமையோவென்றால் அநாதிகாலம் நிரந்தரமாகப் பலவிதமாக வ்யாபித்துள்ள அபராதங்களால் தூஷிக்கப்பட்டவர்களுக்கு [கெடுக்கப்பட்டவர்களுக்கு], அவர்களுடைய, பகவானை நோக்கித் திரும்ப வேணும் என்ற நினைவினால் மட்டுமே அவர்களுடைய அபராதங்களைப் பொறுப்பதற்குப் பயன்படுகிறது. க்ருபையாவது தனக்கொரு பயனைக் கருதாமல் பிறருடைய துக்கத்தைப் போக்கவேணும் என்கிற இச்சை. வாத்ஸல்யமோவென்றால் அடியார்களின் தோஷங்களை போக்யமாக ஸ்வீகரித்துத் தன்னுடைய குணங்களால் அவர்களை உய்விக்கும் தன்மை. ஶீலம் என்றால் அறப்பெரியவன் மிகத் தாழ்ந்தவர்களுடன் ஜலம் ஜலத்துடன் கலப்பது போல் தன்னுடைய பெருமை தோற்றாதபடி கலக்கும் தன்மை. ஸௌஶீல்யமோவென்றால் உயர்ந்தவனான தான் நியமிக்கப்படும் தன்மை. ஆர்ஜவமோவென்றால்

कुटिलेष्वपि आश्रितेषु करणत्रयेणापि[1] एकरूपेण अवस्थानम्। सौहार्दं नाम सदा[2] समाश्रितविषय-हितरूपवृत्तिः। आश्रित[3]विरहा[3]सहिष्णुत्वं हि मार्दवम्। सौलभ्यं मांसचक्षुषामपि [4]विषयतया स्वविग्रह-प्रकाशकत्वम्। अस्य स्फूर्तिः अर्चावतार एव। [5]अन्येऽपि एवं आश्रितविषया गुणाः अनुसन्धेयाः[5]। एवंविधकल्याणगुणाकरत्वात् अत्मवर्गतापत्रयदुःखा--वलोकनेन दयमानमनाः सर्वदा तदुज्जीवनविचारणैक-विवशः [6]चन्दनचन्द्रिकामन्दानिल[6]सलिलादिवत् स्वप्रयोजनानपेक्षपरप्रयोजनैकपरिचयःसमाश्रयणा--धिकारिणाम् स्व(परिकरनान)ार्पित स्वरक्षणभराणां जननचरितज्ञानाद्यनिरूपणेन निजभुजार्पिततदुज्जीवनभरः, सान्दीपनिमृतसुत-निजपदगतद्विजतनयानयनप्रमुख-बहुविधदुष्करक्रियाकलापैः[7] परिपूरिततत्तदपेक्षितवितितिः, ध्रुवपदादिवत् अभूतपूर्वपदप्रदायकः [8]स्वस्यधन[8]निर्विशेषं[9] आत्मात्मीयजातं आश्रितसात्कुर्वन्, प्रणतप्रयोजननिष्पादनेन आत्मानं कृतकृत्यं मन्वानः, [10]कृतमहापकृतिविस्मृतिपूर्वकं संस्मृत[11] तत्कृतसुकृतलेशः, निरस्तमूलकालनिरन्तर-

1. T1 G1 करण्त्रयस्य
2. G2 सर्वदा
3. G1 विश्लेष
4. G1 G2 adds चक्षुः
5. G1 एवं अस्य गुणान्तराण्यपि अनुसन्धाय
6. G1 चन्द्रिका चन्दन मलयानिलवत्
7. G1 कलाप
8. T1 स्वस्वदनि G2 स्वादीन
9. G1 अशेषं
10. G1, G2 add स्व
11. G1 संसृत



நேர்மையற்றவர்களான அடியார்களிடத்திலும் கூட மனம் மொழி மெய் ஆகிய முக்கரணங்களாலும் ஒருவிதமாகவே இருத்தல். ஸௌஹார்தம் என்றால் அடியவர்கள் விஷயத்தில் எப்பொழுதும் ஹிதரூபமான செயலையுடையவனாயிருத்தல். அடியவர்களின் பிரிவைப் பொறுக்க மாட்டாத மென்மை மார்தவமாகும். ஸௌலப்யமாவது மாம்ஸக் கண்களுக்கும் கூட விஷயமாக ஆகும்படித் தன்னுடைய திருமேனியை ப்ரகாஶப்படுத்துதல். இந்த ஸௌலப்யத்தின் பூர்த்தியானது அர்ச்சாவதாரத்திலேயே உள்ளது. மற்ற குணங்களும் இப்படி அடியவர்களை விஷயமாக [இலக்காக]க் கொண்டவை என்று அநுஸந்திக்கப்பட வேண்டியவைகளாகும். இப்படிப்பட்ட கல்யாண குணாகரனாயும் ஆத்மவர்கத்துக்குத் தாபத்ரயத்தாலுண்டாகும் துக்கத்தைப் பார்ப்பதால் தயையை உடையவனாய் எப்பொழுதும் அவர்களை உய்விக்கும் வழியைச் சிந்திப்பதில் கட்டுண்டவனாய் சந்தநம், சந்த்ரனின் ஒளிக்கதிர், தென்றல் காற்று, தண்ணீர் ஆகியவற்றைப் போல் தனக்கு ஒரு பயனைக் கருதாமல் பிறருடைய பயனையே கருதுபவன். தன்னை வந்து அடைந்தவர்களாய், பலவிதமான ஸ்வபரிகரங்களையும், தங்களைக் காக்கும் பொறுப்புகளையும் தன்னிடம் ஸமர்ப்பித்தவர்களாய், ஜந்மம், சரிதம், ஜ்ஞாநம், முதலியவற்றைப் நிரூபியாமல் தன்னுடைய தோள்களில் அர்ப்பிக்கப்பட்ட பக்தர்களின் உய்வு ஆகிய பொறுப்பை உடையவன் பகவான். ஸாந்தீபநி என்ற குருவின் மரணமடைந்த புத்ரனை மீட்டு வருதல், தன்னுடைய ஸ்ரீவைகுண்டமாகிற பதத்தை யடைந்த வைதிகனுடைய புத்ரர்களை மீட்டு வருதல் முதலிய பலவித செயற்கரிய செயல்களால் அந்தந்த அடியவர்களின் விருப்பங்களை நிறைவேற்றினவன் பகவான். த்ருவபதம் முதலியவற்றைப் போல் இதுவரையிலில்லாத பதங்களைக் கொடுக்குமவன். தன்னுடைய செல்வம் ஆத்மாத்மீயங்கள் ஆகிய யாவற்றையும் அடியவர்களுக்காக்கி அவர்களுக்கு ப்ரயோஜநத்தை உண்டாக்குவதன் மூலம் தன்னை க்ருதக்ருத்யனாக [செய்ய வேண்டியதைச் செய்தவனாக]க் கருதுமவன். அடியார்கள் பண்ணின பெரிய அபராதங்களை மறந்து அவர்கள் செய்த சிறிதளவு நன்மையையே நினைவில்

वासितविविधविषयरसविस्मरणकारणभूत [1]निखिलदशा-भोग्यतातिशयः भार्यापुत्रादिदोषगवेषणानभिज्ञ-पुरुषवत् [2]अमनस्कृताश्रितापराधः[2] कमलालयानिरूपितानपि आश्रितापराधान् अतीतान्[3] असद्भूतानुपपादयन् कामिनीविषयदोषकलितादरकामुकवत् तद्दोषेषु भोग्यबुद्धिः, तेषु करणत्रयेणापि[4] एकरूपः, तद्वियोगदशासु तद्दुःखासहिष्णुत्वेन स्वकीयजनव्यसनकलापं गोष्पदीकुर्वाणः, तथा संश्रित[5]संश्लेषणाय[6] स्वयं तत्सजातीयो भवन्, अथ तेषां यथेष्ट[7]विनियोग[7]विषयतया आत्मानं तदधीनयन्, सद्योजातवत्सवात्सल्येन वत्सेतर, तृणकबल[8]प्रदानागतजनजिघांसोद्युक्त[9]धेनुरिव दिव्य-महिषीगणं नित्यमुक्त[10]सङ्घानपि अनभिमन्वानः प्रपद्यमानजनरक्षादीक्षैकतत्परः, सततावगतसमस्तवस्तु-तत्त्वः, सर्वशक्तिः, अवाप्त[11]समस्त[11]कामः, श्रियःपतिः, अपारकरुणातरङ्गिणीतरङ्गपरम्परापरिमुषितसकल-चेतन[12]श्रमः[12] सर्वेश्वर एव [13]सकलजगत्कारणमिति निरणायि।

---

1. T1 G2 omit निज
2. G1 विस्मृत तत्संश्रृतापराधः
3. G2 अतितरान्
4. G1 त्रयेष्वपि
   T1 त्रयेऽपि
5. G2 तदाशङ्कित
6. G2 संक्षेपणाय
7. G1 नियमन
8. T1 तृणपूल
9. T1 जिघांसोयुक्त
10. T1 omits सङ्घान्
11. G1 सकल
12. G1 क्लमः
13. G1 omits सकल



வைத்திருப்பவன். அநாதி காலமாக நிரந்தரமாகவிருக்கிற வாஸனையினால் உண்டான பலவிதமான [சிற்றின்ப] விஷயங்களை மறப்பதற்குக் காரணமான இனிமையை எல்லா நிலைகளிலும் உடையவன். மனைவி மக்களிடத்தில் கிடக்கிற குற்றங்களை அறியாத புருஷனைப் போல் அடியவர்களுடைய அபராதங்களில் மனத்தைச் செலுத்தாதவனாய், தாமரையில் இருப்பவளான பெரியபிராட்டியார் அடியவர்களுடைய மிகப் பெரிய அபராதங்களை எடுத்துக் காட்டினாலுங்கூட அவை ஒன்றுமில்லாதவைகள் என்று நிலைநாட்டி, மனத்திற்கு உகந்தவளிடம் உள்ள அழுக்கையும் உகக்கும் காமுகனைப் போலே அவர்களுடைய தோஷங்களும் இனிமையானவை என்ற நினைவையுடையவன் பகவான். அவர்களிடத்தில் முக்கரணங்களாலும் ஒருபடிப்பட்டவன். அவர்களை விட்டுப் பிரிந்த நிலைகளில் அந்த துன்பத்தைப் பொறுக்க மாட்டாமையினால் அவர்களுடைய துன்பத்தை கோஷ்பதீகரிப்பவனாய் [மாட்டின் குளம்பினளவுக்குச் சிறுகச் செய்பவனாய்] அப்படியே தன்னை அண்டினவர்களுடன் கலப்பதற்காக அவர்களில் ஒருவனாகப் பிறந்து, அவர்கள் விருப்பப்படி நியமிக்கத் தகுந்தவனாகத் தன்னை அவர்களுக்கு அதீநனாக ஆக்கித் தருபவன். அப்பொழுது பிறந்த கன்றினிடத்திலுண்டான வாத்ஸல்யத்தால் முன்னணைக் கன்றையும் புல்லிட வந்தவர்களையும் கொல்ல முயலும் பசுவைப் போலே பிராட்டிமார்களையும் நித்ய முக்தர்களின் கூட்டங்களையும் அநாதரித்து தன்னைச் சரணமடைந்த ஜநங்களின் ரக்ஷணதீக்ஷையிலேயே [ரக்ஷணவ்ரதத்திலேயே] முனைப்புடையவனாய் எப்பொழுதும் எல்லா வஸ்துக்களையும் உள்ளபடி அறிபவனாய், ஸர்வஶக்திகளையுமுடையவனாய், எல்லா விருப்பங்களும் நிறைவேறப் பெற்றவனாய் ஶ்ரிய:பதியாய் அபாரமான கருணையாகிற ஆற்று வெள்ளத்தின் அலைகளின் பரம்பரையினால் சேதனர்களுடைய ஸகலஶ்ரமங்களையும் கவர்ந்து கொள்பவனாயுள்ள ஸர்வேஶ்வரனே ஸகல ஜகத்காரணம் என்று நிர்ணயிக்கப்படுகிறது.

केचित् परमाणुकारणतां कथयन्ति। तत्र प्रमाणाभावात्, श्रुतिविरोधात् च तदसङ्गतम्। कापिलाः प्रधानं कारणमाहुः। तस्य अचेतनत्वात् ईश्वराधिष्ठानमन्तरेण परिणामाशक्तत्वात् सृष्टि-संहारादीनां अयोगात् श्रुतिविरोधाच्च तदप्यनुपपन्नम्। एवं कर्मपर[1]तन्त्रत्वात्[1] दुःखित्वात् चेतनस्यापि कारणत्वासम्भवः। अतः सर्वेश्वर एव निखिल-जगन्निदानभूत इति निरणायि।

नास्य कारणत्वं अविद्याकर्मपरनियोगादिभिः, अपि तु स्वेच्छयैव;

"तदैक्षत[2] बहु स्यां प्रजायेय" (छा. –6-2-3)

इति श्रवणात्। अतः[3] सङ्कल्पविशिष्टः सर्वेश्वर एव निमित्तकारणम्।

[4]"सोऽकामयत बहु स्यां प्रजायेयेति",

(तै. अन. 6)

"अथ पुरुषो ह वै नारायणः अकामयत प्रजाः सृजेय इति" (नारायणोपनिषत् 1)

इत्यादिषु तथोपलम्भात्।[4] [5]सङ्कल्पमात्रेण सर्गसिद्धेः अस्य कारणत्वेऽपि न आयासादिसम्भवः। तस्यैव उपादानकारणत्वं, सहकारिकारणत्वं च अवगन्तव्यम्[6]।

1. T1 वशत्वात्
2. T1, G2 omit तदैक्षत
3. T1 adds अत:
4. T1 G2 omit सोऽकामयत..... ...........तथोपलम्भात्
5. G1 adds अतरू:
6. G1 अनुसन्धेयम्



சிலர் [வைஶேஷிகர்கள்] பரமாணுவே ஜகத்துக்குக் காரணம் என்றார்கள். அதில் ப்ரமாணமில்லாமையாலும் ஶ்ருதி விரோதம் வருவதாலும் அது பொருந்தாததாகும். காபிலர்கள் ப்ரதாநத்தை [ப்ரக்ருதியை]க் காரணம் என்கிறார்கள். அது அசேதநமானபடியால் ஈஶ்வராதிஷ்டாநமில்லாமல் [ஈஶ்வரனுடைய இயக்குவித்தல் இல்லாமல்] பரிணாமமடைய [மாறுதலடைய] ஶக்தியற்றதாகையால் ஸ்ருஷ்டி ஸம்ஹாராதிகள் ஸம்பவியாதபடியாலும் ஶ்ருதி விரோதம் வருவதாலும் அவர்களுடைய மதமும் பொருந்தாது. இவ்விதமே கர்மபரதந்த்ரனாகையாலும் துக்கியான படியாலும் சேதநனுக்கும் காரணத்வம் ஸம்பவியாது. எனவே ஸர்வேஶ்வரனே எல்லா ஜகத்துக்கும் காரணபூதன் என்று நிர்ணயிக்கப்படுகிறது.

அவித்யை, கர்மம், பிறருடைய நியமனம் முதலியவற்றால் அவனுக்குக் காரணத்வம் வரவில்லை, அவனுடைய விருப்பத்தினாலேயே காரணத்வம் வருகிறது,

'அந்த ப்ரஹ்மம் ஸங்கல்பித்தது பல வ்யஷ்டிதத்த்வங்களாக ஆகக் கடவேன், அதற்காகப் பல ஸமஷ்டி தத்த்வங்களாக ஆகக் கடவேன்' [சாந்.6–2–3]

என்று ஓதப்படுவதால். ஆகையால் ஸங்கல்பத்துடன் கூடினவனான ஸர்வேஶ்வரனே நிமித்தகாரணன்–

'அவன் ஸங்கல்பித்தான் பல வ்யஷ்டிதத்த்வங்களாக ஆகக் கடவேன், அதற்காகப் பல ஸமஷ்டி தத்த்வங்களாக ஆகக் கடவேன்' [தை. ஆந.6]

'இனிப் புருஷனான நாராயணனன்றோ ஸங்கல்பித்தான், ப்ரஜைகளை ஸ்ருஷ்டிக்கக் கடவேன் என்று'

[நாராயணோபநிஷத் 1]

இத்யாதிககளில் அப்படிக் காணப்படுவதால். ஆக ஸங்கல்பமாத்ரத்தால் ஸ்ருஷ்டியானது நடந்து விடுவதால் அவனுக்குக் காரணத்வமிருந்தாலுங் கூட ஆயாஸம், மனத்தொய்வு முதலியவை இல்லை. அவனுக்கே உபாதாநகாரணத்வமும் ஸஹகாரிகாரணத்வமும்கூட அறியப்பட வேணும்.

[1]"बहुस्यां", (छा. 6-2-3, तै.आन. 6)
"प्रकृतिश्च प्रतिज्ञादृष्टान्तानुपरोधात्", (ब्र.सू. 1-4-23)
"एकविज्ञानेन सर्वविज्ञानं", (छा. 4.1.3)
"यथा सोम्य एकेन मृत्पिण्डेन सर्वं मृण्मयं विज्ञातं स्यात्"[1] (छा. 6-1-4)
"स्रष्टा सृजति च आत्मानम्" (वि.पु. 1-2-70)
"स एव सृज्यः[2]" (वि.पु. 1-2-70)

इत्यादिभिः भगवत एव जगदाकारेण परिणामाभिधानात्।

"स एव सृज्यः [10]स च सर्गकर्ता[3]" (वि.पु. 1-2-70)

इति एवकारेण सहकार्यन्तर निषेधाच्च। तर्हि –

"तं अजरं[4] अनन्तं [5]तदव्ययं यद्भूतयोनिम्", (?)
"एतस्य वा अक्षरस्य प्रशासने"[12] (बृह. 3-8-9)

इत्यादिषु कथं निर्विकारत्वं उच्यते इति चेत्, स्वरूपस्य विकाराभावात् तथोक्तमिति न विरोधः। तर्हि जगद्रूपेण परिणामसिद्धिः कथमिति चेत्, सूक्ष्म-चिदचिद्विशिष्टस्य तस्य[6] सर्वशक्तेः ईश्वरस्य विशेषणभूत चिदचिद्द्वारा जगदाकारपरिणतिः, ऊर्णनाभेः विशेषणभूत तन्तुद्वारेण पटाभासरूपपरिणामवत् उपपद्यत[7] इति –

1. T1 G2 omit बहु स्यां....... .....विज्ञातं स्यात्
2. G2 adds स च सर्गकर्ता
3. G2 omits स च सर्गकर्ता
4. G2 अजं
5. T1 G2 omit तदव्ययं......प्रशासने
6. T1 G1 omit तस्य
7. T1 उत्पद्यत



'பலவாக ஆகக் கடவேன்' [சாந். 6–2–3]

'உபாதாநகாரணமாகவும் ப்ரஹ்மம் ஆகிறது ப்ரதிஜ்ஞையும் [சூளுரையும்] த்ருஷ்டாந்தமும் பொருந்துவதற்காக' [ப்ர.ஸூ 1–4–23]

'ப்ரஹ்மமாகிற ஒன்றையறிந்தால் உலகங்கள் யாவற்றைப் பற்றிய அறிவும் ஏற்படுகிறது' [சாந். 4–1–13]

'எப்படி ஒரு மண் பிண்டத்தையறிந்தால் மண்பிண்டத்தின் மாறுதல்களான குடம், மடக்கு முதலிய யாவும் அறியப்பட்டனவாகின்றனவோ' [சாந். 6–1–4]

'ஸ்ரஷ்டாவான பகவான் தன்னை உலகமாக ஸ்ருஷ்டித்துக் கொள்ளுகிறான்' [வி.பு. 1–2–70]

இத்யாதிகளால் பகவானுக்கே ஜகதாகாரமான பரிணாமம் கூறப்படுவதால்.

'அவனே ஸ்ருஷ்டிக்கப் படுபவன், அவனே ஸ்ருஷ்டி கர்த்தா' [வி.பு. 1–2–70]

என்று ஏவகாரத்தால் ஸஹகார்யந்தரம் [வேறு துணைபுரிபவன்] இல்லை என்று கூறப்பட்டிருப்பதால் பகவானே மூன்று விதமான காரணமும் ஆகிறான். அப்படியானால் [பகவானே உபாதான காரணமும் ஆகிறான் என்றால் மண், குடமாக விகாரமடைவதுபோல் பகவானும் விகாரத்தை அடைகிறான் என்றல்லவோ ஏற்படும்? ஆனால்]

'கிழத்தனம் அற்றவனாய் முடிவு அற்றவனாய் விகாரமற்றவனாயுள்ள அந்த பூதகாரணனை' [?]

'அந்த மாறுதலற்றவனின் நியமநத்தால்' [ப்ருஹ.3.8.9]

இத்யாதிகளில் பகவானுக்கு மாறுதல் அற்ற தன்மை எப்படிச் சொல்லப்படுகிறது என்றால் அவனுடைய ஸ்வரூபத்துக்கு மாறுதல் இன்மையால் அப்படிச் சொல்லப்படுகிறது என்பதால் விரோதமில்லை. அப்படியானால் உலகவடிவமான மாறுதல் எப்படி ஏற்படுகிறது என்றால் ஸூக்ஷ்ம சிதசித்துக்களை விஶேஷணமாக உடையனாய், ஸர்வஶக்தியாயுள்ள ஈஶ்வரனுக்கு விஶேஷணமாயுள்ள சிதசித்துக்களே உலக வடிவாக மாறுதல் அடைகிறது. சிலந்திப் பூச்சிக்கு விஶேஷணமாக உள்ளதாய், அதன் வாயிலிருந்து வெளிவரும் நூலுக்கு வலையாகப் பரிணாமம் ஏற்படுவது போல் பொருந்துகிறது.

"यथा ऊर्णनाभिः सृजते गृह्णते च"

(मुण्ड. 1-1-7)

इति श्रुत्यैव न्यरूपि। अतः[1] सूक्ष्मचिदचिद्विशिष्टस्य उपादानत्वं, सङ्कल्पविशिष्टस्य तस्य निमित्तकारणत्वं, ज्ञानशक्त्यादिविशिष्टस्य तस्य सहकारिकारणत्वं च उपपन्नम्। अचितः परिणामयितृत्वं[2] चेतनानां करणकलेबर वितरणपूर्वकं[3] ज्ञानविकासनं च जगदुपादानत्वं[4] ईश्वरस्य। जगतः स्थितिकरणं नाम सृष्टपदार्थसार्थे[5] अनेकविधसस्यनिकुरुम्बं अम्बुवत् अनुकूलतया प्रविश्य सर्वरक्षणकरणम्। जगत्संहरणन्तु पित्रादिभिः[6] अविनीततनयादेः निगलनादि[7]बन्धनमिव[8] विषयान्तरसञ्चरणशीलकरणविश्लेषणम्[9]। एतत्त्रयं[10] प्रत्येकं चतुर्विधम्। सृष्टौ[11] ब्रह्मणः प्रजापतीनां कालस्य अखिलभूतानामपि अन्तर्यामी भूत्वा रजोगुणं अधिष्ठाय सकलं सृजति।

"ब्रह्मा दक्षादयः कालः तथैवाखिलजन्तवः।
विभूतयो हरेरेता जगतः सष्टिहेतवः॥"

(वि.पु. 1-22-31)

---

1. T1 ततः
2. T1 परिणामाधिष्ठातृत्वं
3. G1 प्रदानपूर्वकं
4. G2 जगदुपादनं
5. G1 पदार्थान्
6. G1 जनकादिभिः
7. T1 निगलादि
8. G2 निबन्धनमिव
9. G1, G2 विश्लेषकरणमीश्वरेण
10. G2 त्रितयं
11. T1 सृष्टेः



'எப்படி சிலந்திப் பூச்சியானது ஸ்ருஷ்டிக்கிறது அழிக்கிறதோ' [முண்டகம் 1–1–7]

என்று ஶ்ருதியும் கூட நிரூபித்தது. ஆகையால் ஸூக்ஷ்மசிதசித்விஶிஷ்டனான பகவானுக்கு உபாதாநத்வம் [மாறும் தன்மை], ஸங்கல்ப விஶிஷ்டனான பகவானுக்கு நிமித்தகாரணத்வம், ஜ்ஞாநஶக்த்யாதி விஶிஷ்டனான அவனுக்கு ஸஹகாரி காரணத்வம் என்பவை பொருந்தும். அசித்தை மாறுதல் அடைவித்தலும், சேதனர்களுக்குக் கரணகளேபரங்களை [இந்த்ரியஶரீரங்களை]க் கொடுத்தல் முன்னாக ஜ்ஞாநத்தை விரிவடையச் செய்தலும் ஈஶ்வரனுக்கு ஜகதுபாதாநத்வம் ஆகும். ஜகத்தினுடைய ஸ்திதிகரணம் [உலகத்தை நிலைநிறுத்தல்] என்றால் பலவிதமான பயிர்களிலும் புகும் ஜலத்தைப் போல் ஸ்ருஷ்டிக்கப் பட்ட பதார்த்தங்கள் யாவற்றிலும் அனுகூலமாக ப்ரவேஶித்து எல்லா விதமான ரக்ஷணத்தையும் செய்தல். உலகத்தை அழித்தலோ என்றால் அடங்காதவர்களான பிள்ளைகள் முதலியவர்களைத் தந்தை சங்கிலியால் விலங்கிட்டு வைப்பதைப் போல் உலக விஷயங்களில் ஸஞ்சரிக்கும் ஸ்வபாவமுடைய கரணங்களை [இந்த்ரியங்களை]ப் பிரித்து வைத்தல். ஸ்ருஷ்டி, ஸ்திதிகரணம், ஸம்ஹாரம் என்ற இம்மூன்றும் தனித்தனியே நாலு விதமாகும். ஸ்ருஷ்டியில் ப்ரஹ்மா, ப்ரஜாபதிகள், காலம், எல்லா பூதங்கள் ஆகிய யாவற்றுக்கும் அந்தர்யாமியாக இருந்து கொண்டு ரஜோ குணத்தை அதிஷ்டித்து [இயக்கி] ஸகலத்தையும் ஸ்ருஷ்டிக்கிறான்.

'ப்ரஹ்மா, தக்ஷாதிகள், காலம், அப்படியே ஸகல ஜந்துக் கள் ஆகிய ஹரியினுடைய எல்லா விபூதிகளும் ஜகத்தி னுடைய ஸ்ருஷ்டிஹேதுக்களாகும். [வி.பு. 1–22–31]

इत्यभिधानात्। स्थितौ तु विष्ण्वादिरूपेण अवतीर्य मन्वादिमुखात् शास्त्राणि प्रवर्तयन् सत्पथं दर्शयित्वा कालस्य सर्वभूतानामपि अन्तर्यामीभवन्[1] सत्त्वगुण--मधिष्ठाय सर्वमपि स्थापयति। तथोक्तं –

"विष्णुः[2] मन्वादयः कालः सर्वभूतानि च द्विज।
स्थितेर्निमित्तभूतस्य विष्णोरेताः विभूतयः॥"
(वि.पु. 1-2-32)

इति[3]। संहारे तु रुद्रस्य अग्न्यन्तकादीनां कालस्य[4] सर्व[5]भूतानामपि अन्तर्यामीभवन् तमोगुणमधिष्ठाय संहरति समस्तम्।

"रुद्रः कालान्तकाद्याश्च समस्ताश्चैव जन्तवः।
चतुर्धा प्रलयायैते जनार्दनविभूतयः॥" (वि.पु. 1-2-33)

इत्युदीरणात्।

ननु कांश्चित् सुखित्वेन, अन्यान् दुःखितयाऽपि स्रष्टुः ईश्वरस्य वैषम्यं नैर्घृण्यं च[6] प्रसज्यत इति चेन्न। सृज्यकर्महेतुकत्वात् तथाविधविषम[7]सृष्टेः। तथा च सूत्रितं

"वैषम्यनैर्घृण्ये न सापेक्षत्वात्" (ब्र.सू. 2-1-34)

इति। किञ्च जिह्वायां अभिज्ञानदानपूर्वकं मृद्भक्षणात् शिशुनिवारणनिरतमातृवत् ईश्वरस्यापि हितपरत्वेन

1. G1 सन्
2. G1 omits विष्णुः
3. G1 इत्युक्तेः
4. G1 adds च
5. G1 सकल
6. T1 omits च
7. G1 omits विषम



என்று கூறப்பட்டிருக்கிறது. ஸ்திதியிலோவென்றால் விஷ்ணு முதலிய ரூபமாக அவதரித்து மநு முதலியவர்கள் முகத்தால் ஶாஸ்த்ரங்களை ப்ரவர்த்திப்பித்து ஸந்மார்கத்தைக் காட்டி காலத்துக்கும் ஸர்வபூதங்களுக்கும் அந்தர்யாமியாக ஆகி ஸத்வகுணத்தை அதிஷ்டித்து [இயக்கி] யாவற்றையும் நிலை நிறுத்துகிறான்.

'த்விஜனே! விஷ்ணு, மந்வாதிகள், காலம், ஸர்வபூதங்கள் ஆகிய இவை ஸ்திதிக்கு நிமித்த பூதனான பகவானுடைய விபூதிகள்' [வி.பு. 1-2-32]

என்று இது கூறப்பட்டுள்ளது. ஸம்ஹாரத்திலோவென்றால் ருத்ரன், அக்நி, யமன், காலம், ஸர்வபூதங்கள் ஆகியவற்றுக்கு அந்தர்யாமியாக இருந்து கொண்டு தமோகுணத்தை அதிஷ்டித்து [இயக்கி] ஸம்ஹரிக்கிறான் யாவற்றையும்.

'ருத்ரன், காலன், யமன், ஸமஸ்த ஜந்துக்கள் என்று நாலுவகைப்பட்ட வஸ்துக்கள் ப்ரளயத்துக்குக் காரணங்கள், ஜநார்தனனின் விபூதிகள் [உடைமைப் பொருட்கள்]' [வி.பு.1-2-33]

என்று சொல்லப் பட்டிருப்பதால்.

நநு, சிலரை சுகப்படுபவர்களாகவும் மற்றவர்களை துக்கப்படுபவர்களாகவும் படைக்கிற ஈஶ்வரனுக்கு வைஷம்யமும் [பாரபக்ஷமும்], நைர்க்ருண்யமும் [கருணை இன்மையும்] வந்து சேருமே என்றால் அப்படியல்ல, படைக்கப்படும் சேதநர்களின் கர்மத்தைக் காரணமாகக் கொண்டு ஏற்றத்தாழ்வுடைய படைப்பு இருப்பதால்.

'வைஷம்யம் நைர்க்ருண்யங்கள் பகவானுக்கு வரமாட்டா, சேதநர்களின் கர்மத்தைப் பொறுத்து விஷமஸ்ருஷ்டி செய்யப்படுவதால்' [ப்ர.ஸூ. 2-1-34]

என்று ப்ரம்மஸூத்ரத்தில் கூறப்பட்டுள்ளது. மண்தின்னும் குழந்தையை நாக்கில் குறியிட்டு வைத்துத் தடுக்கும் தாயைப் போல் ஈஶ்வரனும் ஹிதபரனானபடியால் அப்படியே

तथाविधानात् न तस्य[1] वैषम्यं नेर्घृण्यं च प्रसज्यते[2]। तथोक्तं पराशरेण –

"निमित्तमात्रमेवासौ सृज्यानां सर्गकर्मणि।
प्रधानकारणीभूता यतो वै सृज्यशक्तयः॥
निमित्तमात्रं मुक्त्वैव नान्यत् किञ्चिदपेक्षते॥
नीयते तपतां श्रेष्ठ स्वशक्त्या वस्तु वस्तुताम्॥"

(वि.पु. 1-2-51, 52)

इति। यथा नानाविधसंस्थानादियुक्तानां सस्यानां[3] वैषम्यहेतुत्वं न उत्पत्तिमात्रनिमित्तभूतस्य सलिलस्य, किन्तु तत्तद्बीजस्थितविविधशक्तिविशेषस्यैव। एवं ब्रह्मादिस्तम्बपर्यन्तं जगतो विषमभावस्य तत्तत् [4]प्रतिनियतकर्मैव निदानं, न तु तत्तत्[4] कर्मानुकूल सृष्टिमात्र-निमित्तभूतो भगवान्। तस्मात् वैषम्यनैर्घृण्यप्रसङ्ग एव भगवतो न भवति।

उक्तप्रकारः सर्वेश्वरः सविग्रह एव जगतः सृष्ट्यादिकं करोति।

"सर्गस्थिति विनाशांश्च[5] भगवान् मधुसूदनः।
तैस्तैः रूपैः अमेयात्मा करोत्यव्याहतान् प्रभुः॥"

(?)

इति तथोदितत्वात्।

---

1. G2 तत्र
2. T1 G2 omit प्रसज्यते
3. G1 omits सस्यानां
4. T1 omits तत्तत्प्रतिनियत... ......तत्तत्
5. T1 विनाशश्च



தீம்புகளிலிருந்து சேதனர்களைத் தடுப்பதற்காகத் தாழ்ந்த பிறவிகளில் தள்ளுதலாகிற விஷமஸ்ருஷ்டியைப் பண்ணுகிறபடியால் அவனுக்கு வைஷம்யமும் [ஏற்றத்தாழ்வு மனப்பான்மையும்] நைர்க்ருண்யமும் [இரக்கமின்மையும்] ஏற்படமாட்டா. பராஶரரால்,

'நிமித்தமாத்ரமாக [சேர்த்து வைப்பவனான அப்ரதாநகாரணனாக மட்டும்] ஸ்ருஷ்டிக்கப்படும் சேதநர்களின் ஸ்ருஷ்டி கர்மத்தில் அந்த பகவான் இருக்கிறான், ப்ரதாநகாரணமாக ஸ்ருஜ்யஶக்திகள் [கர்மங்கள்] இருக்கிறபடியால்.'

'நிமித்த மாத்ரத்தை [சேர்ப்பிக்கும் தத்த்வமாத்ரத்தை] விட வேறு எதையும் ஸ்ருஷ்டிக்கப்படும் பொருள் எதிர்பார்க்கவில்லை, தன்னுடைய கர்ம ஶக்தியால் சேதனனாகிற வஸ்து உடலோடு கூடியிருக்கும் தன்மையை அடைவிக்கப்படுகிறது' [வி.பு. 1–2–51,52]

என்று கூறப்பட்டுள்ளது.

பலவிதமான அமைப்புடைய பயிர்களின் வேறுபாட்டுக்குக் காரணம் உத்பத்தி மாத்ரத்துக்கு காரணமான ஜலமன்று, ஆயின் அந்தந்த விதைகளிலுள்ள வெவ்வேறான ஶக்திவிஶேஷங்களே ஆகும்.

அப்படியே ப்ரஹ்மா தொடங்கிப் புல் ஈறாகவுள்ள ஜகத்தினுடைய வேறுபாட்டுக்கு அவரவர்களிடம் தனித்தனியேயுள்ள கர்மமே காரணமாகும், அந்தந்தக் கர்மாநுகூலமான ஸ்ருஷ்டிமாத்ரத்துக்கு நிமித்தமாயுள்ள பகவான் காரணனாக மாட்டான். எனவே வைஷம்ய நைர்க்ருண்யங்களின் ப்ரஸங்கமே [பேச்சே] பகவானுக்கு வரமாட்டாது.

சொல்லப்பட்ட ப்ரகாரத்திலுள்ள பகவான் திருமேனியுடன் கூடினவனாக இருந்து கொண்டே ஸ்ருஷ்டி முதலியவைகளைச் செய்கிறான்.

'தடையற்றவைகளான ஸ்ருஷ்டி, ஸ்திதி, விநாஶம் என்பவைகளை பகவான் மதுஸூதநன் அளவிடமுடியாத ஆத்மாவான ப்ரபு அந்தந்த ரூபங்களோடு கூடிச் செய்கிறான்' [?]

என்று சொல்லப்பட்டிருப்பதால்.

अस्य[1] [2]विग्रहश्च स्वरूपात् तदाश्रितगुणाच्च अत्यन्त विलक्षणत्वेन[2] अभिमतः। तदुभयप्रकाशकत्वात् स्वरूपानुरूपश्च[3]। 'किमात्मिका भगवतो व्यक्तिः' इति प्रश्नस्य, 'यदात्मको भगवान्' इति उत्तरे दत्ते, पुनरपि 'किमात्मको भगवान्' इति कृते[4] प्रश्ने 'ज्ञानात्मको भगवान्' इति अजडत्वाभिप्रायेण ज्ञानात्मकत्वोत्तरश्रवणात् ज्ञानात्मक[5]भगवत्स्वरूपस्य अनुरूपः[6] इति निश्चितः[7]। एकरूपश्च। –

"यस्य दिव्यं हि तद्रूपं जायते[8] वर्धते न च।[9]

(?)

इति षड्भावविकारराहित्यवचनात्[10]। ननु

"समस्तशक्ति रूपाणि तत्करोति जनेश्वर।
देवतिर्यङ्मनुष्याख्या चेष्टावन्ति स्वलीलया॥"

(वि.पु. 6-7-71)

इति [11]स्वनित्यमङ्गलविग्रहमेव देवमनुष्यादिशरीरसदृश सन्निवेशं करोतीति कथिते सति कथं तद्विग्रहस्य अनेकरूपस्य[12] एकरूपत्वमिति चेत्, अस्य विग्रहस्य

1. G2 तस्य
2. T1 विग्रहस्वरूपात् तदाश्रितगुणाच्च अत्यन्त
3. T1 तत्स्वरूपश्च
4. T1 प्रकृते
5. G2 ज्ञानात्मकत्वं
6. G2 अनुरूपं
7. G2 निश्चितं
8. G2 हीयते
9. G1 adds कोऽन्यः तद्वेदितुं शक्तो यो न स्यात् तद्विदः परः
10. G1 श्रवणात्
11. G1 T1 omit स्व
12. G2 T1 omit अनेकरूपस्य

இந்த பகவானுடைய திருமேனியும், ஸ்வரூபத்தையும் அதை ஆஶ்ரயித்துள்ள குணங்களையும் காட்டிலும் அத்யந்த விலக்ஷணம் [மிகச் சிறப்புற்றது] என்று கருதப்படுகிறது. அவ்விரண்டையும் ப்ரகாஶப் படுத்துவதால் ஸ்வரூபத்திற்கு ஏற்றதாகவும் திருமேனி இருக்கிறது. 'எந்த த்ரவ்யத்தாலானது பகவானுடைய திருமேனி?' என்ற கேள்விக்கு 'எந்த த்ரவ்யத்தால் பகவான் ஆகியிருக்கிறானோ அந்த த்ரவ்யத்தாலேயே திருமேனியும் ஆயிருக்கிறது' என்று விடையிறுத்தால், 'பகவான் எந்த த்ரவ்யத்தாலானவன்?' என்று மீண்டும் கேள்வியெழ 'ஜ்ஞாநாத்மகன் பகவான்' என்று அஜடத்வ அபிப்ராயத்தால் [ஸ்வயம்ப்ரகாஶ வஸ்து என்ற அபிப்ராயத்தால்] ஜ்ஞாநாத்மகத்வமாகிற விடை ஓதப்படுவதால் ஜ்ஞாநாத்மகமான பகவத் ஸ்வரூபத்துக்கு ஏற்ற திருமேனி என்று நிஶ்சயிக்கப்படுகிறது. அது ஏகரூபமாகவும் [மாறுதல் அடையாததாகவும்] இருக்கிறது.

'எவனுடைய திவ்யரூபமானது பிறப்பதுமில்லை வளர்வதுமில்லையோ' [?]

என்று ஆறுவித மாறுபாடுகள் பகவானுடைய திருமேனிக்கு இல்லை என்று வசநமுள்ளது. நநு [ஆனால்],

'ஸமஸ்த ஶக்திகளையுமுடைய ரூபங்களைத் தன்னுடைய லீலையால் உண்டாக்குகிறான் [அரசனே!] தேவன், விலங்கு, மனுஷ்யன் என்பவற்றின் செயல்களை உடையவை அந்த ரூபங்கள்' [வி.பு. 6-7-71]

என்று தன்னுடைய நித்யமங்களமான விக்ரஹத்தையே [திருமேனியையே] தேவமநுஷ்யாதி ஶரீரங்களுக்கு ஒப்பான அமைப்புடையதாகச் செய்கிறான் என்று சொல்லப் பட்டிருப்பதால் அநேகரூபங்களையுடைய அவனுடைய திருமேனிக்கு எப்படி ஏகரூபத்வம் வரும் என்றால்,

ईश्वरेच्छया उपाधिसम्प्राप्तत्वात् देवतिर्यङ्[1]मनुष्यादि शरीर समान सन्निवेश विशेषात् अन्तरेण प्राकृतशरीरवत् कर्मानुगुण तद्विकारास्पदत्वाभावात् एकरूपत्ववचनं युक्तम्।

अत एव नित्यश्च।

"सदा पश्यन्ति",

[2]"वैकुण्ठे तु परे लोके",

"नित्यत्वेन व्यवस्थितं"

"आनन्त्यविश्वकर्म"

"निरस्तवैरूप्यं"

"पौराणं शाश्वतं च ध्रुवं च"

"कस्ते बुध्येत् अनादेः"

"वैकुण्ठे तु सदा विष्णुः श्रीसहायः उपास्यते।
सायुज्यं प्रतिपन्नैस्तु तीव्रभक्तैश्च योगिभिः॥"[2],

[3]"पश्यन्ति च सदा देवं नेत्रैः ज्ञानेन वाऽमराः"[3]

इति वचनात्। तस्य सावयवत्वे सति कथं नित्यत्वं इति चेत् न हि[4] सर्वत्र सावयवत्वम् अनित्यत्वहेतुः। किन्तु अवयवारब्धत्वमेव। अन्यथा करचरणाद्यवयव-सहितस्य आत्मनोऽपि अनित्यत्वप्रसङ्गात्। तस्य अवयवारब्धत्वे प्रमाणाभवात्। नित्यत्वेन आगम पुराणादिभिः अभिहितत्वाच्च दिव्यमङ्गलविग्रहस्य नित्यत्वं उपपन्नम्॥

1. T1 omits तिर्यक्
2. T1 G2 omit वैकुण्ठे......योगिभिः
3. G1 omits पश्यन्ति.....वैभवात्
4. G1 T1 omit हि



ஈஶ்வரனான தன்னுடைய இச்சையின் காரணமாகவே தேவன், மனிதன், விலங்கு போன்ற அமைப்பு ஏற்படுவதால் ப்ராக்ருத உடல்களைப் போல் கர்மாநுகுணமான மாறுதல்களை அடைதல் என்பது ஏற்படாதபடியால் ஏகரூபத்வ வசநமானது பொருந்துகிறது.

அதனாலேயே [கர்மாநுகுணத்வம் இல்லாதபடியினாலேயே] அந்தத் திருமேனி நித்யமானதாகவும் ஆகிறது.

'எப்பொழுதும் பார்க்கிறார்கள்'

'வைகுண்டமாகிற மேலான லோகத்தில்'

'நித்யத்வத்தோடு கூடியிருப்பது'

'ஆநந்த்யத்தை உடையது'

'அழகின்மை அற்றது [அழகுடையது]'

'புராதனமாகவிருந்தாலும் புதியதுபோல் மனத்தைக் கவரக் கூடியதாய், விகாரங்களற்றதாய், உறுதியானது'

'அநாதியான உன்னுடைய திருமேனியை யார் கொல்ல முடியும்?'

'வைகுண்டத்திலோவென்றால் ஸ்ரீதேவியுடன் கூடின விஷ்ணுவானவர், அவருடன் ஸமானமான போகத்தை அடைந்தவர்களாலும், தீவ்ரமான பக்தர்களான யோகிகளாலும் எப்போதும் அனுபவிக்கப்படுகிறார்.'

'நித்யஸூரிகளான தேவர்கள் பகவானைக் கண்களால் பார்க்கிறார்கள், ஜ்ஞாநமாகிற வைபவத்தால்'

என்று வசநங்கள் இருக்கின்றன. அவனுடைய திருமேனிக்கு ஸாவயவத்வம் [அவயவங்களுடைமை] இருந்தால் நித்யத்வம் எப்படி வரும் என்றால் எல்லாவிடங்களிலும் அவயவங்களோடு கூடியிருத்தல் அநித்யத்வத்துக்கு ஹேதுவன்று, ஆயின் அவயவங்களால் உண்டாயிருக்கும் தன்மையே அநித்யத்வத்துக்கு ஹேதுவாகும். இல்லையென்றால் கை, கால் முதலிய அவயவங்களுடன் கூடியிருக்கும் ஆத்மாவுக்குங்கூட அநித்யத்வம் ஏற்படும். அவனுடைய திருமேனியானது அவயவங்களால் உண்டானது என்பதற்கு ப்ரமாணமில்லை. நித்யம் என்று ஆகமம், புராணம் முதலியவற்றால் தெரிவிக்கப்பட்டிருப்பதாலும் திவ்யமங்கள விக்ரஹத்துக்கு நித்யத்வமானது பொருந்துகிறது.

शुद्धसत्त्वात्मकश्च। सत्त्वस्य शुद्धिर्नाम गुणान्तर-संसर्गराहित्यम्।

"न तस्य प्राकृता मूर्तिः मांसमेदोऽस्थि सम्भवा"
(महाभारते)

इति [1]तस्य प्राकृतत्व निषेधात्।

"सूक्ष्मेणैव स्वसत्वेन" (?)

इत्याद्युक्तकेवलसत्त्वगुणकत्वाच्च अस्य *शुद्धसत्वमयत्वं[1] उपपन्नम्।

"तस्मात् सत्वं विष्णुप्रकाशकं" (?)

इति सत्त्वगुणस्य[2] भगवत्स्वरूपप्रकाशकत्वाभिधानात्। शुद्धसत्वमयस्य तस्य ज्ञानमयचेतनस्वरूपतिरोधायक-त्रिगुणात्मकशरीरव्यावृत्तत्वात् माणिक्यमयकरण्डस्य स्वान्तःस्थित [3]कनकप्रकाशनशक्तिवत् भगवत्स्वरूप तद्गुणगण-प्रकाशनसामर्थ्यं[3] अस्य भगवद्दिव्यविग्रहस्य अनुसन्धेयम्। तत एव अप्राकृतः पञ्चोपनिषन्मयश्च।

"शक्तयः पञ्च विख्याताः पञ्चोपनिषदाख्यया।
पञ्चशक्तिमयो देवः [4]परमात्मा जगत्पतिः॥
परो हि शुद्धसत्त्वं च विग्रहः परमात्मनः[4]"
(?)

इत्यभिधानात्। पञ्चोपनिषदो नाम –

---

1. G1 omits तस्य.....मयत्वं
* G2 शुद्धसत्वात्मकत्वं
2. G2 सत्वगुणस्य
3. T1 omit कनक....गुणगण
4. T1 omits परमात्मा......परमात्मनः



ஶுத்தஸத்வாத்மகமாகவும் அந்தத் திருமேனி உள்ளது. ஸத்வத்துக்கு ஶுத்தியாவது வேறு குணங்களின் சேர்க்கை இன்மை.

'அவனுக்கு மாம்ஸம், நரம்பு, எலும்பு என்பவற்றால் ஆன ப்ராக்ருத ஶரீரம் இல்லை' [மஹாபா4ரதம்]

என்று அந்தத் திருமேனிக்கு ப்ராக்ருதத்வம் நிஷேதிக்கப்படுகிறது.

'ஸூக்ஷ்மமான தன்னுடைய ஸத்வத்தால்' [?]

முதலியவைகளில் சொல்லப்பட்ட கேவலஸத்வகுணகத்வம் இருப்பதாலும் இதற்கு [திருமேனிக்கு] 'ஶுத்தஸத்வமயத்வம்' பொருந்துகிறது.

'எனவே ஸத்வம் விஷ்ணுவை ப்ரகாஶப்படுத்துமது' [?]

என்று ஸத்வகுணத்துக்கு பகவத்ஸ்வரூப ப்ரகாஶகத்வம் சொல்லப்பட்டிருக்கிறது. ஶுத்தஸத்வமயமான அந்தத் திருமேனிக்கு, ஜ்ஞாநமயமான சேதநஸ்வரூபத்தை மறைக்கக் கூடிய த்ரிகுணாத்மகமான ஶரீரத்திலிருந்து வேறுபாடு இருப்பதால் மாணிக்யமயமான பாத்ரத்துக்குத் தனக்குள்ளிருக்கிற தங்கத்தை ப்ரகாஶப்படுத்தும் ஶக்தியிருப்பதைப் போல் பகவத்ஸ்வரூப – தத்குணகணங் களை ப்ரகாஶப்படுத்தும் ஸாமர்த்யம் திருமேனிக்கு உள்ளது என்று அறியப்பட வேணும். அதனாலேயே அப்ராக்ருதமாயும் பஞ்சோபநிஷந்மயமாயுமுள்ளது அந்தத் திருமேனி.

"பஞ்சோபநிஷத்து என்ற பெயருடைய ஐந்து ஶக்திகள் அறியப்படுகின்றன. பஞ்ச ஶக்திமயனான தேவன் பரமாத்மா ஜகத்பதியாவான். பரமாத்மாவின் மேலான விக்ரஹம் ஶுத்த ஸத்வமாகும்." [?]

என்று கூறப்பட்டிருக்கிறது. பஞ்சோபநிஷத்துக்களாவன–

[1]ओं षौं नमः परायेति, परमेष्ठ्यात्मने नमः, यां नमः परायेति नमोऽन्तः पुरुषात्मन इत्युक्तम्। क्षौं यां शं वां लां इति ससंज्ञक पञ्चोपनिषन्मन्त्रबीजाः वाच्याः॥[1]

"परमेष्ठी स्मृतः शब्दे स्पर्शे[2] तु पुरुषः स्मृतः।
विश्वात्मा तेजसि प्रोक्तो निवृत्यात्मा रसे स्मृतः॥
सर्वात्मा कथितो गन्धे विषये पुरुषः परः।"

(?)

इति परमेष्ठि-पुरुष-विश्व-निवृत्त-सर्व-संज्ञकाः शब्दस्पर्शादिगुणकत्वेन भूतपञ्चकतया प्रतिपन्नाः।

"पञ्चैताः शक्तयः प्रोक्ताः परस्य परमात्मनः।
अशेषजगदाधारा पदे दिव्ये व्यवस्थिताः॥"

(?)

इति भगवच्छक्तित्वात् कार्यपदार्थाधारत्वेन परमपदे वर्तमानाः, आध्यात्मिक-आधिदैविक[3]-आधिभौतिक[4]-जातस्य कारणमिति परमपदे मुक्तादीनां आध्यात्मिकशब्दवाच्यप्राणानां, आधिदैविकशब्दाभिधेय[5]-इन्द्रियाणां, आधिभौतिकशब्दवाच्यशरीरादीनां कारणतया कथिताः –

1. T1 omits ओं.....वाच्याः
2. G2 स्पृशन्
3. G1 आधिदैव
4. G1 आधिभूत
5. G1 वाच्य



பரனுக்கு நமஸ்காரம் என்ற பரமேஷ்ட்யாத்மாவுக்கு நமஸ்காரம். பரனுக்கு நமஸ்காரம் என்ற முடிவானவனான புருஷனுக்கு நமஸ்காரம் என்று சொல்லப்பட்டுள்ளது.

க்ஷௌம், யாம், ஶம், வாம், லாம் என்ற ஐந்து அக்ஷரங்களும் ஸம்ஜ்ஞையுடன் [பெயருடன்] கூடின பஞ்சோபநிஷந் மந்த்ரங்களின் பீஜங்களாகும்.

'பரமேஷ்டீ' என்ற பூதம் ஶப்தம் என்ற குணத்தை உடையதாக ஸ்மரிக்கப்படுகிறது. 'புருஷன்' என்ற பூதம் ஸ்பர்ஶ குணத்தையுடையதாக ஸ்மரிக்கப்படுகிறது. 'விஶ்வ:' என்ற பூதம் தேஜஸ்ஸாகிற குணத்தையுடையதாகச் சொல்லப்படுகிறது. 'நிவ்ருத்த:' என்ற பூதம் ரஸம் என்ற குணத்தையுடையதாக ஸ்மரிக்கப்படுகிறது. 'ஸர்வ:' என்ற பரனான புருஷன் என்ற பூதம் கந்தம் என்ற குணத்தையுடையதாக ஸ்மரிக்கப்படுகிறது'

என்று பரமேஷ்டீ, புருஷ:, விஶ்வ:, நிவ்ருத்த:, ஸர்வ: என்ற ஸம்ஜ்ஞைகளையுடையவைகள் [பெயர்களையுடையவைகள்] ஶப்தஸ்பர்ஸாதிகுணங்களையுடைய பூதபஞ்சகங்களாக அறியப்படுகின்றன.

'எல்லா ஜகத்துக்கும் ஆதாரங்களான இந்த ஐந்து ஶக்திகள் பரனான பரமாத்மாவுக்கு திவ்யமான பதத்தில் [ஸ்ரீவைகுண்டத்தில்] இருப்பவைகளாகச் சொல்லப் பட்டுள்ளன.' [?]

என்று பகவச்சக்திகளானபடியால் கார்யபதார்த்தங்களுக்கு ஆதாரங்களாகப் பரமபதத்தில் இருப்பவைகள், ஆத்யாத்மிக – ஆதிதைவிக – ஆதிபௌதிக ஸமூஹத்துக்குக் காரணங்கள். முக்தர்கள் முதலியவர்களின் ப்ராணன்களுக்கு ஆத்யாத்மிகங்கள் என்று பெயர், இந்த்ரியங்களுக்கு ஆதிதைவிகங்கள் என்று பெயர், ஶரீராதிகளுக்கு ஆதிபௌதிகங்கள் என்று பெயர். அவற்றுக்குக் காரணங்களாகச் சொல்லப்பட்டுள்ளன இந்த ஶக்திகள்.

"पञ्चतन्मात्रशब्देन कीर्तिताः वेदवादिभिः" (?)

इति शान्तत्व-घोरत्वादिगुण-धर्मरहितत्वात् तन्मात्रशब्देन अभिहिताः केवलसत्त्वगुणाश्रयभूताः परमपदद्रव्य-विशेषाः। तस्मात् –

"न भूतसङ्घसंस्थानो देहोऽस्य परमात्मनः", (भारते)

"पञ्चशक्तिमयो देवः" (?)

इति अप्राकृतत्वं उक्तलक्षणपञ्चोपनिषन्मयत्वं च अस्य संप्रतिपन्नम्।

अयं निरवधिकतेजोरूपश्च। [1]नित्यमुक्तभगवद्-विग्रहयोः एकजातीयद्रव्यमयत्वेऽपि एकजातीय-द्रव्यात्मकखद्योतदिवाकरयोः तेजोविशेषस्य यावद्वैषम्यं, तावदस्ति। नित्यमुक्तविग्रहास्तु सावधिकतेजोरूपाः। भगवद्विग्रहस्तु निरवधिकतेजोरूपः।[1] भगवद्विग्रहस्यैव

"नारायण परोज्योतिः[2]" (तै.नारा.)

इति पर[3]ज्योतिःशब्दवाच्यत्वात्।

अयं सौकुमार्यादि कल्याणगुणनिधिश्च।

"भारूपः सर्वगन्धः सर्वरसः", (छा. 3-14-2)

"तस्य यथा कप्यासं [4]पुण्डरीकमेवमक्षिणी[4]", (छा. 1-6-6)

1. G2 omits नित्यमुक्त.....तेजोरूपः
2. G1, G2 परोज्याति:
3. G1 omits पर
4. T1 G2 omit पुण्डरीकमेवमक्षिणी



பஞ்சதந்மாத்ரஶப்தத்தால் சொல்லப்பட்டுள்ளன வேதவாதிகளால்' [?]

என்று ஶாந்தத்வ – கோரத்வாதி குணங்களாகிற தர்மங்களற்ற படியால் தந்மாத்ரஶப்தத்தால் சொல்லப் பட்டுள்ளவைகளாய் கேவலஸத்வ குணத்துக்கு ஆஶ்ரய பூதங்களாயுள்ள பரமபத த்ரவ்ய விஶேஷங்கள் இந்த பஞ்சோபநிஷத்துக்கள். எனவே,

'ப்ருதிவ்யாதி பஞ்சபூதங்களாலான உருவமுடைய தேஹம் இந்தப் பரமாத்மாவுக்கு இல்லை' [பாரதம்]

'பஞ்சஶக்திமயன் தேவன்' [?]

என்று அப்ராக்ருதத்வமும், கீழே சொல்லப்பட்ட வடிவிலுள்ள பஞ்சோபநிஷந்மயத்வமும் இந்தத் திருமேனிக்கு [பரமாத்மாவின் திவ்ய மங்களவிக்ரஹத்துக்கு]ப் பொருந்தும்.

இந்த விக்ரஹமானது எல்லையற்ற தேஜோ ரூபமாகவும் இருக்கிறது. நித்யர்கள், முக்தர்கள், பகவான் ஆகியவர் களுடைய விக்ரஹங்கள் [திருமேனிகள்] ஏகஜாதீய த்ரவ்யங்களானாலுங் கூட [பகவானுடைய திருமேனியைப் போலவே நித்யர்கள் முக்தர்கள் ஆகியோருடைய திருமேனி களும் பஞ்சோபநிஷந்மயமானாலும் கூட] ஏகஜாதீய த்ரவ்யங்களான மின்மினிப் பூச்சி, ஸூர்யன் ஆகியவற்றிற் கிடையே தேஜஸ்ஸுகளுக்கு எவ்வளவு வேற்றுமையோ [மின்மினிப் பூச்சி, சூரியன் ஆகிய இரண்டுமே ஒளி வடிவானதாய் இருந்தாலும், மின்மினிப்பூச்சியின் ஒளியைப் போல் பலகோடி மடங்கு ஒளியுடன் சூரியன் திகழ்வதுபோல] அவ்வளவு வேற்றுமை நித்யமுக்தர்களுடைய விக்ரஹங் களுக்கும் பகவத் விக்ரஹத்துக்கும் உள்ளது. நித்ய முக்தர்களின் விக்ரஹங்களோவென்றால் அளவுபட்ட தேஜோரூபங்கள். பகவத்விக்ரஹமோவென்றால் அளவற்ற தேஜோரூபமானது. பகவத்விக்ரஹமே

"நாராயணன் பரஜ்யோதி:" [தை. நா.]

என்று, பரஜ்யோதி என்ற சொல்லால் கூறப்பட்டுள்ளது.

பகவானுடைய இந்த விக்ரஹம் மென்மை முதலிய கல்யாண குணங்களுக்கு இருப்பிடமாகவும் உள்ளது.

'ஒளியுடைய திருமேனி எல்லா நறுமணங்களையும் நல்ல ரஸங்களையும் உடையது' [சாந். 3–14–2]

'அவனுக்கு ஸூர்யனால் அப்பொழுதலர்த்தப்பட்ட தாமரை போன்ற இருதிருக்கண்கள் உள' [சாந். 1–6–6]

"विद्युल्लेखेव भास्वरा[1]", (तै.नारा. - 100)

"युवाऽकुमारः" (?)

इत्यादि श्रवणात्[2]। सौकुमार्यं नाम पुष्पहासाख्यं अत्यन्तमार्दवम्। तच्च[3] अमृतमय कमलाललितावलोकन-कलापैरपि तान्तशीलत्वम्। आदिशब्देन लावण्य-सौन्दर्य-सौगन्ध्य-यौवनादयोऽपि अनुसन्धेयाः। तत्र लावण्यं नाम आपादचूडं अनारतं प्रवहन्ती निरवधिक-कान्तिसागरकल्लोलमालिकावत्[4] समुल्लसन्ती समुदाय सुषमा। सौन्दर्यं नाम सर्वदा अनुभूयमानेऽपि एकैकावयवे सन्ततं अपूर्वं आश्चर्यभोगपरम्पराजननशक्तेः निरतिशयकान्तिसागरे सदापश्यन्नित्यमुक्त-दृष्टिनिमज्जन-क्षमा दिव्यावयवसुषमा। सौगन्ध्यं नाम एकैकगन्ध-विशेषयुक्त घनसारकस्तूरिकाचन्दन कुसुममालिका प्रभृतिगन्धवत् समस्त[5]वस्तुव्रात[6]-समस्त[7]सौरभ-निदानभूत-निरवधिक-दिव्य-सौरभ्यम्। यौवनं तु सर्वाङ्गसौन्दर्यसृग्[8]विकासवन् माधुर्यामृतसार चुलुकवदवस्थितम् वयोविशेषानुगतं चर्म[9]चाकचक्यम्। एवं अन्येऽपि विग्रहगुणाः अनुसन्धेयाः।

---

1. T1 G2 omt भास्वरा
2. G1 वचनात्
3. T1 G2 omit तच्च
4. T1 कलिकावत्
5. T1 G2 omit समस्त
6. G2 omits व्रात
7. G1 omits समस्त
8. T1 स्रग्
9. G1 omits चर्म



'மின்னலின் கீற்றுப் போன்று ஒளியுடைய திருமேனி'
[தை.நா.100]

'கௌமாரப் பருவம் மாறி யௌவனப் பருவம் தலையெடுத்த நிலையிலுள்ளவன்' [?]

முதலியவைகள் ஓதப்படுவதால். ஸௌகுமார்யம் என்றால் அப்பொழுது மலரும் புஷ்பத்தின் இதழைப் போன்ற மிகுந்த மென்மை ஆகும். அதுவும் அம்ருதமயையான பெரிய பிராட்டியாரின் மென்மையான திருக்கண்நோக்குகளாலும் கூடக் கன்றும் [கசங்கும்] தன்மையாகும். ஆதிஶப்தத்தால் லாவண்யம், ஸௌந்தர்யம், ஸௌகந்த்யம், யௌவநம், முதலிய குணங்களும் திருமேனியில் உள்ளன என்று தெரிந்து கொள்ளப்பட வேணும். அவற்றில் லாவண்யமாவது – திருவடியிலிருந்து திருமுடி முடிய நிரந்தரமாக ப்ரவஹிக்கிற எல்லையற்ற ஒளிக்கடலின் பெரிய அலையின் மாலையைப் போல் நன்கு விளங்குகிற ஸமுதாய [மொத்தமான] அழகு. ஸௌந்தர்யமாவது – எப்பொழுதும் அனுபவிக்கப்பட்டாலுங் கூட ஒவ்வொரு அவயவத்திலும் எப்பொழுதும் அபூர்வமாய் ஆஶ்சர்யமாயுள்ள போகபரம்பரையையுண்டாக்கும் ஶக்தி படைத்த எல்லையற்ற ஒளிக்கடலான திருமேனியில் உள்ளதாய், எப்பொழுதும் பார்த்துக் கொண்டிருக்கிற நித்யமுக்தர்களின் பார்வையில் நனைவதற்கு ஸமர்த்தமான திவ்ய அவயவங்களின் அழகு. ஸௌகந்த்யமாவது – ஒவ்வொரு கந்தவிஶேஷத்துடன் கூடின ஸாரமே [உத்க்ருஷ்டாம்ஶமே] நிறைந்த கஸ்தூரிகா, சந்தநம், புஷ்பமாலை முதலியவற்றின் மணத்தைப் போல் எல்லா வஸ்துக்களின் எல்லா நறுமணங்களுக்கும் காரணமான எல்லையற்ற திவ்யமான [போக்யமான] நறுமணம். யௌவநமோவென்றால் – ஸர்வாங்கஸௌந்தர்யத்தின் பிறப்பிடத்தின் விகாஸத்தைப் போலும், மாதுர்யமாகிற [இனிமையாகிற] அம்ருத ஸாரத்தினுடைய [அம்ருதத்தின் உத்க்ருஷ்டாம்ஶத்தினுடைய] குழம்பைப் போலிருப்பதாய் வயோவிஶேஷத்தை [சிறுவயதை]ப் பின்பற்றிக் கிடக்கிற சர்மசாகசக்யம் [தோலின் ஒளி]. இப்படியே மற்ற திருமேனிகுணங்களும் அனுஸந்திக்கப்பட வேணும் [நினைக்கப்படவேணும்].

इत्यादिवचनाच्च। तस्मात् सर्वेश्वरस्य सत्यसङ्कल्पत्वादि[1] गुणगणाकरस्य परमकारुणिकस्य आश्रितवात्सल्यैकजलधेः श्रियःपतेः अवतरणकारणं केवलं इच्छैव इति निरणायि। अवतरणफलं तु साधुपरित्राणादित्रयं इति–

"परित्राणाय साधूनां विनाशाय च दुष्कृताम्।
धर्मसंस्थपनार्थाय सम्भवामि युगे युगे"
(गीता 4-8)

इति गीतत्वात्।*

अन्तर्यामित्वं नाम विभूतिद्वयस्थित-चेतनाचेतन-निवहसत्ताहेतुभूता तत्तदुचितनियमनोपयोगिनी स्वरूपव्याप्तिः। भगवतः तस्यापि अन्याः परत्वव्यूहाद्यवस्था गुणभेदेन विग्रह[2]भेदेन च उभयविभूतिनिर्वहणकारणम्। तेषा[3]मन्तर्यामितया[4] स्वरूपमुखात्वात्[5] उभयविभूति निर्वहणकारणं भवति।

*"एष सर्वभूतान्तरात्मा", (सुबालो. - 7)
"तेनेदं पूर्णं पुरुषेण", (?)
"तत्सर्वं व्याप्य", (तै.नारा. ?)
"पृथिवीच अन्तरिक्षं च दिशश्च पुरुषोत्तमः।
विचेष्टयति भूतानि क्रीडन्निव जनार्दनः॥

---

1. T1 G1 omit त्वदि
2. T1 G2 omit गुण
3. G2 एषा
4. T2 adds here अन्तर्यामित्वावस्थाः
5. G1 स्वरूपमुखाः

* G1 omits from एष सर्व..... upto..इति वचनात् on next page.



இத்யாதி வசநமிருப்பதாலும் [உலகை நிலை நிறுத்துவதற்காக அவன் கொள்ளும் அவதாரங்கள் அவனுடைய இச்சையினாலேயே ஏற்படுகின்றன.] எனவே ஸர்வேஶ்வரனாய், ஸத்யஸங்கல்பம் முதலிய குணங்களுக்கு இருப்பிடமானவனாய், ஆஶ்ரிதவாத்ஸல்யத்துக்குக் கடலாய், ஶ்ரிய:பதியாய் உள்ளவனுடைய அவதாரகாரணமானது இச்சைதான் என்று நிர்ணயிக்கப்படுகிறது. அவதாரத்தின் பலமோவென்றால் நல்லோரைக் காப்பது முதலிய மூன்றாகும்.

'நல்லோர்களைக் காப்பதற்காகவும், தீயவர்களை அழிப்பதற்காகவும், தர்மத்தை நிலைநாட்டுவதற்காகவும் எந்த யுகத்தில் வேண்டுமானாலும் பிறக்கிறேன்' [கீதை4.8] என்று பகவானால் அருளபட்டுள்ளது.

அந்தர்யாமித்வமாவது – நித்யவிபூதி, லீலாவிபூதி என்ற இரண்டு விபூதிகளிலுமிருக்கிற சேதநாசேதநஸமூஹத்தின் ஸத்தைக்கு [இருப்புக்கு]க் காரணமாயுள்ள அவ்வவற்றுக்கு உசிதமான நியமநத்துக்குப் பயன்படும் ஸ்வரூபவ்யாப்தி ஆகும். பரத்வநிலை, வ்யூஹநிலை முதலியவற்றைக் காட்டிலும் அந்தர்யாமித்வநிலையானது குணத்தாலும் திருமேனிாலும் வேறுபட்டதாக இருந்துகொண்டு உபய விபூதிகளையும் நிர்வஹிப்பதற்குக் காரணமாகிறது. சேதநாசேதநங்களுக்கு அந்தர்யாமியாக இருப்பதால் அந்தர்யாமித்வ நிலையானது சேதநாசேதநங்களின் மூலமாகவே உபய விபூதியையும் நிர்வஹிக்கிறது.

'அவன் ஸர்வபூதாந்தராத்மா' [ஸுபால. 7]
'அந்தப் புருஷனால் இவை யாவும் நிறைந்துள்ளன' [?]
'அவை யாவற்றையும் வ்யாபித்துள்ளான் நாராயணன்'
[தை.நா]

'ப்ருதிவீ, அந்தரிக்ஷம் [ஆகாஶம்] திக்குகள், பூதங்கள் ஆகிய யாவற்றையும் புருஷோத்தமனான ஜநார்தனன் விளையாடுபவனைப் போல இயக்குகிறான்.

[1]तस्मादस्य योगिध्येयत्वं सकलजनमोहनत्वं समस्तेतरभोगवैराग्यजनकत्वं, नित्यमुक्तानुभाव्यत्वं, सकलजनतापहरत्वं च युज्यते।

"ध्येयस्सदा", (बृहत्पाराशरीयम्)
"पुंसां दृष्टिचित्तापहारिणं", (रामा. अयो. 3-29)
"साक्षान्मन्मथमन्मथः", (भागवते 10-32-2)
"चिन्तयन्ती जगत्सूतिं", (वि.पु. 5-13-22)
"त्वत्पादपद्मप्रवणात्मवृत्तेः", (हस्तिगिरिमाहात्म्य-8)
"परमात्मनि यो रक्तः", (बार्हस्पत्यस्मृतिः)
"वैकुण्ठे तु परे लोके", (?)
"वासुदेवतरुच्छाया" (परमसंहिता)

इत्यादिषु तथा उदितत्वात्॥[1] अनन्तावतारकन्दभूतश्च अयम्[2]।

"वासुदेवात् सङ्कर्षणः[3]" (?)

इत्यादि[4]वचनात्। [5]स च सर्वरक्षकः। नित्यमुक्तान् सदा दर्शनविषयः सर्वकैङ्कर्यविषयत्वेन रक्षति। मुमुक्षून् शुभाश्रयत्वेन भोग्यत्वेन च रक्षति।[5] बद्धान् धर्म-प्रवर्तनेन रक्षति[6]। नेत्र-पुत्राद्यर्थसेवाविषयत्वेन चक्षुर्विषयः सन् रक्षति।

1. G1 omits तस्मादस्य...... उदितत्वात्
2. G1, G2 omits अयं
3. G1 adds नाम जीवो जायते
4. G1 इति
5. T1 omits स च......रक्षति
6. G2 omits रक्षति



எனவே பகவானுடைய இந்தத் திருமேனிக்கு யோகிகளால் த்யாநிக்கப்படும் தன்மை, ஸகலஜநங்களையும் மயக்கும் தன்மை, மற்ற எல்லா போகங்களிலும் வைராக்யத்தை உண்டாக்கும் தன்மை, நித்ய முக்தர்களால் அனுபவிக்கப்படும் தன்மை, எல்லா ஜநங்களின் தாபங்களையும் நீக்கும் தன்மை ஆகிய குணங்கள் பொருந்துகின்றன.

'எப்பொழுதும் த்யாநிக்கத் தகுந்தவன்' [ப்ருஹத்பாரா.]
'புருஷர்களின் கண்ணையும் நெஞ்சையும் கவர்பவனை' [ரா.அ.3–29]
'ஸாக்ஷாந் மந்மதனுக்கும் மந்மதன்' [=மந்மதனை விட மிக அழகானவன் என்று பொருள்] [பாகவதம் 10–32–2]
'ஜகத்காரணனான பகவானைச் சிந்தித்துக் கொண்டே ஒரு இடைச்சி முக்தி அடைந்தாள்' [வி.பு. 5–13–22]
'தேவரீருடைய திருவடித் தாமரைகளில் ஈடுபட்ட மனோவ்ருத்தியையுடையவனுக்கு மற்ற போகங்கள் யாவும் ப்ரதிகூலங்களாகின்றன' [ப்ரஹ்மாண்ட புராணம் ஹஸ்திகிரி மாஹாத்ம்யம் அத்யாயம்–8]
'பரமாத்மாவிடம் எவன் ஈடுபட்டவனோ அவன் மற்ற இன்பங்களில் விரக்தியடைகிறான்' [பார்ஹஸ். ஸ்ம்ருதி]
'வைகுண்டமாகிற மேலான லோகத்தில்' [லிங்கபுரா.]
'வாஸுதேவனாகிற மரநிழல்" [பரமஸம்ஹிதை]

இத்யாதிகளில் அப்படிச் சொல்லப்பட்டிருக்கிறது. முடிவற்ற அவதாரங்களுக்குக் கிழங்காயிருப்பவன்.

'வாஸுதேவனிடமிருந்து ஜீவனுக்கு அபிமாநி தேவதையான ஸங்கர்ஷணன் பிறக்கிறான்' [பாஞ்சராத்ரம்]

இத்யாதி வசநங்களுள்ளன. அவன் எல்லோரையும் காப்பவனாகவுமிருக்கிறான். நித்யமுக்தர்களுக்கு எப்போதும் தர்ஶநவிஷயமாக [பார்வைக்கு இலக்காக] இருந்து கொண்டு, எல்லாக் கைங்கர்யங்களையும் அவர்களிடம் கொள்பவனாய் அவர்களை ரக்ஷிக்கிறான். முமுக்ஷுக்களுக்கு ஶுபாஶ்ரயமாகவும் [இனிய பற்றுக் கோடாகவும்] போக்யமாகவும் இருந்து கொண்டு ரக்ஷிக்கிறான். பத்தர்களை தர்மத்தில் ஈடுபடுத்துவதன் மூலம் ரக்ஷிக்கிறான். கண் முதலிய இந்த்ரியங்கள், புத்ரன் முதலிய பரிகரங்கள் [ஆட்பட்டவர் கள்] ஆகியவர்களின் ஸேவைக்கு விஷயபூதனாகக் கண்ணுக்கு இலக்கானவனாகி ரக்ஷிக்கிறான்.

समस्तजगदाधारश्च।

"इत्थं पुमान् प्रधानं बुद्ध्यहङ्कारमेव च।
भूतानि च हृषीकेशे मनस्सर्वेन्द्रियाणि च॥
विद्याविद्ये च मैत्रेय सर्वमेतत्समाश्रितम्।
अस्त्रभूषणसंस्थानस्वरूपं रूपवर्जित:॥
बिभर्ति मायारूपोऽसौ श्रेयसे प्राणिनां हरि:[1]॥",

((वि.पु. 1-22-75, 76)

इति।

आधेयं सर्वं[2] परिगणय्य अस्त्रभूषणादिरूपेण धारणवचनात् अस्त्रभूषणभूषितश्च।

"स्रग्वस्त्राभरणैर्युक्तं स्वानुरूपैरनूपमै:।
चिन्मयै: स्वप्रकाशैश्च अन्योन्यरुचिरञ्जितै:॥"

(पौष्करे)

इत्यभिधानात्। तस्मात् भगवतो दिव्य[3]मङ्गल[3]विग्रहस्य स्वरूपात् गुणगणादपि अभिमतत्वं, तदनुरूपत्वं[4], नित्यत्वम्, शुद्धसत्वात्मकत्वं, भगवत्स्वरूपगुण-प्रकाशकत्वं, अप्राकृतत्वं, पञ्चोपनिषन्मयत्वं, निरवधिक-तेजोरूपत्वं, सौकुमार्यादिगुणाश्रयत्वं, [5]योगिध्येयत्वं, सकलजनमोहनत्वं, समस्तेतरभोगवैराग्यजनकत्वं, नित्यमुक्तानुभाव्यत्वं, सकलजनतापहरत्वं[5], अनन्तावतार–

1. T1 ईश:
2. G2 omits सर्वं
3. T1 omts मङ्गल
4. G1 omits तदनुरूपत्वं
5. G1 omits योगिध्येयत्वं.......... तापहरत्वं



எல்லா உலகங்களுக்கும் ஆதாரமாகவும் பகவானுடைய திவ்யமங்கள விக்ரஹம் [திருமேனி] உள்ளது.

"இப்படி புருஷன், ப்ரதாநம், புத்தி, அஹங்காரம் பூதங்கள் யாவும் ஹ்ருஷீகேஶன், மனஸ்ஸு, இந்த்ரியங்கள், வித்யை, அவித்யை ஆகிய யாவும் அவனை ஆஶ்ரயித்து உள்ளன. அஸ்த்ரங்கள் பூஷணங்களின் ஸம்ஸ்தாநமான [=ஆதாரமான] ஸ்வரூபமானது கர்மநிமித்தமான ப்ராக்ருதரூபமற்றது. அநந்தாஶ்சர்யமான அமைப்புடையது. அப்படிப்பட்ட அந்தத் திருமேனியை ப்ராணிகளின் நன்மைக்காக ஹரியானவர் தரித்துக் கொண்டிருக்கிறார்."

[வி.பு. 1–22–75,76]

என்று கூறப்பட்டுள்ளது.

தாங்கப்படுமவைகளான யாவற்றையும் குறிப்பிட்டு அஸ்த்ரபூஷணாதிரூபமாக அவன் தரிக்கிறான் என்று வசநமிருப்பதால் அஸ்த்ரபூஷணங்களால் அவனுடைய திருமேனி அலங்கரிக்கப் பட்டதாயுமுள்ளது.

"ஸ்வாநுரூபங்களாய் உபமாநரஹிதங்களாய் ஜ்ஞாந ஸ்வரூபங்களானபடியால் ஸ்வப்ரகாஶங்களாய் ஒன்றுக்கொன்று அழகூட்டுபவைகளாயுள்ள மாலை, வஸ்த்ரம், ஆபரணம் ஆகியவற்றுடன் கூடியது திருமேனி"

[பௌஷ்கரம்]

என்று கூறப்பட்டுள்ளது. எனவே பகவானுடைய திவ்யமங்கள விக்ரஹத்துக்கு ஸ்வரூபத்தையும் குணகணங்களையும் காட்டிலும் விரும்பப்படும் தன்மை, அவற்றுக்கு ஏற்றதாக இருக்கும் தன்மை, நித்யத்வம், ஶுத்தஸத்வாத்மாக இருத்தல், பகவத்ஸ்வரூபகுண ப்ரகாஶகத்வம், அப்ராக்ருதத்வம், பஞ்சோபநிஷந்மயத்வம், எல்லையற்ற ஒளியுடைமை, மென்மை முதலிய குணங்களோடு கூடியிருக்கும் தன்மை, யோகிகளால் தியானிக்கப்படும் தன்மை, எல்லோரையும் மயக்கும் தன்மை, பிறவிஷயங்கள் அனைத்திலும் ஆசை அறுக்கும் தன்மை, நித்யமுக்தர்களால் அனுபவிக்கப்படும் தன்மை, எல்லோருடையவும் தாபங்களைப் போக்கும் தன்மை, அனைத்து அவதாரங்களுக்கும் மூலகிழங்காய் இருக்கும் தன்மை,

कन्दत्वं, [1]सर्वरक्षकत्वं, समस्तजगदाधारत्वं[1] अस्त्रभूषण-भूषितत्वं च अनुसमधायि[2]।

इत्थं उक्तलक्षणः सर्वेश्वरः पर-व्यूह-विभव-अन्तर्यामि-अर्चावतार-रूपेण पञ्चधा अवतिष्ठते। परत्वं नाम अकालकाल्ये परमपदे नित्यमुक्तभोग्यतया अवस्थानम्। व्यूहो नाम सृष्टिस्थितिसंहारार्थं संसारि-संरक्षणार्थं उपासकानुग्रहार्थं च सङ्कर्षण-प्रद्युम्न-अनिरुद्धरूपेण अवस्थानम्। *परत्वावस्थायां तु सम्पूर्णषड्गुणः। तेषु –

"वासुदेवो(ऽसि पूर्णः?) जगत्पतिः" (?)

इति ज्ञानादिगुणषट्कपूर्तिः उच्यते। तत्र सर्वदा नित्यमुक्तभोगप्रदानमेव प्रयोजनम्।

"भक्तैर्भागवतैस्सह" (लैङ्गपुराणे ??)

"सदा पश्यन्ति" (पुरुषसुक्तम् ???)

इति[3] वचनात्। व्यूहविग्रहेषु ज्ञानादिगुणषट्के च द्वौ गुणौ अभिव्यञ्जयन् आस्ते। तत्र सङ्कर्षणविग्रहे

"तत्र ज्ञानबलद्वन्द्वात् रूपं साङ्कर्षणं हरेः" (विष्वक्सेनसंहिता)

इत्युक्तक्रमेण ज्ञानबलाख्यं गुणद्वयं प्रकाशयन् जीवतत्त्वं अधिष्ठाय तत् प्रकृतेः विवेचयन्, प्रद्युम्नावस्थाहेतुभूतः

---

1. G1 omits सर्वरक्षकत्वं.......आधारतवं
*. G1 omits from परत्वावस्थायां.... ...ऽक्तं on the next page.
2. T1 अनुसन्धायि
3. G2 इत्यादि



எல்லோரையும் காக்கும் தன்மை, எல்லாவுலகங்களுக்கும் ஆதாரமாக இருக்கும் தன்மை, அஸ்த்ரங்களாலும், ஆபரணங்களாலும் அலங்கரிக்கப்பட்ட தன்மை ஆகியவை அறியப்படுகின்றன.

இப்படிச் சொல்லப்பட்ட வடிவிலுள்ள ஸர்வேஶ்வரன் பர–வ்யூஹ–விபவ–அந்தர்யாமி அர்ச்சாவதார ரூபத்தால் ஐந்து விதமாக இருக்கிறான். பரத்வமாவது – காலம் ஆட்சி செலுத்த முடியாத பரமபதத்தில் நித்யமுக்தர்களுக்கு போக்யனாக இருத்தல். வ்யூஹமாவது–ஸ்ருஷ்டிஸ்திதிஸம்ஹாரங்களுக்காகவும், ஸம்ஸாரிகளைக் காப்பதற்காகவும், உபாஸகர்களை அநுக்ரஹிப்பதற்காகவும் ஸங்கர்ஷண–ப்ரத்யும்ந– அநிருத்த ரூபத்துடன் இருத்தல். பரத்வ நிலையிலோ என்றால் ஸம்பூர்ணமாக ஆறு குணத்தையுமுடையவனாகவுள்ளான். அவற்றில் [பரத்வாதிகள் ஐந்திலும்]

'வாஸுதேவன் ஜகத்பதி' [?]

என்று பரவாஸுதேவ னிடத்தில் ஜ்ஞாநம் முதலிய ஆறு குணங்களும் நிறைந்துள்ளது சொல்லப்படுகிறது. அங்கே [பரத்வ நிலையில்] எப்பொழுதும் நித்யமுக்தர்களுக்கு போகத்தைக் கொடுப்பதே ப்ரயோஜனமாகும்.

'அனுபவபரர்களான பக்தர்களுடனும் கைங்கர்ய பரர்களான பாகவதர்களுடனும்' [லிங்கபுராணம்?]

"எப்பொழுதும் நித்யஸூரிகள் பகவானைப் பார்த்துக் கொண்டிருக்கிறார்கள்" [புருஷஸூக்தம்]

என்று வசநங்களிருக்கின்றன. வ்யூஹவிக்ரஹங்களில் ஞானம் முதலிய ஆறு குணங்களில் இரண்டிரண்டு குணங்களை வெளிப்படுத்திக் கொண்டு பகவான் இருக்கிறான். அவற்றில் ஸங்கர்ஷண விக்ரஹத்தில்–

'அந்த ஆறு குணங்களில் ஜ்ஞாநம், பலம் என்ற இரண்டு குணங்களுடன் ஹரியின் ஸாங்கர்ஷணரூபம் உள்ளது.' [விஷ்வக்ஸேநஸம்ஹிதை]

என்று சொல்லப்பட்ட க்ரமத்தில் ஜ்ஞாநம், பலம் என்ற இரண்டு குணங்களை ப்ரகாஶப்படுத்திக் கொண்டு ஜீவதத்த்வத்தை அதிஷ்டித்துக் கொண்டு [இயக்கிக் கொண்டு] அதை ப்ரக்ருதியிலிருந்து வேறுபடுத்தி, ப்ரத்நயும்ந நிலைக்குக்

शास्त्रप्रवर्तनं जगत्संहारञ्च कर्तुमास्ते। प्रद्युम्नविग्रहे तु–

"ऐश्वर्यवीर्यसम्भेदात् रूपं प्राद्युम्नमुच्यते।"

(विष्वक्सेनसंहिता)

इति ऐश्वर्यवीर्याख्यं गुणद्वयं प्रकाशयन् मनस्तत्त्वं अधिष्ठाय, धर्मोपदेशं जगत्सृष्टिं च कर्तुमास्ते। अनिरुद्धविग्रहे तु –

"शक्तितेजस्समुत्कर्षात् आनिरुद्धतनुर्हरेः"

(विष्वक्सेनसंहिता)

इति शक्तितेजोरूपगुणद्वयं[1] प्रकाशयन् जगद्रक्षणं तत्त्वज्ञानप्रदानं च कर्तुमास्ते। तेषु[2]

"तत्र तत्र अवशिष्टं यत् गुणानां द्वियुगं[3] मुने।
अनुवृत्तिं भजत्येव तत्र तत्र यथातथम्"

(विष्वक्सेनसंहिता)

इति उक्तनयेन अवशिष्टगुण चतुष्टयस्यानुवृत्ति सद्भावेपि कार्यमुखतः प्रत्येकं गुणद्वयप्रकाशनात्[4] गुणद्वयप्रकाशकत्वं उक्तम्।*

विभवः तावत् स्व[5]विभूतिषु तत्सजातीयत्वेन[6] आविर्भावः[7]। स च[8] गौणमुख्यभेदेन परिच्छेद्यः। **तत्र मुख्यप्रादुर्भावास्तु अभिमतमोक्षप्रदत्वादि

1. G2 गुणद्वन्द्वं
2. G2 व्यूहविग्रहेषु
3. G1 अयुगं
4. T1 G1 omit गुणद्वयप्रकाशनात्
5. T1 G2 omit स्व
6. G1 स्वसजातीयत्वेन
7. G! adds कथितः
8. G1, G2 अपि

*. G1 omits upto this

**. G1 omits from तत्र........ upto इति on the next but one page.



காரணமான ஶாஸ்த்ரங்களை வெளிப்படுத்துதல் உலகத்தை அழித்தல் ஆகியவற்றைச் செய்வதற்காக ஸங்கர்ஷண ரூபத்துடன் பகவான் இருக்கிறான். ப்ரத்யும்ந விக்ரஹத்திலோ என்றால்,

'ஐஶ்வர்ய வீர்யங்களின் சேர்க்கையையுடையது ப்ரத்யும்நரூபம் என்று சொல்லப்படுகிறது'

[விஷ்வக்ஸேநஸம்ஹிதை]

என்று ஐஶ்வர்யம் வீர்யம் என்ற இரண்டு குணங்களை ப்ரகாஶப்படுத்திக் கொண்டு மநஸ்தத்த்வத்தை அதிஷ்டித்துக் கொண்டு [இயக்கிக் கொண்டு] தர்மோபதேஶத்தையும் ஜகத் ஸ்ருஷ்டியையும் செய்வதற்காக இருக்கிறான். அநிருத்த விக்ரஹத்திலோ வென்றால்,

'ஶக்தி தேஜஸ் என்ற இரண்டு குணங்களின் ஸமுத்கர்ஷத்தால் [மிகுதியால்] அநிருத்தன் என்ற ரூபம் வருகிறது ஹரிக்கு.' [விஷ்வக்ஸேநஸம்ஹிதை]

என்கிறபடியே ஶக்தி தேஜஸ்ஸுக்களாகிற இரண்டு குணங்களையும் ப்ரகாஶப்படுத்திக் கொண்டு ஜகத் ரக்ஷணத்தையும் தத்த்வஜ்ஞாநப்ரதாநத்தையும் செய்வதற்காக இருக்கிறான் [அநிருத்தரூபத்தில்]. அவற்றில் [இந்த வ்யூஹரூபங்களில்]–

'ஒவ்வொரு வ்யூஹரூபத்திலும் மீதமுள்ள நாலு குணங்களும் தொடரவே செய்கின்றன. அந்தந்த வ்யூஹங்களில் இரண்டிரண்டு குணங்கள் வெளிப் படுகின்றன.' [விஷ்வக்ஸேநஸம்ஹிதை]

என்று சொல்லப்பட்ட ந்யாயத்தால் மீதமுள்ள நாலு குணங்களுக்கும் தொடர்ச்சியிருந்தாலுங்கூட கார்யத்தை முன்னிட்டு இரண்டிரண்டு குணங்களை மட்டும் அந்தந்த வ்யூஹரூபங்கள் ப்ரகாஶப்படுத்துவதால் இரண்டு குணங்களின் ப்ரகாஶகத்வம் சொல்லப்பட்டது.

விபவம் என்றால் தன்னுடைய விபூதிகளில் அவற்றுக்குச் சமமாகப் பிறத்தல். அந்த ஆவிர்பாவங்களும் கௌணம், முக்யம் என்று பிரிக்கப்படுகின்றன. அவற்றில் முக்யாவதாரங்களோ வெனறால் ஜீவாத்மாக்களுக்கு மோக்ஷமளித்தல் முதலான

स्वभावा:। दीपोत्पन्नप्रदीपा इव परमव्योम-विग्रह-निर्विशेषा देवतिर्यङ्[1]नर[1]स्थावररूप[2] समान सन्निवेशतया-

"समस्त शक्तिरूपाणि [3]तत्करोति जनेश्वर।
देवतिर्यङ्मनुष्याख्या चेष्टावन्ति स्वलीलया॥"
(वि.पु. 6-7-71)

इति उक्ताकारेण भगवता प्रकाशिता:[4] जगदुपकृतये। त एव मुमुक्षुभि: उपास्या:।

"प्रादुर्भावास्तु मुख्या: ये मदंशत्वाद्विशेषत:।
अजहत्स्वस्वभावा हि दिव्याप्राकृतविग्रहा:॥
[5]दीपा: दीपादिवो[5]त्पन्ना: जगतो रक्षणाय ते।
अर्च्या एव हि सेनेश संसृत्युत्तरणाय वा॥"
(विष्वक्सेनसंहिता)

इति। विधि-शिव-अर्जुन-बादरायण-दिनकर-परशुराम-ककुत्स्थ-आत्रेय-कपिल-बुद्धादयो गौणप्रादुर्भावा: सर्वेऽपि अहङ्कारयुक्तजीवाधिष्ठानतया तत्र तत्र अभिमता: मुमुक्षुभि: नोपास्या:।

"ब्रह्मरुद्रार्जुनव्यास सहस्रकरभार्गवा:।
ककुत्स्थात्रेय कपिलबुद्धाद्या: ये सहस्रश:॥
शक्त्यावेशावतारास्तु विष्णो: तत्कालविग्रहा:।
अनुपास्या: मुमुक्षूणां यथेन्द्राद्या हि देवता:॥"(?)

इति वचनात्। तथोक्तं भगवतापि –

---

1. G2 मनुष्य
2. T1 G1 omit रूप
3. T1 G1 omit तत्
4. T1 प्रकारिता:
5. G2 दीपात् दीपा इव



ஸ்வபாவங்களையுடையவைகள். விளக்கிலிருந்து உண்டான தீவட்டி போல் பரமாகாஶத்தில் உள்ள விக்ரஹத்தைப் போன்றே அப்ராக்ருதமானவைகள், தேவன், மனிதன், விலங்கு, தாவரம் ஆகிய உருவங்களுக்கு ஸமாநமான அமைப்புடையவைகள்.

"அரசனே! தேவன், விலங்கு, மனிர்களின் செயல்களை உடையவைகளாய் எல்ல ஶக்திகளையும் உடையவைகளான ரூபங்களையடைகிறான் பகவான்." [வி.பு. 6-7-71]

என்று சொல்லப்பட்டபடி, பகவானால் உலகின் உபகாரத்துக்காக ப்ரகாஶப்படுத்தப் பட்டவைகள். அவைகளே முமுக்ஷுக்களுக்கு உபாஸிக்கத் தகுந்தவைகள்.

"முக்யங்களான அவதாரங்களோவென்றால் விஶேஷமாக என்னுடைய அம்ஶங்களானபடியால் ஸ்வஸ்வபாவங்களை விடாதவைகள். அப்ராக்ருதங் களான விக்ரஹங்களை உடையவைகளானபடியால் பரமபோக்யங்கள்.

தீபத்திலிருந்து உண்டான ப்ரதீபங்களை [தீவட்டிகளை] போன்றவைகள், ஜகத்தின் ரக்ஷணத்துக்காக இருப்பவை. ஸேநேஶனே! ஸம்ஸாரத்திலிருந்து விடுபடுவதற்காக ஆராதிக்கத் தகுந்தவைகள்." [விஷ்வக்ஸேநஸம்ஹிதை]

என்று சொல்லப்பட்டிருக்கிறது. ப்ரஹ்மா, ஶிவன், அர்ஜுநன் பாதராயணர் [வேதவ்யாஸர்], ஸூர்யன், பரஶுராமர், ககுத்ஸ்தன், ஆத்ரேயர், கபிலர், புத்தர் முதலியவர்கள் கௌணாவதாரங்கள். இவை யாவும் அஹங்காரத்துடன் கூடின ஜீவர்களை அதிஷ்டித்தவைகளாக [இயக்குபவை களாக]க் கருதப்படுகிறபடியால் முமுக்ஷுக்களால் உபாஸிக்கத் தகுந்தவைகளல்ல.

'ப்ரஹ்மா, ருத்ரன், கார்த்தவீர்யார்ஜுனன், வ்யாஸர், ஸூர்யன், பார்கவரான பரஶுராமன், ககுத்ஸ்தன், ஆத்ரேயர், கபிலர், புத்தர், முதலிய ஆயிரக்கணக்கான ஶக்த்யாவேஶ அவதாரங்களோவென்றால் விஷ்ணு வினுடைய தத்கால விக்ரஹங்களாகும். இந்த்ராதி தேவதைகள் எப்படி முமுக்ஷுக்களுக்கு உபாஸ்யர்கள் அல்லர்களோ அப்படியே இவைகளும் உபாஸ்யங்கள் அல்ல." [பாஞ்சராத்ரம்?]

என்று வசநமுள்ளது. அது பகவானாலும் கூறப்பட்டுள்ளது.

"अनर्च्यानपि वक्ष्यामि प्रादुर्भावान् यथाक्रमम्।
चतुर्मुखस्तु भगवान् सृष्टिकार्ये नियोजितः।
शङ्कराख्यो महारुद्रः [1]संहारे विनियोजितः[1]।
मोहनाख्यो महा[2]बुद्धो व्यासश्चैव महान् ऋषिः।
वेदानां व्यसने[3] तत्र देवेन विनियोजितः।
अर्जुनो धन्विनां श्रेष्ठो जामदग्न्यो महान् ऋषिः।
वसूनां पावकश्चापि वित्तेशश्च तथैव च[4]।
एवमाद्यास्तु सेनेश प्रादुर्भावैः अधिष्ठिताः।
जीवात्मानः सर्व एते नोपास्याः"

(विष्वक्सेनसंहिता)

इति।** नित्योदितशान्तोदितादि[5]भेदो, जाग्रत्–[6]संज्ञादिकं चातुरात्म्यम्[6] केशवादिमूर्त्यन्तरम्। षट्त्रिंशद्भेदभिन्नः पद्मनाभादिविभवः उपेन्द्र–त्रिविक्रम–दधिभक्त–हयग्रीव–नर–नारायाण–हरि–कृष्ण–मत्स्य–कूर्म–वराहाद्यवतार–विशेषाः तेषां भुजायुधवर्णकृत्यस्थानादिभेदाश्च ग्रन्थ[7]विस्तर[7]भयात् गुह्यतमत्वाच्च न अभ्यधायिषत।

---

1. G1 संहारैपि नियोजितः
2. G2 तथा
3. T1 व्यासेन
4. G1 हि
5. G2 omits आदि
6. T1 संज्ञादिकश्च
7. G1 गौरव
8. G1, G2 इच्छा

*. G1 omits upto this



"ஆராதிக்கத் தகாதவைகளான அவதாரங்களையும் க்ரமப்படி சொல்லுகிறேன். சதுர்முகனான பகவான் ஸ்ருஷ்டிகார்யத்தில் நியமிக்கப்பட்டவன். ஶங்கரன் என்ற பெயருடைய மஹாருத்ரன் ஸம்ஹாரத்தில் நியமிக்கப் பட்டுள்ளான். புத்தி மயக்கத்தை விளைவிப்பவன் மஹா புத்தன். வ்யாஸராகிற மஹானான ரிஷி வேதங்களை வகுப்பதில் தேவனால் நியமிக்கப் பட்டுள்ளார். அர்ஜுனன் வில்லாளிகளில் சிறந்தவன். ஜாமதக்ந்யரான பரஶுராமர் மஹானான ரிஷியாவார் [பராவர தத்த்வங்களை தர்ஶிப்பவராவார்]. வஸுக்களில் பாவகனும் தநத்துக்கு அதிபதியான குபேரனும் கூட இவர்களைப் போலவே சிறப்புற்றவர்கள். இப்படிப்பட்ட ஜீவாத்மாக்களோ என்றால் அவதாரங்களால் [அவர்களிடத்தில் ஆவேஶித்துள்ள பகவானுடைய அம்ஶங்களால்] அதிஷ்டிக்கப்பட்டு உள்ளார்கள் [நியமிக்கப்பட்டுள்ளார்கள்]. இந்த ஜீவாத்மாக்கள் எவருமே உபாஸ்யர்களல்லர்"

[விஷ்வக்ஸேநஸம்ஹிதை]

என்று கூறப்பட்டுள்ளது. நித்யோதித ஶாந்தோதிதாதிபேதம், ஜாக்ரத் ஸம்ஜ்ஞாதிகம், சாதுராத்ம்யம், கேஶவாதி மூர்த்யந்தரம், முப்பத்தாறு வகையான பத்மநாபாதிவிபவம், உபேந்த்ர–த்ரிவிக்ரம–ததிபக்த–ஹயக்ரீவ–நர–நாராயண–ஹரி–க்ருஷ்ண–மத்ஸ்ய–கூர்ம–வராஹாத்யவதார விஶேஷங்கள், அவர்களின் புஜ–ஆயுத–வர்ண–க்ருத்ய[செயல்]– ஸ்தாநாதி பேதங்கள் ஆகியவை விரிவுக்கஞ்சியும், மிகவும் ரஹஸ்யமானவைகளாகையாலும் இங்கே சொல்லப் படவில்லை.

अवताराणां हेतुः केवल भगवदिच्छैव[8]।
*"सर्वावस्थासु वै विष्णोः जननं स्वेच्छयैव तु।
जरकास्त्रच्छलेनैव स्वेच्छया गमनं हरेः।
द्विजशापच्छलेनैवं अवतीर्णोऽपि लीलया॥"

(लैङ्गपुराणम्)

इति लैङ्गादिष्वपि भगवदवतार[1]स्वेच्छत्वाभिधानात्।

"लीलेयं सर्वभूतस्य", (?)

"न अकारणात् कारणाद्वा", (वि.पु. 5-1-501)

"इच्छागृहीताभिमतोरुदेहः", (वि.पु. 6-5-84)

"जगतामुपकाराय न सा कर्मनिमित्तजा"

(?)

इति पराशरोपदेशाच्च। तथापि लोकहितार्थाय सर्वमर्यादास्थापनार्थं च स्वयमपि क्वचित् शापादिकं अप्यनुवर्तते[2]। तथा श्रीरामायणे –

"तपसाऽऽराधितो देवो ह्यब्रवीत् भक्तवत्सलः।
लोकानां सम्प्रियार्थं तं[3] शापन्तं ग्राह्य[4]मुक्तवान्॥"

(रामा.उत्तर. 51-17)

इति। तथा –

"मनसैव जगत्सृष्टिं संहारं च करोति यः"

(वि.पु. 5-22-15)

---

*. G1 omits from सर्वावस्थासु.......upto .....गीतत्वात् on the next page.

1. T1 G1 omits स्य

2. T1 G1 अनुवर्ततयन्

3. G2 च

4. G1 गुह्य



அவதாரங்களுக்கு காரணம் பகவானுடைய விருப்பம் மட்டுமேயாகும்.

'எல்லா அவஸ்தைகளிலும் விஷ்ணுவினுடைய ஜநநம் [அவதாரம்] தன்னுடைய இச்சையாலேயன்றோ ஏற்படுகிறது. ஜரகாஸ்த்ரமாகிற போலிக் காரணத்தால் ஏற்பட்டாலும் தன் இச்சையினாலேயே செல்லுகை ஏற்படுகிறது. [அதாவது நாகாஸ்த்ரமாகிற போலிக் காரணமிருந்தாலும்கூட, ராமனாகிற பகவானுக்குத் தன் இச்சையினாலேயே மயக்கம் ஏற்படுகிறது என்று பொருள்.] ப்ராஹ்மணஶாபமாகிற போலிக் காரணத்தால் அவதரித்தாலும் கூட லீலையினாலேயே [விளையாட்டு ரஸத்துக்காகவே] அவர் அவதரிக்கிறார்.

[லைங்கபுராணம்]

என்று லிங்கபுராணம் முதலியவைகளில் பகவதவதாரமானது பகவானுடைய இச்சையினாலேயே நடைபெறுகிறது என்று சொல்லப்பட்டிருக்கிறபடியாலும்,

"ஸர்வபூதாந்தராத்மாவான அவனுடைய லீலை இந்த அவதாரம்' [?]

'காரணமில்லாமல் அவதாரம் ஏற்படவில்லை லீலை ஆகிற காரணத்தினாலேயே ஏற்படுகிறது' [வி.பு.5–1–501]

'இச்சையால் எடுக்கப்பட்ட அபிமதங்களான பல தேஹங்களையுடையவன்' [வி.பு.6–5–84]

'ஜகத்தின் உபகாரத்துக்காக அவதாரம் ஏற்படுகிறது, அது கர்மத்தால் ஏற்பட்டதன்று' [வி.பு]

என்று பராஶருடைய உபதேஶமிருப்பதாலும் [பகவதவதாரம் லீலையினாலேயே ஏற்படுகிறது என்பது கூறப்பட்டது.]

ஆயினும் உலகத்தின் நன்மைக்காகவும், சாத்திரங்களில் கூறப்பட்ட நியமங்களை நிலைநாட்டுவதற் காகவும் தானுங்கூடச் சிலவிடங்களில் ஶாபங்களின்படி நடக்கிறான். அப்படியே ஶ்ரீராமாயணத்தில் கூறப்பட்டுள்ளது:

"தபஸ்ஸினாலே ஆராதிக்கப் பட்ட பக்த வத்ஸலனான தேவன் லோகங்களின் நன்மைக்காக அந்த ஶாபமானது ஏற்கப்படவேணும் என்று கூறினான்." [ரா. உத்தர. 51–17]

என்று. அப்படியே,

'மனத்தாலேயே [இச்சையினாலேயே] ஜகத்ஸ்ருஷ்டியையும் ஸம்ஹாரத்தையும் எவன் நடத்துகிறானோ'[வி.பு.]

कालचक्रं जगच्चक्रं युगचक्रं च केशवः।
आत्मयोगेन[1] भगवान् परिवर्तयतेऽनिशम्" (?)

इति वचनात्।* उपासकानां हृदयेषु विग्रहसहितत्वेन तेषां शुभाश्रयत्वाय, ध्येयत्वाय, रक्षणाय च अवस्थानमपि भगवतो अन्तर्यामित्वं आहुः।

[2]"तेषां सततयुक्तानां भजतां प्रीतिपूर्वकम्।
ददामि बुद्धियोगं तं" (गीता 10-11)

इत्यादिषु प्रीतिपूर्वकभजनीयत्व-व्यवसायात्मक-बुद्ध्युत्पादन-तद्विरोधितमोनिबर्हणादि-प्रयोजनस्य भगवतः तत्रैव विद्यमानत्वात्।[2] उपासकहृदयकमलवर्तित्वं अन्तर्यामित्वं इति सङ्कोचेन उक्तम्[3]।

अर्चावतारो नाम –

"सुरूपां प्रतिमां विष्णोः प्रसन्नवदनेक्षणाम्।
कृत्वा आत्मनः प्रीतिकरीं सुवर्णरजतादिभिः॥
तामर्चयेत् तां प्रणमेत् तां जपेत्[4] तां विचिन्तयेत्।
विशत्यपास्तदोषस्तु तामेव ब्रह्मरूपिणीम्॥"
(विष्णुधर्मे 103-16, 17)

इति शौनकोक्तप्रकारेण समाश्रितजनापेक्षितद्रव्यं अधिष्ठाय तत्र परमव्योमविग्रहवत् कृतादरः प्रणतपराधीनसमस्तव्यापारयुक्तो भौमनिकेतनकुटीरादिषु

1. G1 आत्मभोगेन
*. G1 omits upto this
2. G1 omits तेषां......विद्यमानत्वात्
3. G1 उक्त:
4. T1 यजेत्



'காலசக்ரம், ஜகச்சக்ரம், யுகசக்ரம் ஆகிய யாவற்றையும் பகவானான கேஶவன் தன்னுடைய ஸங்கல்பத்தால் எப்பொழுதும் சுழற்றிக் கொண்டேயிருக்கிறான்' [?]

என்று வசநமிருப்பதால். உபாஸகர்களுடைய ஹ்ருதயத்தில் திருமேனியோடு கூடியவனாக அவர்களுக்கு இனிய பற்றுக் கோடான த்யானிக்கப்படும் வஸ்துவாகவும், அவர்களைக் காப்பவனாகவும் இருத்தலும் பகவானுடைய அந்தர்யாமித்வம் ஆகும்.

'என்னுடன் என்றும் கூடியிருத்தலை விரும்புபவர் களாய் பக்தி செய்கிறவர்களுக்கு ப்ரீதியுடன் கூட என்னை அடைவிக்கும் அறிவைக் கொடுக்கிறேன்'
[கீதை 10-11]

இத்யாதிகளில் சொல்லப்பட்டபடி பக்திபண்ணப்படும் தன்மை, உறுதியான புத்தியை உண்டாக்குதல், தத்விரோதியான அஜ்ஞாநத்தை அழித்தல் முதலிய ப்ரயோஜநங்கள் பகவானுக்கு அந்தர்யாமித்வத்தால் ஏற்படுகின்றன. உபாஸகனுடைய ஹ்ருதயகமலத்தில் இருத்தலே அந்தர்யாமித்வம் என்று சுருக்கமாகச் சொல்லப்பட்டதாகிறது.

அர்ச்சாவதாரமாவது–

'தனக்கு ப்ரீதிகரமாய் அழகியதாய் அருளுடைய முகம், கண்கள் ஆகியவற்றையுடைய விஷ்ணுவினுடைய ப்ரதிமையை தங்கம், வெள்ளி முதலியவற்றால் செய்து அதை ஆராதிக்க வேணும், வணங்க வேணும், அதை ஜபிக்க வேணும், அதைச் சிந்திக்க வேணும். இப்படிச் செய்பவன் தோஷங்களிலிருந்து நீங்கியவனாய் அந்த ப்ரஹ்ம ரூபியையே அடைகிறான்.' [விஷ்ணுதர்மம் 103-16,17]

என்று ஶௌநகரால் சொல்லப்பட்டபடி அடியவர்களுக்கு விருப்பமான பொருளில் உட்புகுந்து, அதில் பரமபதத்திலுள்ள திருமேனியில் பண்ணும் ஆதரத்தைப் [விருப்பத்தைப்] பண்ணி அடிவர்களுக்கு அடங்கியனவனாகத் தன்னுடைய எல்லாச் செயல்களையுமுடையவனாய், பூமியிலுள்ள வீடுகள், ஆஶ்ரமங்கள், முதலியவற்றில் தேஶம், காலம், அதிகாரம்

देशकालाधिकारादि[1]नियमानपेक्षं[2] सन्निदधान:[3] समवतरति भगवान्। अर्चावतारस्य परव्यूहादि विग्रहद्रव्यव्यावृत्त द्रव्यमयत्वं तत्तद्विग्रहसमानसन्निवेशत्वं [4]तद्वत् ईश्वराभिमान विषयत्वं[4] तत्समानाधिकृत नाम रूप अभिमान[5]योगित्वं[5] तद्वत् अर्चनस्नपनादिभि: अखिलफलप्रदानशीलत्वं तथाविध ज्ञानशक्त्यादिपूर्णत्वे –सत्यपि स्थितिशयनादिषु आश्रितपराधीनत्वं अतिशयसमेतत्वं तत्तदपेक्षित गृहादि स्थानाभ्युपगमेन तत्तद्दर्शनादर[6] काल प्रतीक्षण पारवश्येन [7]तत्तदनादिभोग[7] सापेक्षत्वं च अनुसन्धेयम्। [8]तस्मात् रुचिजनकत्वं शुभाश्रयत्वं अशेषलोकशरण्यत्वं अनुभाव्यत्वं च अर्चावतारे परिपूर्णम्।[8] तदिदं आश्रित[9]पारतन्त्र्यं भगवत:[9] शास्त्रेषु प्रतिपाद्यते।

"अर्चावतार: सर्वेषां बान्धवो भक्तवत्सल:।
स्वत्वं आत्मनि सञ्जातं स्वामित्वं ब्रह्मणि स्थितम्॥
इति व्यवस्थितेचापि ममायं केशवस्त्विति।
ममायं राम इत्येव देवं परशुलाञ्छन:॥
ममायं वामनो नाम नरसिंहाकृति: प्रभु:।
वराहवेषो भगवान् नरो नारायणस्तथा ॥

1. G2 omits आदि
2. T1 अपेक्षया
3. G2 सायान्निधान:
4. G1 तदीयप्रीतिविषयत्वं
5. G2 भोगत्वं
6. G2 तत्तदनादर
7. G2 तत्तत्समर्पित पत्र फलाशनादि
8. T1 G2 omits and G1 breaks here.
9. G2 पराधीन्यं सौलभ्यादिकं च



முதலிய நியமங்களைப் பாராமல் ஸந்நிதி [வாஸம்] பண்ணிக் கொண்டு அவதரிக்கிறான் பகவான். பரத்வம் வ்யூஹம் முதலிய நிலைகளில் அவனுடைய திருமேனிகள் அப்ராக்ருத த்ரவ்யத்தாலானவை. ஆனால் அர்ச்சாவதாரத்துக்கு அந்த த்ரவ்யத்திலிருந்து வேறுபட்ட த்ரவ்யமயத்வம் உள்ளது. அந்த விக்ரஹங்களுக்கு ஸமாநமான அமைப்பு, அவற்றைப் போலவே ஈஶ்வரனுடைய அபிமாநத்துக்கு விஷயமாக இருக்கும் தன்மை, அவற்றுக்கு ஸமாநமாகவும் அதிகமாகவும் உள்ள பெயர், உருவம் அபிமாநம் ஆகியவற்றையுடைமை, அவற்றைப் போலவே அர்ச்சநம் [பூஜை], ஸ்நாநம் முதலியவற்றால் எல்லாப் பலங்களையும் கொடுக்கும் தன்மை, அவற்றைப் போலவே ஜ்ஞாநம் ஶக்தி முதலிய குணங்கள் நிறைந்துள்ளமை ஆகியவை உள்ளன. ஆயினும் செயல், ஶயநம் முதலியவற்றில் அடியவர்கள் இட்டவழக்காயிருத்தல், மேன்மையுடன் இருத்தல், அந்தந்த பக்தர்கள் விரும்பும் இல்லம் முதலிய ஸ்தாநத்தை ஒப்புக்கொண்டு அவர்களுடைய தர்ஶநம், அவர்கள் ஆதரவு காட்டும் காலம் ஆகியவற்றை எதிர்பார்த்துக் கொண்டு பாரவஶ்யத்துடன் அவரவர்கள் கொடுக்கும் அன்னம், இனிமையான பொருள்கள் ஆகியவற்றை எதிர்பார்த்திருத்தல் ஆகிய குணங்களக் அர்ச்சைக்கு அநுஸந்தேயங்கள் [அறியப்பட வேணும்], எனவே ஆசையை விளைவித்தல், இனிய பற்றுக்கோடாக இருத்தல், அனைத்துலகுக்கும் ஶரண்யனாக இருத்தல், அநுபவிக்கத் தக்கவனாக இருத்தல் ஆகிய குணங்கள் அர்ச்சாவதாரத்தில் பரிபூர்ணமாயுள்ளன. பகவானுடைய இந்த அடியவர்களுக்கு ஆட்பட்டிருத்தலானது ஶாஸ்த்ரங்களில் கூறப்படுகிறது.

"பக்தர்களிடம் அன்புடைய அர்ச்சாவதாரம் எல்லாருக்கும் உறவானது. உடைமைப் பொருளாயிருக்கும் தன்மை ஆத்மாவிலுள்ளது, உடையவனாயிருக்கும் தன்மை என்னிடம் [பகவானிடம்] உள்ளது.

இப்படி நிலைபெற்றிருந்தாலும்கூட இந்தக் கேஶவன் என்னுடையவன் என்றும், என்னுடையவன் பரசுவை தரித்த தேவனான ராமன் என்னுடையவன் என்றும்,

तथा कृष्णश्च रामश्च ममायं इति निर्दिशेत्।
मद्ग्रामवासी भगवान् ममैवेति च धीर्भवेत्।
चिन्तयेच्च जगन्नाथं स्वामिनं परमार्थतः।
अशक्तमस्वतन्त्रं च रक्ष्यंचापि जनार्दनम्॥
तदिच्छया महातेजाः भुङ्क्ते वै भक्तवत्सलः।
स्नानं पानं तथा यात्रां कुरुते वै जगत्पतिः॥
स्वतन्त्रः स जगन्नाथोऽप्यस्वतन्त्रो यथा तथा।
सर्वशक्तिः जगद्धातप्यशक्त इव चेष्टते॥
सर्वान्कामान्दधत्स्वाम्यप्यशक्त इव लक्ष्यते।
अपराधानभिज्ञः सन् सदैव कुरुते दयाम्॥
अर्चावतारविषये [1]मयाप्युद्धेशतस्तथा।
उक्तागुणा न शक्यन्ते वक्तुं वर्षशतैरपि॥"

(विष्वक्सेनसंहिता)

इति चतुर्विध पुरुषार्थसाभिलाष अशेषसमाश्रयणीयत्वं अशेषलोकशरण्यत्वं[1] स्वस्वामिभावं विपर्ययं कृत्वा अज्ञवत् अशक्तवत् अपूर्णवत्[2] अस्वतन्त्रवत् निवसन् अपारकारुण्यमहाणवनिरन्तरविहरण प्रीतिपारवश्येन जोषमासीनः सर्वापेक्षितफलविततिमपि अनवरतं वितरति। ईश्वरस्य ज्ञातृत्वयुक्तं नियन्तृतैकस्वभावत्वं लक्षणम्। सर्वं आचार्यप्रसादपरिफलितं अभिहितं पुष्कलं॥

---

1. G2 omits मया......शरण्यत्वं 2. T1 omits अपूर्णवत्



வாமநன், நரஸிம்ஹ வடிவையுடைய ப்ரபு, வராஹ வேஷத்திலுள்ள பகவான், நரன், அப்படியே நாராயணன் ஆகியோரும் என்னுடையவர்கள் என்றும்,

அப்படியே க்ருஷ்ணனும், ராமனும் என்னுடையவர்கள் என்று சொல்ல வேணும். என்னுடைய க்ராமவாஸியான பகவான் என்னுடையவனே என்ற புத்தியை உண்டாகும்.

உண்மையில் ஜகந்நாதனாகவும் ஸ்வாமியாகவும் உள்ள ஜநார்தனனை, ஶக்தி அற்றவனாகவும், ஸ்வாதந்த்ர்யம் அற்றவனாகவும், ரக்ஷிக்கப்படுபவனாகவும் நினைக்கச் செய்யும்.

பக்தன் விரும்புகின்றபடி மஹாதேஜஸ்வியான பக்தவத்ஸலன் உண்கிறான். ஸ்நாநம், பாநம், யாத்ரை ஆகியவற்றையும் ஜகத்பதியானவன் பக்தனுடைய விருப்பப்படியே செய்கிறான்.

அந்த ஜகந்நாதன் ஸ்வதந்த்ரனாக இருந்தாலுங் கூட ஸ்வதந்த்ரமற்றவனைப் போலவே நடக்கிறான். எல்லா ஶக்திகளையும் உடையவனாய் ஜகத்துக்கு ஸ்ருஷ்டி கர்த்தாவாயிருந்துங் கூட ஶக்தி அற்றவனைப் போல் நடந்து கொள்கிறான்.

வேண்டியவற்றையெல்லாம் கொடுக்கும் ஸ்வாமியாக இருந்தபோதிலும், சக்தி அற்றவனைப் போலப் பார்க்கப்படுகிறான். அபராதங்களை அறியாதவனாக எப்பொழுதும் தயையையே செய்கிறான்.

அர்ச்சாவதாரவிஷயத்தில் ஸர்வஜ்ஞனான என்னாலுங் கூடச் சுருக்கமாகச் சில குணங்கள் சொல்லப்பட்டன. நூற்றுக்கணக்கான வருடங்கள் ஆனாலும்கூட அர்ச்சாவதாரத்தின் பெருமைகளைப் பேசித் தலைக்கட்ட முடியாது."

[விஷ்வக்ஸேநஸம்ஹிதை]

என்று [பகவானாலேயே] கூறப்பட்டபடி நான்குவகை புருஷார்த்தங்களையும் விரும்பும் எல்லாராலும் கிட்டப்படும் தன்மை, எல்லா உலகுக்கும் ஶரண்யனாயிருக்கும் தன்மை, தான் ஸ்வாமி, சேதனன் அடியவன் என்ற நிலை மாறி, ஞானமற்றவனைப் போலவும் ஶக்தி அற்றவனைப் போலவும் இருந்து கொண்டு அபாரகாருண்யமாகிற பெருங்கடலில் நிரந்தரமாக விளையாடுவதாலுண்டான ப்ரீதி பாரவஶ்யத்தால் மகிழ்ந்தவனாய் எல்லோருக்கும் வேண்டிய பலன்களை எப்பொழுதும் கொடுக்கிறான். ஈஶ்வரனுக்கு ஜ்ஞாத்ருத்வ ப்ரயுக்தமாக வரும் நியந்தாவாயேயிருக்கும் தன்மை லக்ஷணமாகும். இங்குக் கூறப்பட்ட நிறைந்த அர்த்தங்கள் யாவும் ஆசார்யருடைய அருளால் அறிந்தவையாகும்.

अतोऽयमीश्वरः सर्वहेयप्रतिभटः तथा[1]।
[2]अपरिच्छिन्न एवैषः[2] देशात् कालाच्च वस्तुतः॥
ततः सर्वगतो नित्यो निखिलात्मविशेषणः।
ज्ञानानन्दस्वरूपोऽपि ज्ञानशक्तिबलादिभिः॥
कल्याणगुणरत्नौघैः अनन्तैः परिभूषितः।
समस्त जगतां सर्गस्थिति[3]संयम[3]कारणम्॥
अखिलाश्रयणीयोऽयं अखिलार्थप्रदायकः।
रम्यसौन्दर्य सौगन्ध्य लावण्यादिगुणोत्तमैः।
जाज्वल्यमानकल्याणनित्यदिव्यात्मविग्रहः॥
श्रीभूमिनीलाधिपतिः चिदचित्तत्त्वनायकः।
समस्तशब्द[4]वाच्यश्च[4] [5]विना स्वामी च[5] हेतुना।
एवं वेदान्ततत्त्वज्ञैः वैकुण्ठपतिरीरितः॥
[6]सूनुना कृष्णमिश्राणां लोकाचार्येण धीमता।
प्रमाणोपस्कृतः तत्त्वविवेकः संप्रदर्शितः॥[6]
[7]इति श्रीमल्लोकाचार्य कृतौ तत्त्वविवेके
ईश्वरनिरूपणाधिकारः तृतीयः।[7]
तत्त्वविवेकः संपूर्णः।[8]

---

1. G2 स्थितः
2. G1 अपरिच्छेद अगोचरश्च
3. G2 संहार
4. G2 अभिधेयः
5. G2 सर्वदेहत्व
6. G2 This sloka is written after the colophone
7. G2 इति तत्त्वविवेके ईश्वरस्वरूप निरूपणाधिकारः तृतीयः।
8. G2 omits
   T1 adds at the end श्रीमल्लोकाचार्य गुरवे नमः। श्रीमत वरदगुरवे नमः॥[7]



எனவே இந்த ஈஶ்வரன் எல்லாத் தாழ்ச்சிகளுக்கும் எதிர்த்தாட்டானவனாகவுள்ளான். தேஶத்தாலும், காலத்தாலும், வஸ்துவாலும் அளவிடமுடியாதவனாகவே உள்ளான்.

எனவே எங்கும் வ்யாபித்தவனாய் நித்யனாய் எல்லா ஆத்மாக்களையும் விஶேஷணமாகக் கொண்டவனாக உள்ளான். ஜ்ஞாநாநந்த ஸ்வரூபனா யிருந்தாலுங்கூட ஜ்ஞாநஶக்திபலாதிகளான

அநந்தங்களான கல்யாண குணரத்நக் கூட்டங்களால் பரிபூஷிதனாக [அலங்கரிக்கப்பட்டவனாக] உள்ளான். எல்லா ஜகத்துக்களினுடையவும் உத்பத்தி–ஸ்திதி–லயகாரணனாகவும் உள்ளான்.

எல்லாருக்கும் அடையத்தக்கவனாகவும் எல்லாப் புருஷார்த்தங்களையும் கொடுப்பவனாயும் கவரத் தக்க ஸௌந்தர்யம் – ஸௌகந்த்யம் – லாவண்யம் முதலிய உத்தம குணங்களால் ப்ரகாஶிக்கக் கூடிய மங்களமான தாய், நித்யமானதாய் அப்ராக்ருதமானதாயுள்ள தன்னுடைய திருமேனியையுடையவனாயுமுள்ளான்.

ஸ்ரீதேவிபூமிதேவி நீளாதேவிகளுக்குப் பதியாய், சித், அசித்து என்ற தத்த்வங்களுக்கு நாயகனாய் எல்லாச் சொற்களாலும் கூறப்படுபவனாய், ஹேது [காரணம்] இல்லாமலே எல்லாவற்றுக்கும் ஸ்வாமியாயிருப்பவன் என்று வேதாந்த தத்த்வத்தை அறிந்தவர்களால் வைகுண்டபதியானவன் சொல்லப்பட்டான்.

க்ருஷ்ணமிஶ்ரரின் [வடக்குத் திருவீதிப் பிள்ளையின்] திருக்குமாரரான புத்திமானான லோகாசார்யரால் ப்ரமாணங்களைப் பின்பற்றி, தத்த்வவிவேகமானது நன்கு வெளியிடப்பட்டது.

**ஸ்ரீமல்லோகாசார்யர் அருளிச் செய்த**
**தத்த்வவிவேகத்தில் ஈஶ்வரஸ்வரூபஶோதநாதிகாரம் என்ற**
**மூன்றாம் அதிகாரம் [முற்றியது]**

**தத்த்வவிவேகம் முற்றியது**

# பதிப்பாசிரியரைப் பற்றி.....

ஸ்ரீ உ.வே. மஹாவித்வான் ப்ரதிவாதிபயங்கரம் அண்ணங்கராசார்ய ஸ்வாமியால் 'ஆமுதல்வன்' என்று கடாக்ஷிக்கப் பெற்று, 'மேதாவிமணி' என்ற விருதும் வழங்கப் பெற்றவர்.

ஸ்ரீ உ.வே. ஸாரார்த்தச் சொல்லழகர் சதாபிஷேகம் கோவிந்த நரஸிம்ஹாசார்ய ஸ்வாமி, ஸ்ரீ உ.வே. வாகம்ருதவர்ஷீ வேளுக்குடி வரதாசார்ய ஸ்வாமி, ஸ்ரீ உ.வே. திருமலை அனந்தாண்பிள்ளை கிருஷ்ணமாசார்ய ஸ்வாமி முதலிய வித்வான்களிடம் பகவத்விஷயம், ஸ்ரீபாஷ்யம் முதலிய ஸம்ப்ரதாயநூல்களை வரியடைவே கற்றவர்.



நாலாயிர திவ்யப்பிரபந்தப் பாசுரங்களை ஸ்ரீமத்பரமஹம்ஸ வானமாமலைமடம் 30ம் பட்டம் சடகோபராமானுஜ ஜீயர்ஸ்வாமி, ஸ்ரீ உ.வே. காவல்கழனி அனந்தாசார்ய ஸ்வாமி முதலியோரிடம் கற்று, திருவல்லிக்கேணி ஸ்ரீபார்த்த ஸாரதிப் பெருமாள் திருக்கோயிலில் அனுதினமும் அத்யாபக கைங்கர்யம் செய்து வருவதோடல்லாமல், கோஷ்டியின் செயலாளராகவும் இருந்து வருபவர்.

அத்திருக்கோயிலில் இருபது ஆண்டுகளுக்கும் மேலாகக் கட்டியம், புராண படனம், சுப்ரபாதம் முதலிய கைங்கர்யங்களைச் செய்து வருபவர்.

இருபத்து ஏழு ஆண்டுகளுக்கும் மேலாக கீதாசார்யன் பத்திரிகையின் ஆசிரியராக இருந்து சிறந்தமுறையில் நடத்தி வருபவர்.

இருபத்தைந்து ஆண்டுகளுக்கும் மேலாக பாரததேசமெங்கிலும் ஸம்ப்ரதாய உபந்யாஸங்களும், வானொலி, தொலைக்காட்சிகள் மூலம் ஸம்ப்ரதாய நிகழ்ச்சிகளும் வழங்கி வருபவர்.

ஸ்ரீமத் பரமஹம்ஸ கலியன் வானமாமலை ஜீயர் ஸ்வாமியால் 'கம்பீரவாக்வர்ஷீ' எனும் விருதளிக்கப் பெற்றவர்.

சென்னைப் பல்கலைக்கழகத்தில் பிஎச்.டி. மற்றும் டி.லிட் பட்டங்களைப் பெற்றவர். பத்தாண்டுகள் சென்னை விவேகாநந்தா கல்லூரியில் வடமொழிப் பேராசிரியராகப் பணியாற்றியவர். சென்னைப் பல்கலைக் கழக வைணவத் துறை தொடங்கப் பெற்றது முதல் அத்துறையின் பேராசிரியராகப் பணியாற்றி வருபவர்.

வைணவ உலகமே பாராட்டிப் போற்றும் வகையில், "வைணவ ஆசார்யர்களின் வாழ்வும் வாக்கும்" என்ற நூலை எழுதியவர்.